உ

சிவமயம்.

# பிரபுலிங்கலீலை.

ர்ந்தசிதாநந்தவீரசைவசமையாசாரியராகிய

துறைமங்கலம்

## சிவப்பிரகாசசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளியது.

இஃது,

உறையூர்

மதுரைநாயகமுதலியாரவர்கள்

குமாரர்

**சொக்கலிங்கமுதலியாரவர்களால்**

பார்வையிடப்பட்டு

திருப்பரங்குன்றம்

**அருணாசலசரணர்**

குமாரர்

**நாராயணசரணரால்**

தஞ்சை

"ஸ்ரீ கிருஷ்ணவிலாச அச்சியந்திரசாலையில்,

பதிப்பிக்கப்பட்டது:

விகாரி-௵.

உ

சிவமயம்.

துறைமங்கலம்.

# சிவப்பிரகாசசுவாமிகள் வேலையசுவாமிகள் கருணைப்பிரகாச சுவாமிகளென்னும் மூவர்சரித்திரச்சுருக்கம்,

---

தொண்டைமண்டலத்திலே, முத்திநகரம் ஏழனுள் ஒன்றாய் விளங்குகின்ற காஞ்சீபுரத்திலே, ஏறக்குறைய முன்னூறு வருடங்களுக்குமுன் தொண்டைமண்டல வேளாளர்க்குத் தீக்ஷாகுருவாகக் குமாரசுவாமிப் பட்டாரகர் என்பவர் ஒருவரிருந்தார். அவர் திருக்கார்த்திகைத் தரிசனத்திற்காகத் திருவண்ணாமலை யாத்திரைக்குப்புறப்பட்டு ஒருநாள், வழியில் ஒரு நந்தனவனத்திற்றங்கிச் சிவபூசைமுடித்து, அன்று சாயங்காலமே தாங்குறித்ததலத்தையடைந்து, அங்குள்ள ஈசானிய தீர்த்தத்திலே அநுட்டானஞ் செய்துகொண்டு, தமது பூசைப்பேடகத்தைப் பரிசனர்களிடத்துவினவ? அவர்கள் பகலிற்றங்கியிருந்த விடத்தில் வைத்து மறந்துவந்ததாக அச்சத்தோடு விண்ணப்பஞ்செய்தனர். அதுகேட்டு மிகமனக்கலக்கமுற்று, அப்பரிசனர்களோடு அவ்வூர் மனிதனொருவனையுஞ்சேர்த்து பகற்றங்கியிருந்த நந்தனவனம் வரையும் பரிசோதித்து வரும்படி அனுப்பிவிட்டுத் தாம் ஓரிடத்திற்போய், நம்முடைய ஆன்மார்த்தமாகிய உடையவரைவிட்டுப்பிரியும்படி நேரிட்டதே என்னும் வருத்தத்தால் அன்றிரவுமுழுதும் நித்திரையின்றிச் சிவத்தியானஞ் செய்துகொண்டிருந்தனர் அத்தருணத்தில், அவரது சிவபுண்ணிய முதிர்ச்சியினாலே திருவண்ணாமலையிலெழுந்தருளியிருக்கும் சிவபெருமான் ஓர் சங்கமத்திருவுருவங்கொண்டு அவரிடத்திற்கெழுந்தருளி, தம்மெதிர்வந்து தமக்கு நிகழ்ந்த ஆபத்தைத்தெரிவித்து வணங்கிநின்ற அவர்மீது கிருபாநோக்கஞ்செய்து, "நீர் அங்கம்வேறு இலிங்கம்வேறாக இருந்தமையால் இவ்வாறு பிரியும்படி நேரிட்டது, இலிங்காங்கசம்பந்தியாயிருந்தால் இவ்வண்ணம் நேரிடுதலியலாது, உமது பூசைப்பேடகம் நாளை உதயத்தில் வந்துசேரும். நீர் இதுமுதல் இலிங்கதாரணஞ்செய்துகொள்ளும் " என்று அநுக்கிரகிக்க; அவர் இச்செய்கை நமது சீடர் பந்துக்கள் முதலானவர

களுக்கு விரோதமாக இருக்கும் என்பதைத் தெரிவித்து நின்ற னர். அதுகேட்ட சிவபெருமான்" அந்தச்சீடர்முதலியோரால் பெறப்படும் பயன் சிறிதுமில்லை. நமது கட்டளைப்படி நீர் சிவ லிங்கதாரணஞ் செய்துகொண்டால் உமக்கு மூன்று புத்திரர்க ளும் ஒரு புத்திரியும் பிறப்பார்கள். அவர்களால் இம்மைமறு மையின்பங்களும் முத்தியுஞ்சித்திக்கும். ஆதலால், இவ்வா லயத்திற்குத் தெற்குவீதியிலுள்ள மடத்திலிருக்கும் குருதேவ ரிடத்திலே சிவலிங்கதாரணதீக்ஷை செய்துகொள்ளும்" என்று வற்புறுத்தி ஆஞ்ஞாபித்து, வீரசைவசமயாசார நெறிகளையும் போதித்து, அவ்வாறே குருதேவருக்குங் கட்டளையிட்டு மறை ந்தருளினர்.

மறுநாட்காலையில், சிவபெருமானது திருவாக்கின்படியே பூசைப்பேடகம் வரப்பெற்று, ஸ்ரீ குருதேவராலனுப்பப்பட்ட அடியார்களோடு மடாலயத்தையடைந்து குருதேவரைத் தரிசி த்து, அவராலே சிவலிங்கதாரணதீக்ஷை செய்யப்பெற்று, திரு க்கார்த்திகைத்திருவிழா நிறைவேறியபின் குருதேவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு காஞ்சீபுரத்திற்கு வந்து, தமது அநு ட்டானப்படியே சீடர்களுக்குஞ் சிவலிங்கதாரணதீக்ஷை செய் துகொண்டிருந்தனர். அக்காலத்திலே, அவருக்கு அண்ணும லையார் அநுக்கிரகித்தபடியே மூன்று புத்திரர்களும ஒரு புத்தி ரியும் அவதரித்தார்கள். அவர்கள் முறையே சிவப்பிரகாசம வேலாயுதம், கருணைப்பிரகாசம், ஞானம்பிகை என்று நாமகர ணமுடையராய் முதல்மூவரும் கல்வியிற்பயின்று வருங்காலத் தில், தந்தையாராகிய குமாரசுவாமிஐயர் சிவலிங்கவைக்கியமா யினர்.

பின்பு மூத்தவராகிய சிவப்பிரகாசசுவாமிகள் தமது சகோ தரர்களை அழைத்துக்கொண்டு திருவண்ணாமலைக்குப் போய், குருதேவரைத்தரிசித்து அநேகவாசஞ்செய்துகொண்டு, தமது கல்விமுயற்சியிற்றளராது வாழும் நாள்களுள் ஓர்நாள், அந்தச் சோணசைலத்தை பிரதக்ஷணஞ்செய்து வரும்போதே சோண சைலமாலையெனப் பெயரிய நூறுசெய்யுள்களாற் ஸ்தோத்திரம் பண்ணினர். பின்னும் பேரிலக்கணங்களைப் பெரிதுங் கற்கவி ரும்பித் தமது சகோதரர்களுடனே தக்ஷிணதேசத்திற்குப் பிர யாணமுற்று, வாலிகண்ட புரத்திற்குத் தென்பாகத்திலுள்ள துறைமங்கலம் என்னும் நகரத்தைச்சார்ந்த ஒரு நந்தனவனத் தில் சிவபூசை செய்துகொண்டிருந்தனர். அக்காலத்தில் அக் கிராமாதிபதியாயும் சிவலிங்கதாரியாயும் குருலிங்கசங்கமபத்தி

யிற் சிறப்புற்றவராயும் விளங்கிய அண்ணாமலை ரெட்டியாரென்பவர், சிவப்பிரகாசசுவாமிகள் வரவைக்கேள்வியுற்று, அங்கடைந்து தரிசித்தமாத்திரத்தில் அவரிடத்தே அநுக்கிரகம்பெற விரும்பி அடிமைபூண்டு, "சுவாமீ, தேவரீர் இவ்விடத்தில் வாசஞ்செய்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்து, அவரையுடன்படுத்தித் தங்கள் குருவாகிய சென்னவசவையர் மடத்திற்கு மேற்றிசையில் ஒரு திருமடங்கட்டி, அதில் சுவாமிகளை எழுந்தருளுவித்து, அகோராத்திரம் பிரிவின்றி அணுக்கத்தொண்டராயமர்ந்திருக்க; சிவப்பிரகாசசுவாமிகள் அவருக்குச் சன்மார்க்கங்களைப் போதித்துக்கொண்டு, இரண்டு வருஷம் வரையில் அங்கே எழுந்தருளியிருந்தார்.

அதன்பின்பு தாங்கொண்டகருத்தை நிறைவேற்றவிரும்பி தக்ஷிணதேசத்திற்குச்செல்லல்வேண்டுமென்பதை அவருக்கறிவுறுத்தித் திருநெல்வேலியையடைந்து, பொருனை நதிதீரத்திலிருக்கின்ற சிந்துபூந்துறையில் தருமபுரவாதீனத்து வெள்ளியம்பலவாண சுவாமிகள் இலக்கண இலக்கியங்களில் அதிவல்லவர்களாய் இருக்கின்றார்கள் என்பதைக் கேள்வியுற்று அவ்விடத்திற் சென்று, சுவாமிகளைக்கண்டு, அவர்களாலுபசரிக்கப்பெற்று,தாம் இலக்கணங்கற்கவேண்டி வந்தமையைத் தெரிவித்துக்கொண்டனர். அச்சுவாமிகள் சிவப்பிரகாசசுவாமிகளுடைய இலக்கியப்பயிற்சியை அறிதற்பொருட்டு கு, என்பதை முதற்கொண்டு ஊருடையான், என்பதை இடைப்பெய்து கு, என்பதையே ஈற்றினும் கொண்டுமுடியும்படி ஒருவெண்பாப் பாடுக என்றுகூற; சுவாமிகள்

> குடக்கோடுவானெயிறுகொண்டார்க்குக்கேழன்
> முடக்கோடுமுன்னமணிவார்க்கு—வடக்கோடு
> தேருடையான்றெவ்வுக்குத்தில்லைதோன்மேற்கொள்ள
> லூருடையானென்னுமுலகு.

என்னும் வெண்பாவைத் திருவாய்மலர்ந்தருளினர். மேலை வெண்பாவினுள் வடக்கோடு தேருடையான் என்று அமைத்தமையை சுவாமிகள்வியந்துபாராட்டி, சிவப்பிரகாசசுவாமிகளைத் தழுவித் தம்மருகிருத்தி, அவர் சகோதரர்களாகிய வேலையசுவாமிகள், கருணைப்பிரகாசசுவாமிகளென்னும் இருவருக்கும் ஒருபக்ஷத்துள் பஞ்சலக்ஷணங்களையும் பாடஞ்சொல்லி முடித்தார், அது கண்ட சிவப்பிரகாச சுவாமிகள் அண்ணாமலை ரெட்டியாரென்பவர் தங்களுக்குவழிச்செலவிற்குபகரித்தமுந்நூறுபொன்னையும் குருதக்ஷிணையாகவைத்து உபசரிக்க; சுவாமிகள். இது,

நமக்கு வேண்டுவதில்லை. நம்மைத்தூஷித்தலையே இயல்பாகக் கொண்டு திருச்செந்தூரில் வசிக்கும் தமிழ்ப்புலவனொருவனைத் தங்கள் வாயிலாக வெற்றிகொண்டு அவர்வந்து நம்மை வணங்கும்படிசெய்து கோடலே குரு தக்ஷிணையாகும்'' என்றுமறுத் தருளினார்.

அவர்கருத்தறிந்த சுவாமிகள் அதற்குடன்பட்டு, அவர் மாணாக்கரோடும் திருச்செந்தூருக்குப்போய், முருகக்கடவுளை த்தரிசனஞ்செய்து பிரதக்ஷணம் வரும்போது; அச்சுவாமிகளாற் சுட்டப்பட்ட தமிழ்ப்புலவர், எதிர்ப்பட்டுச் சிவப்பிரகாச சுவாமிகளை யாவரொன்று அவருடன் வந்த மாணாக்கரிடத்திற்றுனே வினவி, மேற்படி சுவாமிகளிடத்திற் பாடங்கேட்டசுவாமிகள் என்பதை அறிந்துகொண்டு, அவர்களைத் தமதுவழக்கப்படியே தூஷிக்கத்தலைப்பட்டார். அப்பொழுது சிவப்பிரகாசசுவாமிகளுக்கும் புலவருக்கும கலகநேரிட; புலவர்சுவாமிகளை நூதனவகையாற்பாடி வெற்றிபெறுவோமெனத்துணிந்து "நாமிருவரும் நிரோட்டகயமகம் பாடுவோம். முன்னர்ப் பாடிமுடித்தவருக்கு அஃதியலாதார் அடிமையாவோம்'' என்று வாக்குத்தத்தஞ்செய்தார். சுவாமிகள் தங்கருத்து நிறைவேறும் வாயில் இதுவே என்று கருதி அதற்கிசைந்தருளி, அவரோடு பாடத்தொடங்கி உடனே அத்தலத்து முருகக்கடவுண்மீது நிரோட்டகயமகவந்தாதித்தொடையாக முப்பது கட்டளைக்கலித்துறை பாடிமுடித்தருளினார். அதுகண்டு புலவர், தாம் ஒரு செய்யுளேனும் பாடிமுடியாமையையுணர்ந்து, சுவாமிகளுடைய திருவடிகளைவணங்கி, '' அடிமையாயினேன் '' என்று விண்ணப்பஞ்செய்துகொண்டார் சுவாமிகள் தமதடிமையாயமைந்த அப்புலவரை ஆதீனத்திற்கழைத்துவந்து தாம போதகாசிரியராகக்கொண்ட அச்சுவாமிகளுக்கு, அடிமையாக்கிவிட்டார். சுவாமிகள் திருவுளமகிழ்ந்து சிவப்பிரகாச சுவாமிகளைப்பார்த்து, "தாங்கள் பாடியசெய்யுளிற் குறித்தபடியே சிதம்பரத்திற் சிலகாலம் வாசஞ்செய்தருளுக '' என்று விடைகொடுத் தனுப்பியருளினார்

சுவாமிகள் அவ்விடத்தினின்றும் நீங்கி சிவஸ்தலங்கடோறுஞ்சென்று சுவாமிதரிசனஞ்செய்து, துறைமங்கலத்தைச்சார்ந்து முன்போலவே அண்ணாமலை ரெட்டியாரென்பவருக்குத் திருவருள்பாலித்து, அவரது வேண்டுகோளின்படி அவராளுகையுளமைந்த, வாலிகண்டபுரத்தின் வடமேற்பாகத்துள்ள திருவெங்கைமாநகரத்திலே, தம்பொருட்டு அவராற்கட்டப்பட்ட திருமடத்தில் வசிக்குநாளில், அவ்வூர்ப்பிடாரியாரது உற்சவ

இரதத்தால், அடியார்களுக்குபயோகமாகத திருமடத்தெதிரி லிருந்த முருங்கைமரம் அழிந்தமைகண்டு

திருந்துதமிழிலக்கணவைந்திணைக்கோவைவிருத்தகிரிச
செல்வர்க்கோதும், பெருந்தகைமையுடையம்யாம்விடுமோலை
வெங்கணூரிப்பிடாரிகாண்க,விரும்புவியிலொருமுருங்கைக்கொ
மபொடியாமற்காத்திங்கிருக்குநீரம், முருங்கைதனைவேரோடுங்
களைந்தனையென்று னுனக்குமுறைநன்றோமோ.

என்னும் திருவிருத்தத்தை அருளியமாத்திரத்தே,அவ்விர் தம அழிந்தொழிந்தது, அதன்பின் சிலகாலமங்கிருந்து, அத் தலத்திலுள்ள பழமலைநாதர்மீது திருவெங்கைக்கோவை, திரு வெங்கைக கலம்பகம, திருவெங்கையுலா, திருவெங்கையலங் காரம என்னும் நான்குபிரபந்தங்களை அருளிச்செய்து, பின்பு துறைமங்கலத்தை யடைந்தார். தமதடியாராகிய அண்ணாமலை ரெட்டியாரென்பவர் சுவாமிகளை "தேவரீர விவாகம் செய்து கொள்ளவேண்டும்" என்றுபிரார்த்திக்க ; அதற்குத்தரமாக

சேய்கொண்டாருங்கமலச்செம்மலுடனேயரவப்
பாய்கொண்டானுமபரவும்பட்டீச்சுரததானே
நோய்கொண்டாலுங்கொளலாநூறுவயதளவிருந்து
பேய்கொண்டாலுங்கொளலாம்பெண்கொள்ளலாகாதே

என்னும் தரவு கொச்சகக் கலிப்பாவைப் பாடியருளிய சுவாமிகள் கருத்துணர்ந்து, பின்பு வேலையசுவாமிகளைப் பிரார்த்திக்க ; அவர் சிவப்பிரகாசசுவாமிகளுடைய கட்டளை எவவாறோமோ என்னுங்கருத்தால் உடன்படல் மறுத்தலென்னும் இரண்டுமின்றி மௌனராயினர். பின்னர் யாத்திரையினின்றும்வந்த கருணைப்பிரகாச சுவாமிகளிடத்தில் தமது வேண்டுகோளை விண்ணப்பஞ் செய்தமாத்திரத்தில், அவர் அதற்குத்தரமாக

நாணியென்பதைநாரியென்றுணாத்திடுநசையால்
வேணுவானதுவளைந்துபோய்ப்புகுந்ததுவென்றாற்
காணலாவதோருருவமெய்ந்நாரியைக்கண்டாற்
பூணுவார்மயல்காளையரென்பதும்புதிதோ.

என்னும் செய்யுளால் தமது கருத்தை உள்ளபடி தெரிவித்தனர். சிவப்பிரகாசசுவாமிகள் தம்பின்னோரிருவர்கருத்தையும் உணர்ந்து, அவர்களுக்குத் தாம்துறவறம் பூண்டமையைத் தெரிவித்து "மணம் புரிவித்து," இல்லறத்தை ஒழுங்குபெற நடத்தி வாழ்க என்று ஆசிர்வதித்து அவர்களை நிறுத்திவிட்டு, தம்மிடத் தன்பு பூண்ட அண்ணாமலை ரெட்டியாரோடு சிதம்

பாத்திற்கு எழுந்தருளி, அங்கே ஒரு திருமடங்கட்டுவித்து அதில் வீற்றிருந்து, சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு, சிவப்பிரகாசவிகாசம், தருக்கபரிபாஷை, சதமணிமாலை, நால்வர்நான்மணிமாலை என்னும் பிரபந்தங்களைச் செய்தருளினர்.

பின்பு சிதம்பரத்தை அருமையாகநீங்கி, பிறதலங்களையும் வணங்கி, திருக்காட்டுப் பள்ளியையடைந்து, சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு அங்கிருக்கும்போது, கல்வியறிவிற்சிறந்த ஒருபெண் வீதியினிடத்தே உப்புவிற்றலைதலைக்கண்டு, இறக்கமுற்றுத் திருநோக்கதீக்ஷை செய்து, அவளதுநல்லூழையும் பரிபக்குவத்தையு முணர்ந்து, அவளுடைய புலமையைப் பிறர்க்குப்புலப்படுத்தத் திருவுளங்கொண்டு

நிறைய வுளதோவெளிதோ கொளுவேம்
பிறையைமுடிக்கணிந்தபெம்மா—னுறையுந்
திருக்காட்டுப்பள்ளி திரிபாவாய்நீயிங்
கிருக்காட்டிப்பள்ளியெமக்கு.

என்னும் வெண்பாவைத் திருவாய்மலர்ந்தருளிய மாத்திரத்தே, அப்பெண்,

தென்னேங்குதில்லைசிவப்பிரகாசப்பெருமான்
பொன்னேங்குசேவடியைப்போற்றினே—மன்னேன்
றிருக்கூட்டமத்தனைக்குந்தெண்டனிட்டோந்தீராக்
கருக்கூட்டம்போக்கினேங்காண்.

என்னும் வெண்பாவைப் பாடிக்கொண்டு, தரிசனவேதியினெதிர்ப்பட்ட இரும்புபோல மனமுருகி மிக்கவிரைவொடு விழுந்து நமஸ்கரித்தெழுந்து கூப்பியகரத்தினளாய் நிற்க; அப்பெண்ணிற்கு உண்மைஞானமுண்டாகும்படி கிருபாநோக்கஞ் செய்துசிலகாலமங்கிருந்தனர்.

அதன்பின் சுவாமிகள் காஞ்சீபுரத்தைத் தரிசிக்கவிரும்பி, அண்ணாமலைரெட்டியாரோடும் பிரயாணப்பட்டு வரும்போது வழியிலே சாந்தலிங்க சுவாமிகளைக்கண்டு கலந்து, களிகூர்ந்தபின அவரை நோக்கித்தாங்கள் பேருரொன்னுக் திவ்வியதலத்தினின்றும் எதையுத்தேசித்து எழுந்தருளியதென்று வினவ; அவர் "திருக்கைலாயத்தில் சிவபெருமானருளியவாறே சமுத்திரத்தில் திருவவதாரஞ்செய்து வீரசைவசமயத்தை உலகத்தில் நிலைபெறநாட்டி முருகக்கடவுளது வரப்பிரசாதியாய் மயிலமலையில் விளங்கியிருந்த சங்குகன்னமொன்னுங் கணத்தலைவரது மாணக்கருட்சிறந்த சிவஞானபாலைய சுவாமிகளைத் தரி

சித்தல்வேண்டுமென்னும் காதலால் வந்தேன்,, என்றுரைத்த னர். பின்னர் இருவரும் களிகூர்ந்து பொம்மைய பாளையத்தைச் சமீபித்தவுடன் சாந்தலிங்கசுவாமிகள் சுவாமிகளைநோக்கி ,,நாமிருவரும் சிவஞான பாலையசுவாமிகளைத் தரிசிக்கவேணடி யிருப்பதால் அவர்கண்மீது சிலதோத்திரங்கள் பாடுக,, என்றுபிரார்த்திக்க; ,,நாம்நரஸ்துதி பண்ணுகிறதேயில்லை,, என்று மறுத்துவிட்டு சாந்தலிங்கசுவாமிகளோடு அவ்வூரிலுள்ள ஐயனார்கோயிலில் அன்றிரவு துயில்கொண்டார். அப்பொழுது முருகக்கடவுள் மயில்வாகனரூடராய் எழுந்தருளி ஒருபாத்திரத்தில் விடுபுஷ்பங்களைவைத்து "இவற்றை மாலையாகத்தொடுத்து நமக்கு அணியக்கடவாய்" என்று திருவாய் மலர்ந்து மறைந்ததாகக் கனவுகண்டு, அதனைச் சாந்தலிங்க சுவாமிகளுக்குத் தெரிவிக்க;' அவர் " சிவஞானபாலையசுவாமிகள் முருகக்கடவுளிடத்து அதிபத்திமைபூண்ட உள்ளத்தோடு விளங்கியிருத்தலால், அதுபற்றியே அக்கடவுள் தங்களுக்குச் சொற்பனததில் சுவாமிகள் மகிமையை இவ்வாறுகப் புலப்படுத்தினர்" என்று வலியுறுத்தினர். உடனே அச்சுவாமிகள் மீது தாலாட்டு, நெஞ்சுவிடுதூது என்னும்பிரபந்தங்களை பாடி அவர்சந்நிதானத்திலே அரங்கேற்றி, ஞானேபதேசம்பெற்று அந்தஞானசாரியரது கட்டளைப்படியே தமது தங்கையாகிய ஞானம்பிகையைச் சாந்தலிங்கசுவாமிகளுக்கு விவாகஞ்செய்து கொடுத்துவிட்டு, தம்மை நெடுநாளாகப்பிரியாது அத்தியந்த அன்புடையராய் உடன்றொடர்ந்துவந்த அண்ணமலை ரெட்டியாரைத் துறைமங்கலத்துக்குப்போகும்படி ஆஞ்ஞாபிதது, ஞானசாரியனைத் தரிசித்துக்கொண்டு, அவ்விடததிற்றனே இருந்தார்.

சிலகாலஞ்சென்றபின் ஞானசாரியரிடத்தே விடைபெற்றுக் காஞ்சீபுரத்தையடைந்து சுவாமிதரினஞ்செய்து அங்கிருக்கும்பொழுது, நிஜகுணயோகியென்பவராற் கீர்வாணகன்னட பாஷையிற் செய்யப்பட்டிருந்த விவேகசிந்தாமணியின் ஓர் பாகமாகிய வேதாந்தபரிச்சேதத்தை வேதாந்தசூடாமணியெனப் பெயர்தந்து அதனையும், இரேணுகரொன்னுங்கணத்தலைவரால் அகத்தியமகாமுனிவருக்கு உபதேசிக்கப்பட்ட சித்தாந்தசிகாமணியையும், பிரபுதேவர்சரித்திரமாகிய பிரபுலிங்கலீலையையும் தமிழிற்பாடியருளி, சிவஞானபாலையசுவாமிகளைத் தரிசித்தல்வேண்டுமென்னும் பேராசையால், அவர்மீது பிள்ளைத்தமிழ், திருப்பள்ளியெழுச்சி என்னும் இரண்டு பிரபந்தங்களையுஞ் செய்து

கொண்டு, கூவமெனவழங்கும் திருவிற்கோலத்தின் வழியாக வரும்பொழுது, அந்நகரத்தார் சுவாமிகளின் அற்புதமகிமைகளைக்கேழ்வியுற்று எதிர்கொண்டுபசரித்து அத்தலபுராணத்தைத் தமிழில் மொழிபெயர்த்தருளும்படி பிரார்த்திக்க; அவர்களது வேண்டுகோளுக்கிசைந்து, புராணம்பாடி முடித்து, ஞானாசாரியனையடைந்து தரிசனஞ்செய்து மேற்சொல்லியபிரபந்தங்களை சந்நிதியிலரங்கேற்றி, உடன்வசித்திருந்தார்.

பின்னர் ஞானாசிரியரிடத்தே விடைபெற்றுக்கொண்டு விருத்தகிரியையடைந்து, பழமலைநாதனையும் பெரியநாயகியம்மையாரையும் தரிசித்துவணங்கி, அவ்விடத்தில் ஞானாசாரியார் கட்டளைப்படி ஒரு திருமடமமைத்துத் தமவரவுநோக்கி எதிர்கொண்டு வணங்கிநிற்கும் சிதம்பரபூபதியைச்சிறப்பித்து,

வெங்கைப்பழமலையார்மீதுகோவைவியந்துரைக்கு
மெங்கட்கினியசிவஞானதேவனிசைவுகொடு
திங்கட்பவனியிருகான்முதுகுன்றர்சேர்மறுகின்
மங்கைச்சிதம்பரபூபதிநல்குமடமிதுவே.

என்னும் கட்டளைக்கலித்துறையைப் பாடியருளி அத்திருமடத்தடைந்து வீற்றிருந்து, பழமலையந்தாதி பிக்ஷாடனநவமணிமாலை, கொச்சகக்கலிப்பா, பெரியநாயகியம்மை நெடுங்கழி நெடிலாசிரியவிருத்தம், பெரியநாயகியம்மை கலித்துறை என்னும் பிரபந்தங்களைத் திருவாய்மலர்ந்தருளினார். ஒருநாள் மணிமுத்தநதியிலே ஸ்நானஞ்செய்து வரும்பொழுது அதனருகிருந்த மாஞ்சோலையின்புறத்து வறிதே விழுந்துகிடந்த மாங்கனியைக்கண்டு, இது சிவலிங்கப்பெருமானுக்கு நைவேத்தியத்திற்கு உபகரணமாகுமென்று கருதி எடுக்க, அதுகண்ட அச்சோலைக்காவலாளன் சுவாமிகளின் மகிமையறியாது மடிபிடித்திழுத்து மனவருத்தஞ் செய்தமையைக்கண்டு

அடுத்துவருந்தொண்டனுக்காவந்தகனைத்தாளா
லடர்த்ததுவுஞ்சத்தியமேயானா—லெடுத்தவொரு
மாங்கனிக்காவென்னைமடிபிடித்தமாபாவி
சாங்கனிக்காதித்தன்வரத்தான்.

என்னும் வெண்பாவை அருளிச்செய்தனர். அவ் வெண்பாவிலமைத்தபடியே அவன் சூரியனுதயமாக உயிர்துறந்து, சுவாமிகளைத் தரிசித்துப் பரிசிக்கப்பெற்றுத் தண்டிக்கலுற்றமையால் நற்கதிபெற்றுய்ந்தான். பின்னும் சிலநாளங்கிருந்து

திருப்பதிகம்பெற்ற திருத்தலங்கடோறும் யாத்திரைசெய்து வருமபொழுது, அகராதிசெய்த வீரமாமுனிவரென்பவர் எதிரப் பட்டு ஏசுமதமாகிய தங்கொள்கையை நாட்டுதற் பொருட்டுத் தருக்கஞ்செய்ய; உடனே அக்கொள்கையைமறுத்து, ஏசுமத நிராகரணமெனப் பெயரிய ஓர்நூலை அருளிச்செய்து, ஒவ்வோர் தலங்களையும் இரண்டு வெண்பாக்களாற் ஸ்தோத்திரஞ்செய்து முடித்து, அதன்பின் கலம்பகமென்னும் ஓர் பிரபந்தத்தை இயற்றிக்கொண்டுவந்து, ஞானாசாரியரைத் தரிசித்து, அந்நூலை சந்நிதானத்திலரங்கேற்றி, உடன்வசித்தனர் ஒருநாள் சாயங்கால அநுட்டானமுடித்துக்கொண்டு, ஞானாசாரியரும் தாமும் ஏகாந்தமாயிருந்து, தமது சடஸ்தல இலிங்கவனுபவத்தையும் ஞானவிசேஷ சமரசபாவத்தையும் ஆராய்ந்து, இன்புறும்பொழுது, எதிரெழுந்த சந்திரோதயத்தைக் கண்டு

கடன்முரசமார்ப்பக்கதிர்க்கயிற்றுலேறி
யடைமதிவிண்கழைநின்றாடக்—கொடைமருவு
மெங்கள்சிவஞானவேந்தலிறைத்தமணி
தங்கியவேதாரகைகடாம்.

என்னும் வெண்பாவை அருளிச்செய்து, பின்னுமொருநாள் தனிமையாய்ச் சமுத்திரதீரத்தையடைந்து அங்குள்ள நறுமணற் பரப்பில் தாமெழுதிய நன்னெறிவெண்பா நாற்பதையும் தம்பின்னோராகிய கருணைப்பிரகாச சுவாமிகளுக்கு எழுதிவரும்படி கட்டளையிட்டு, ஞானாசாரியரிடத்தே விடைபெற்றுக்கொண்டு நல்லாற்றூரையடைந்து, அவ்வாசிரியர் திருமடத்தில்வீற்றிருந்தார்.

இவரிடத்து விடைபெற்றுச்சென்ற கருணைப்பிரகாச சுவாமிகள் இஷ்டலிங்க வகவல் பாடிமுடித்து, சீகாளத்திபுராணத்தைப் பாடத்தொடங்கி சீகாளத்திச சருக்கம்வரையும் தமிழில் மொழிபெயர்த்தருளி, திருவெங்கைமாநகரத்தில் பதினெட்டாம் வயதில் சிவலிங்கவைக்கியமாயினர். அதனையறிந்த சிவப்பிரகாசசுவாமிகள் அவ்விடத்தேசென்று,

முன்னமொருதமிழ்ப்புலவன்றனையுங்கண்டசுவைமுதிர்ச்
சியாலே, தன்னியலைமுழுதுமுறைத்தமையாமுன்னினைக்கவா
ந்துதடங்காளத்தி, மன்னவனுண்டானெனதுமாதவத்தின்வலி
தீரமண்ணின்மீதே, யென்னுடன்வந்தவதரித்தவிளக்கருணைப்
பிரகாசனென்னுங்கோவே.

என்னும் செய்யுளைப் பாடிநிற்க, வேலையசுவாமிகள்,

ஆண்டதனுலெனையொவ்வாய்வித்தையினிற்றமையனினு மதிகமென்றே, பூண்டவுலகதனினுள்ளோர்புகல்வதுகேட்டிருந்துமென்னபுதுமைதானோ, காண்டருகண்மணியேநல்விளஙகருணைப்பிரகாசக்காளாய்நீதான், மாண்டனையென்றறிந்திருந்துமுயிர்தரித்தேன்யானுமிகுவன்னெஞ்சேனே.

என்னும் செய்யுளைப்பாடித் துக்கித்துக்கொண்டு, சுவாமிகளைப் பிரியலாற்முது வருந்தி நின்றனர். அவரை ஒருவாறுதேற்றி நிறுத்திவிட்டு, தாம் நல்லாற்றூரையடைந்து, திருமடத்திலிருந்துகொண்டு, சிவநாமமகிமையும், இஷ்டலிஙகப்பெருமான்மீது அபிஷேகமாலையும் நெடுஙகழிநெடிலும், குறுங்கழிநெடிலும், நிரஞ்சனமாலையும், கைத்தலமாலையும், சீகாளத்திபுராணத்தில் கண்ணப்பசருக்கமும, நக்கீரச்சருக்கமும் செய்தருளி, சிவாநுபவச் செல்வராய்ச் சிலகாலம்வாழ்ந்திருந்து, முப்பத்திரண்டாம்வயதில், கன்னிமதியில், பௌர்ணிமைத்திதியில், சச்சிதானந்தப் பிழம்பாகிய பரசிவலிங்கத்திற் கலந்தருளினர்.

அதனையறிந்த வேலையசுவாமிகள் அவ்விடத்தையடைந்து

அல்லிமலர்ப்பண்ணவனுமாராய்ந்தறிகவிதை
சொல்லுமிருவரிடைநதோன்றியயான்—முல்லை
யரும்பிற்பொலியுமணிமுறுவனல்லாய்
கரும்பிற்கணுநிகர்த்தேன்காண்.

என்னும்வெண்பாவைப்பாடி அளவிடப்படாத அருந்துயர்க்கடலின்மூழ்கி, ஒருவாறுதெளிந்து சிவப்பிரகாசசுவாமிகளது சமாதிதரிசனஞ்செய்துகொண்டு, அவ்விடத்தி னின்றுநீங்கி, நல்லூர்ப் புராணம்,இஷ்டலிங்ககைததலமாலை,கும்பகோணச்சாரங்கதேவர் சரித்திரமாகிய வீரசிங்காதனபுராணம், குகைநமசிவாயசுவாமிகள் சரித்திரமாகிய நமசிவாயலீலை, உபமன்னியமகாமுனிவரால் திருவடி தீக்ஷைசெய்யப்பெற்ற கிருஷ்ணசரித்திரமாகிய பாரிசாதலீலை, மயிலத்திரட்டைமணிமாலை, மயிலத்துலா என்னும் பிரபந்தங்களைச் செய்தருளி, சீகாளத்திபுராணததையுமுடித்து, பெருமத்தூர் மடத்தில, எழுபத்திரண்டாம்வயதில், சிவலிங்க வைக்கியமாயினர்.

இம்மூவர் சரித்திரச் சுருக்கம்,

முற்றுப் பெற்றது.



சிவமயம்

# இம்மூவராருளிச்செய்தநூல்களின் பெயர்.

சிவப்பிரகாச சுவாமிகள் அருளிச்செய்தன.

சோணசைலமாலை
திருச்செந்திலந்தாதி
திருவெங்கைக்கோவை
திருவெங்கைக்கலம்பகம்
திருவெங்கையுலா
திருவெங்கையலங்காரம்
சிவப்பிரகாசவிகாசம்
தருக்கபரிபாஷை
சதமணிமாலை
நால்வர்நான்மணிமாலை
தாலாட்டு
நெஞ்சுவிடுதூது
வேதாந்தசூடாமணி
சித்தாந்தசிகாமணி
பிரபுலிங்கலீலை [ள்ளைத்தமிழ்
சிவஞானபாலையசுவாமிகளபி
திருப்பள்ளியெழுச்சி
திருவிற்கோலபுராணம
பழமலையந்தாதி
பிக்ஷாடனநவமணிமாலை
கொச்சகக்கலிப்பா
பெரியநாயகியம்மை விருத்தம்
பெரியநாயகியம்மைகலித்துறை
ஏசுமதநிராகரணம்
க்ஷேத்திரவெண்பா
கலம்பகம்
நன்னெறி
சிவநாமமகிமை
அபிஷேகமாலை
நெடுங்கழிநெடில்
குறுங்கழிநெடில்
நிரஞ்சனமாலை
கைத்தலமாலை

வேலையசுவாமிகள் அருளிச்செய்தன.

நல்லூராப்புராணம்
இஷ்டலிங்கக்கைத்தலமாலை
வீரசிங்காதனபுராணம்
குகைநமசிவாயலீலை
பாரிசாதலீலை
மயிலத்திரட்டைமணிமாலை
மயிலத்துலா

கருணைப்பிரகாசசுவாமிகள் அருளிச்செய்தன
இஷ்டலிங்கவகவல்

இம்மூவராலும் அருளிச்செய்யப்பட்டது.
சீகாளத்தி புராணம்.

ஆக நூல்கள் (சஉ)

இச்சரித்திரச் சுருக்கத்துள் இவர்கள் சமைய உசிதமாயச சொல்லப்பட்ட கவிகள் (ழஉ).

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கதியின் அட்டவணை.

| பக்கம். | அவது. | கதியின் பெயர். | பாட்டுத் தொகை |
|---|---|---|---|
| க | க | ஆதிகதி | உக |
| எ | உ | கைலாசகதி | ௬க |
| ௰ரு | ௩ | மாயையுற்பத்திகதி | எ௪ |
| உஎ | ௪ | மாயைபூசனைகதி | ருகூ |
| ௩௬ | ரு | பிரபுதேவர்வந்தகதி | கூக |
| ருக | ௬ | விமலைகதி | ரு௰ |
| ருஅ | எ | மாயைகோலாகலகதி | அ௰ |
| ௬௰ | அ | வசவண்ணர்வந்தகதி | ௪ரு |
| எஎ | கூ | அக்கமாதேவியுற்பத்திகதி | ருக |
| அரு | ௰ | மாதேவியம்மைதுறவுகதி | ருஅ |
| கூ௪ | ௰க | கொக்கிதேவர்கதி | ௩௰ |
| கூஅ | ௰உ | முத்தாயியம்மைகதி | உஎ |
| ௱உ | ௰௩ | சித்தராமையர்கதி | எ௬ |
| ௱௰உ | ௰௪ | வசவண்ணர்கதி | ௪அ |
| ௱௰கூ | ௰ரு | மருளசங்கரதேவர்கதி | உ௪ |
| ௱உஉ | ௰௬ | இட்டலிங்ககதி | ௪௩ |
| ௱உஅ | ௰எ | கதலிவனகதி | உ௰ |
| ௱௩க | ௰அ | சாதகாங்ககதி | உரு |
| ௱௩௪ | ௰கூ | கோரக்கர்கதி | ௬௩ |
| ௱௪௩ | உ௰ | முனிவரர்கதி | உ௩ |
| ௱௪௬ | உக | சூனியசிங்காதனகதி | ௰ரு |
| ௱௪அ | உஉ | சூனியசிங்காதனத்திலிருந்தகதி | ௬உ |
| ௱ருஅ | உ௩ | ஆரோகணகதி | ௬௪ |
| ௱௬௬ | உ௪ | ழூஞேலயகதி | உக |
| ௱௬கூ | உரு | மான்மியகதி | உஎ |

ஆக கதி உரு-க்கு திருவிருத்தம் ககருஅ.

உ

சிவமயம்.

# பிரபுலிங்கலீலைமூலம்.

## காப்பு-விருத்தம்.

சுரர்குலாதிபன்றூய்மலர்நந்தனம்
பெருகவார்கடற்பெய்தவயிற்றினேன்
கரகநீரைக்கவிழ்த்தமதகரி
சரணநாளுந்தலைக்கணியாக்குவாம்.

முதலாவது
## மாயைகதி

### சிவபெருமான்.

பூவாய்நெடுங்கோட்டுறுபசுந்தேன்கைகான்முடங்குபொறியிலி
னூவாயொழுகிற்றெனவுலகமளந்தமாலுநான்முகனுந [தன்
காவாயெனநின்றேத்தெடுப்பத்தானேயுவந்தெங்கரதலத்தின்
மேவாவமர்ந்தமாமணியைத்தொழுதுவினைக்குவிடைகொடுப்
பாம். (க)

### உமாதேவியார்.

ஆதிபகவன்றனதுடறணிப்பான்பணியவவ்விறைவன்
பாதமிறைஞ்சுமதற்குநெற்றிப்பகையுமல்குற்பகையுமாஞ்
சீதமதியுமரவும்விழுஞ்செயற்குமூவகைசெயாமலலை
மாதுபணியுமதற்குமனமகிழுமுமையைவணங்குவாம். (உ)

### விநாயகர்.

மாரனெடுத்துவளைக்குமொருகரும்பையொடித்துமலர்சிதறி
நாரியடுத்தவளிமாலைகுலையததுரந்துநயந்தோடி
வீரமனத்துவினைப்பாகர்குறிப்பிலுழுகிவிளையாடு
மீரமதிச்செஞ்சடைக்களிறல்யானையிணைத்தாளேத்துவாம். (ங)

## சுப்பிரமணியர்.

பாகமொருபெண்குடியிருக்கும்பரமனணியிற்பரித்தமணி
நாகநுழைவுற்றுடல்சுருணடுகிடந்துநகுவெண்டலைப்புழையிற
போகமெல்லத்தலைநீட்டிப்பார்த்துவாங்கப்போகுமொரு [வாம
தோகைமயில்வாகனப்பெருமானைத்தாட்கமலந்தொழுதிடு

## அல்லமாப்பிரபுதேவர்.

கலையைமதிக்கும்புலவர்தமைச்சித்தர்குழாத்தைக்கடவுளரை
நிலையைமதிக்கும்முனிவரரைத்திசைமாமுகனைநினைவிளையாசு
சிலையைமிதுக்குநொடியோனைவிழுங்கியுமிழாத்திறன்மாயை
நிலையைமிதிக்குமல்லமன்செங்கமலமலர்த்தாடலைக்கணிவாம்.()

## ,வசவேசர்.

வெள்ளவேணிப்பெருந்தகைக்குயான்செய்யடிமைமெய்யாகும
கள்ளவேடம்புனைந்திருந்தகள்வரொல்லாங்களங்கமறு
முள்ளமோடுமெய்யடியாராக்வுள்ளதருள்ளுமருள்
வள்ளலாகும்வசவேசன்மலர்த்தாடலையால்வணங்குவாம். (சு)

## சென்னவசவேசர்

பங்கவளற்றுவழிமாற்றியொருநல்வழியைப்பகர்வார்போற்
றங்கண்மதியிற்பலபிதற்றுஞசமயருளாகடமைநீக்கி
யங்கநிலையிற்றிலிங்கநிலையிற்றென்றருளும்வீரசைவ
சிங்கநிலைத்தவருட்சென்னவசவன்றிருத்தாள்சிரத்தணிவாம.

## மடிவாலமாச்சையர்.

வார்க்குங்குமமென்முலைபாகனடியாரறுவைமாசடித்துத்[யைத்
தீர்க்குஞ்செயல்போல்விச்சலமன்னவன்றன்சேனைசெய்பிழை
தாக்குங்கரவாள்கொடுசின்னபின்னமாகத்தடிந்திட்டுப்
போக்குங்கருணைமடிவாலமாசசன்பொன்னங்கழல்போற்றி.

## சைவசமயாசாரியர்.

பெண்ணிற்கரசுதானகவென்புபெருநீற்றறைபிரச
வண்ணக்கமலமலர்ப்பொய்கையாகச்செங்கன்மாழையா
நண்ணச்சிறியநரிகண்முடங்குளையபரியாய்நகர்புகுதப்
பண்ணற்குரியவமுதுறழ்முத்தமிழ்நால்வரையும்பணிகுவாம்.

## சிவனடியார்.

பரமர்மகிளவன் றிருத்தொண்டத் தொகையுளடியார் பத்திபெ
முருவமாகுநஞ்சோமநாதன்றுதியுளூறுசரண [லா
ரரவணியானடியார்கண் மற்றையவர்களனை வருந்தாம்
விரவிநாளுமிருப்பவிடங்கொடுக்குமுள்ளம்விரிந்தன்றே. (௰)

## சிறப்புப்பாயிரம்.

### வேறு.

தண்ணிலவுபுனைசடிலத்திறைபுகழல்லமதேவன்சரிதத்தீம்பால், புண்ணியாருசெவிவாயிற்றமிழ்ச்சங்கத்தான்முங்கிதுபுகட்டினனே, லெண்ணரியபுகழ்ச்சலயத்திருந்தவனோவடிவெரிக தானென்றகூறப், பண்ணியன்முத்தமிழ்க்கவிதைசசிவப்பிரகாசப்பெரும்பேர்படைத்துளானே. (௰௧)

## அவையடக்கம்.

### வேறு.

அடலுறமல்லமனரியசீரொடு
படுதலினயந்துபாராட்டும்பன்முறை
மடனிகுமுலகமென்மொழியைவந்துவாக்
கடலினுமூழ்குவாகாலமொன்றினே. (௰௨)

## படலந்தொகை.

நாற்கதிசருமிடர்கடந்துநச்சுனர்
பாரக்கதிமுதலிருபத்தைந்தாங்கதி
மேற்கதிபெறவருள்விளங்குமல்லமன்
சீர்க்கதியிருபதோடைந்துஞ்செப்புவாம். (௰௩)

## சம்பந்தம்.

கன்றியவயிரிகள்காதுங்காதையும் *
வன்றுயர்மதனநோய்வளர்க்குமாற்றமும்
புன்றொழிலினர்வறும்பொழுதுபோக்கலு
மன்றருளல்லமனமலலீலையே. (௰௪)

## அதிகாரிகள்.

புறங்கறையொழுகுசெம்புண்ணிலீயென
வறுங்கதைபுல்லியர்கொளவர்மாமல
ருறுங்களிவண்டினல்லமன்றூண்காதையைப்
பிறந்துளபயன்பெறும்பெரியர்கொள்வரோ. (௰௫)

*. பாரதராமாயணங்களிற் கிளந்தனர் போலும்

## பிரயோசனம்.

மயலுளற்றான்றுகோன்மல்குமன்பெனு
மியலெழுத்தெழுதுகோலங்கலிங்கமாம்
வியனிலத்தளவுகோன்மதிவிளக்கினை
யயர்வறத்தூண்டுகோலமலலீலையே. (௧௬)

## விடயம்.

நன்றிகொளடிகளுன்குறநடந்துபோ
யென்றனிநாவினினெறெழுமிசசெய்யுளான்
வென்றிகொளல்லமன்சீர்த்திமென்பயன்
கன்றலிலன்பராங்கன்றையூட்டுமால். (௧௭)

## வேறு.

பரசிவம்பிரமமென்னப்பட்டொருதிரிவுமின்றி
யுணாமனமிறந்துநின்றவொரு,சிவலிங்கந்தன்னின்
வருமுயர்சதாசிவன்றான்மற்றவன்றனைப்பொருந்து
மருமைகொண்ஞானசத்தியவர்களாற்சிவனுதிப்பன். (௧௮)

ச,,ற்ப்மச்சிவனுக்கிச்சாசத்தியவ்விருவரானுந்
தோற்றுவனுருத்திரன்றான்சொல்லியவவற்குச்சத்தி
மாற்றருங்கிரியையென்பாமற்றவரிருவர்பாலும்
போற்றுநீமரியுதிப்பன்பொறியவன்சத்தியாமால் (௧௯

அத்திருமாலுமாவுமளிப்பவந்துதிப்பன்வண்டு
மொய்த்திசைமுரலுஞ்செங்கேழ்முளரிவானவனவற்குச்
சத்திவெண்கமலையனோர்தரவருமுலகிற்றோற்ற
நித்தனங்குருகுகேசனினைவுமாதிரையினுமால். (௨௰)

ஆக்குறுஞ்செயலதொன்றேயயன்றனக்காக்கலோடு
காக்குறுஞ்செயலிரண்டுங்கண்ணனுக்காக்கல்காத்தல்
போக்குதலென்றிம்மூன்றும்புராந்தகற்களித்தவர்க்கு
நீக்கருமிறைமைநல்கினிறுவினன்குருகுகேசன். (௨௧)

முதலாவது துதிகதி முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௨௧.

---

## இரண்டாவது.

# கைலாசகதி.

—:*:—

வெள்ளிமால்வரையினுச்சிவீற்றிருந்தருளுமுக்கண்
வள்ளலாரொடுகூறுற்றுமதரரிநெடுங்கட்செவ்வாய்ப்
பிள்ளைவாண்மதிநுதற்[illegible]றமு[illegible]ராட்டியல்லமனைக்காண்பான்
கள்ளமாயையைஞாலந்துவிடுத்தவக்கதியுரைப்பாம். (க)

இயங்குவநிற்பவானயாவையுங்கலைமாதோடு
முயங்குபுமுன்னமீன்றருளரிவானவன்வகுத்து
வியன்புவியண்டந்தன்னுளவிதித்தனன்றகுமிடங்கள்
வயங்கெழுமசுரர்நாகர்வானவர்முதலியோர்க்கும். (உ)

நான்முகவண்டந்தன்னுணனிசிறந்தொப்பிகந்த
தூன்முகவிழிகளாற்கண்டுமெபாகூஉவகைபூப்பத்
தான்மிகுமருளான்மேனிசாற்றியபேராநந்தக்
கூன்முகமதியணிந்தகொற்றவன்கைலைக்குன்றம். (௩)

கொள்ளைவண்டிழிந்துதாதுகுடைந்தழூஉக்குழவுடைந்து
கள்ளிழிந்தொழுகுசெம்பொற்கடுக்கைவேய்ந்திலகுவேணி
வள்ளல்வண்புகழ்திரண்டனையங்கெழுகைலைக்குன்றில்
வெள்ளிவந்ததத்தியாசமாகவேவிளைந்ததம்மா. (௪)

கண்பிசைந்தொருசேயின்னுங்கலுழினுந்தனைக்கொடுப்பன்
மண்பிசைந்துண்டமாயன்மறுத்திடவலியனல்ல
னண்பிசைந்திறைவனுக்கேநாமிடமாவமென்று
பண்பிசைந்தலைதிரண்டபரிசினின்றிடுமெக்குன்றம். (ரு)

ஒழுகுறுமருவியீட்டமொலியினனகுவெண்டிங்கள
பழகுறுமுடற்களங்காற்பாகசாதனன்கூர்ங்கோட்டு
மழகளிறுமிழ்மதத்தான்மலர்மிசைக்கடவுளூர்தி
யழகுறுநடையாலன்றியறிதரப்படாவக்குன்றில். (௬)

விளங்கொளிதுளும்புமந்தவெள்ளியங்கிரியினுச்சி [று
துளங்கொளிவிரிக்குஞ்செம்பொற்சுடர்மணிச்செய்குன்றொன்
களங்கறுபராரைத்துய்யகருப்புரக்குவாலின்மீது
வளங்கெழுசுடரொன்றுற்றுவயங்குதல்போலுமன்றே. (எ)

இனையதிக்கைலைவெற்பிலிறையரசிருக்கையொன்றுண்
டனையதையணியமாட்டாதப்புறம்போயினுனென
றெனையிகழ்பவர்களில்லையிலங்குமம்மண்டபத்தின
றனிவளமனந்தனுலுஞ்சாற்றிடற்கரிதுமாதோ (அ)

## வேறு.

அன்னமண்டபத்தங்கணனோர்பகன்
மின்னுசெம்மணிவேதிகையொன்றின்மேன்
மன்னுசெங்கதிர்மண்டலத்துற்றன
னென்னவந்தங்கிருந்தனனென்பவே (கூ)

குழவியாயுடற்கூனிநரைத்ததோர்
விழவுவாண்மதிவேணியின்மேவுறக்
கிழவியாகிக்கிரிக்கோன்மகபெறு
மழகுநீர்முகளாயிடைவாழ்வுற. (ம)

அங்கியென்னநகப்பமேனோக்கிய
செங்கணொன்றுதிருநுதல்சேர்தரத்
திங்களொன்றுந்தினகரனென்றும்வா
ழுங்கண்மல்குமருண்மடைபோன்றுற. (மக)

எண்ணுமன்பரிதயமென்புட்பமே
கண்ணிபோன்றுவார்காதிடைத்தோடுற
நண்ணுமாதுமைநன்னுதற்பொட்டென
வண்ணநீலமணிமிடற்றொன்றுற. (மஉ)

நகந்தருங்கொடிகண்களைநாணியே
முகந்திருமபுமுறையிற்றிரும்புமான்
மகிழ்ந்திடங்கதிர்வீரமழுவலந்
தகுந்தகுந்தகுமென்னத்தயங்குற. (மக)

ஒசிர்றெறிந்தசுடர்மணிக்கங்கண
முற்றில்ங்கவொருகருங்கேழலின்
பற்றிருந்தமதாணியிற்பட்டெனப்
புற்றருங்கலையுற்றனைபொற்புற. (மச)

புரத்தைவென்றநகைக்குமென்போதினோன்
சிரத்தைவென்றசெங்கைக்குஞ்சிலைமத
னெரித்தகண்ணிற்குமின்றெனக்கூற்றடூஉத்
தரித்தவீரக்கழலொடுதாளுற. (௰௫)

இருந்தவாதியிடத்திலிருந்தனள்
பரந்தவானும்படியுமுயிர்களு
மொருங்குதோன்றவுதவிக்கருவுறீஇ
வருந்திலாதமணிவயிற்றன்னையே. (௰௬)

இறைவனங்கணெனுமுச்சுடர்களு
முறவுகொண்டவிருளெனுமோதிமே
லறவனென்றநம்மண்ணல்புனைந்தரு
ணறவுமிழ்ந்தநறுமலர்தாழ்ந்திட. (௰௭)

எற்றுவார்கொடியெந்தைசடைப்பிறை
யாற்றுள்வீழ்வுற்றிறப்பதற்கெண்ணுறத்
தோற்றமேவுசுடர்த்திருநெற்றயின்
னாற்றுமோமாமணிச்சுட்டிநலந்தர. (௰௮)

ஈசனார்முகமென்னுமுளரியி
லாசைகூருமளிவிழிக்காரருள்
வாசமாமலர்வாய்க்கிளவெண்ணகை
தேசுலாமணியாகச்சிறந்துற. (௰௯)

மாணப்பூண்புனைமற்றையுறுப்பெனப்
பூணுட்பட்டிடாதோலையின்பூணென
யாணர்ச்செம்பொனிலங்கொளியோலைமேற்
காணக்காதெனும்வள்ளைகவின்செய. (௨௰)

ஓங்குவாவுடையும்பனயனரி
தாங்குமாவிதணந்தொழிந்நாளினும்
வாங்குருவெழின்மங்கலநாணொளி
தேங்குபூணரசென்னச்சிறந்திட. (௨௧)

அரவுலாஞ்சடையண்ணலைப்பிள்ளைதான்
பருவமூன்றினிற்பாடவின்பாறரும்
பொருவில்கொங்கைப்புகழெனப்பொங்கொளி
மருவுமாரமணிவடந்தாழ்ந்துற. (௨௨)

பறந்திடாமணிவண்டுபெடுமலர்
சிறந்தநீலமலரொடுசேர்பெற
மறந்திடாதுமறைமுடியின்பொரு
ளறைந்துபைங்கிளிமுன்கையமர்ந்திட. (உங)

தோலுடைப்பரன்றன்மனையாட்டிதன்
பாலடுத்ததெவ்வாறெனும்பட்டடை
மேலுடுத்துவிளங்கவொண்மேகலை
நூலிடைக்குறுநோய்புரியாதுற. (உச)

புத்தனிச்சம்படினும்பொருமையை
யெய்த்துமற்றையிருமணத்தம்மியி
லத்தன்வைத்தவடிககமலங்களின்
முத்தரிச்செஞ்சிலம்புமுழங்குற. (உரு)

இருந்தவாரருளெம்பெருமாட்டிபாற்
குரும்பைநாணுமென்கொங்கைப்பொறையினால்
வருந்துநூற்பகவன்னமருங்குலா
ரரம்பைமாதரளப்பிலரொய்தினர் (உசு)

வேறு.

முமலையந்தொடையருந்ததிமுதலெழுமுனிவ
ரில்லறம்புரிதுணைவியராமெழுவருமபோய்
வல்லரும்பெனகுவிமுலைப்பனிமலைமகளைச்
சொல்லருந்துதிசெய்துவாழ்த்தெடுத்தனர்தொழுது. (உஎ)

அன்னமொன்றறியாமுடிக்கங்கையையறிந்து
துன்னவந்தலமருமெகினங்களின்றொகுதி
யென்னவமபுயத்தொருசதகோடியிந்திராகண்
முன்னடைந்துவெண்கவரிகளிரட்டினர்முறையால். (உஅ)

அரவுகௌவியகதிரொளனப்பட்டசாந்தாற்றி
பரவையல்குல்வெண்முத்தவாணகைகொலைபயில்விற்
புருவமென்மலர்க்குழற்சசிகோடிகள்புகன்று
மருவியம்பிகைமருஙகுநின்றசைத்தனர்மன்னே. (உகூ)

எடுத்துவீணைகளுளர்நரம்பிதுமிடறிதுவென்
றடுத்தகேள்வராமபிரமருமறிவரிதாகப்
பட்டத்தபாம்பணிபரன்புடைமாதுசீர்பாட்டிற்
றொடுத்துவாலியகலைமடந்தையர்பலர்துதித்தார். (௩ம)

செப்பமைந்ததண்ணுமையிசைதாளமென்சிறுதாட்
டுப்பமைந்தவொண்சதிதழீஇச்சுவையபல்காய
முப்பமைந்தவின்கறியெனநடித்தனருழையோ
டொப்பமைந்தக்ணுருத்திரகணிகையருவந்து (௩௧)

எந்தைபாலுமைமுக்குணங்களுமுருவெடுத்து
வந்தமாதர்களருகுநின்றனாபணிமகிழ
வந்தமாதருட்டமகுணமாதுமையருளாற்
சந்தமாயையெனபெயர்கொடுதருக்கிநின்றனளால் (௩௨)

தெள்ளுவார்திரைக்கஙகையுஙகஙகையுஞ்சிறிய
பிள்ளையாகியமதியமுமதியமும்பெரிது
துள்ளுமோரிளநவவியுநவ்வியுந்தொடாபு
கொள்ளுமாறவணெருங்கினவுருததிரகுழாஙகள் (௩௩)

சஙகமொன்றுடனென்றுதாக்குறவொளிதழைக்குந்
துஙகநேமியுமன்னவாறுறவலைசுருட்டும்
பொங்குவேலைவந்தெனவரிக்கணஙகளற்புதத்த
வெங்கணயகன்பேரவையிடத்துவநதிறுதத. (௩௪)

முகங்கணன்கினு..ான்மறைவிதிமுறைமுழங்க
வுகந்துகையிருநான்குநான்குச்சியிற்குவியச்
சகந்தருஞ்செயற்பிரமர்களளப்பிலர்தையல்
பகுந்தமேனியனவையிடைப்புகுந்தனர்பரவி. (௩௫)

அயனுமாயனுமெனிலுயர்ந்தவொன்பதன்றிக
கயிலைநாயகனமர்திருவோலக்கஙகாண்பா
னயனமாயிரமிலாமையினதிகனனென்று
வயிரவான்படையிந்திரனெண்ணிலர்வநதாா. (௩௬)

உரகர்சித்தர்கள்வித்தியாதரர்சுரருயர்கிம்
புருடர்மெய்க்கதிர்முதலியகோடிசைபுரப்போா
ரிருதர்மற்றுளார்விழிபிதிர்ந்திடவுடனெருஙகி
வரதனத்திருவோலக்கங்காணியவந்தார். (௩௭)

அழிவுமாக்கமுமுறையினுற்செயும்வலியடைந்தா
மொழியும்யாக்கையுமனமுநல்லறஙகளின்முயன்றா
கழியுமாறுமுக்காலமுமுளர்தலைகழன்றார்
பழியிலாவசிட்டாதிமாமுனிவரர்பரந்தார். (௩௮)

குழவிபால்குடிப்பதுகடல்குடிப்பதுகுழவி
பழகுமாறுணன்மண்ணெடுத்துண்பதுபடைப்பு
முழுதுமோர்தளர்நடைமகச்செயலெனுமுரண்கொள்
வழுவிலாவருட்கணங்களெண்ணிகந்தனவந்த. (௩௯)

செருக்கொடுஞ்சிவநிந்தைசெய்வார்க்கிலைதீர்வு
விரிக்கினென்றுமுன்சிறுவிதிதலையறவெட்டி
யெரிக்குநல்கிநிந்தனைசெயாமறிமுகமியைத்துத்
தருக்கிநின்றவவ்வீரன்வந்தொருபுடைசார்ந்தான். (௪0)

காதியாயிரமால்களைப்பிழிந்துமாங்கனிபோற்
கோதுவீசினுங்கடல்கவிழ்த்தனையசெங்குருதி
பூதியாயினுநிரம்புறுக்கபாலபாணியனாய்
மாதுபாதியனவையிடைப்புகுந்தனன்வடுகன். (௪௧)

வீரமாதருக்கில்லையென்றுரைப்பதென்விளங்க
வீரமாதெனவறிகிலிரோவெனவிளம்பி
வீரயோகினிவெள்ளமோடமர்பொரவிரும்பும்
வீரகாளியும்புகுந்தனளவையிடைவிரைந்து. (௪௨)

ஊன்றுஞானமோடுயர்வயிராகநல்லொழுக்க
மூன்றுகாலெனக்கொண்டரன்முகத்திளமுறுவ
றோன்றுமாறுநின் றுடினன் கதிரிருடொலைத்தல்
போன்றுமாயையைத்தொலைத்திடுபிருங்கியென்புனிதன்.

படிகொண்மாமுடிக் கங்கணத்திறைபதம்படுமொண்
முடிகள்யாவையும்படுகழனந்தியெம்முதல்வ
னடிகளேந்துகையுறவடிததொதுக்கியவ்வவையைக்
கடிகொண்மாலையம்பிரம்பொடுதிரிந்தனன்களித்து. (௪௪)

பெய்யுமாமழைமுகிலெனப்பெரியவாய்முழவந்
துய்யமாமதியனையவெண்சுரிமுகச்சங்க
மையவாணனும்பானுகம்பப் பெயரவனுங்
கையும்வாயுமொத்ததிர்த்தனர்செவிகரங்கவிழ்ப்ப. (௪௫)

துதிப்பரோர்சிலர்பாடுவரோர்சிலர்துள்ளிக்
குதிப்பரோர்சிலர்கைகளாற்றேளிணைகொட்டி
யதிர்ப்பரோர்சிலர்நெக்குநெக்குருகிநெஞ்சகமெய்
விதிர்ப்பரோர்சிலராயினரவ்வயிடையிடைந்தோர். (௪௬)

படைக்கலங்களிலொளியிமையவரொளிபரித்த
தொடைக்கலங்களிலொளியரம்பையர்பணைத்தோளி
னிடைக்கலங்களிலொளியெலாமிருளிறைமிடற்றி
னடைக்கலம்புகநிறைந்தனபரந்தபேரவையில். (௪௭)

கடவுளுக்குந்தேவிக்கும்
(வாக்குவாதம.)
வேறு.

இன்னணமவையிடையிருந்தவெம்பிரான்
றன்னொடுவினவுமோர்தகைமையுன்னுபு
கன்னலுமமுதமுங்கைப்பமொழுடை
யன்னைதன்வாய்திறந்தறைதன்மேயினாள். (௪௮)

தலைவநின்னவையிடைச்சார்ந்தவிட்பெரு
நலனுடையவரெலாநனிவெம்பவத
தலைகிலராகியின்படைவோரலா
னிலையிலரோவிதுநிகழ்த்துவாயென்றாள். (௪௯)

விளங்கிழைநன்றுநின்வினாவென்றெந்தைமண்
ணளந்தவனயன்முதலாயினோருமின்
புளையகொளுநாமரூபதொடொன்றுறத்
தேர்ந்துளகிரியையாற்சாகிலாரென்றான். (௫௰)

வேறு.

அனையமேதனுமரூபக்கிரியைகளனைத்துமெல்ல
நினைவுறுசூட்சியொன்றுநீயெனக்குரைத்தியென்னப்
பணிமலைதவஞ்செய்தீன்றபவளவாய்மடந்தைகூற
நனையவிழ்கொன்றைவேணிநம்பனமற்றிதனைச்சொல்வான். ()

போகபூமியினிற்போகதனுவினாற்பொருந்தலாகா
தேகமாமின்பசித்தியம்புறிற்கருமபூமி
யாகமானதுகொண்டன்றியாதலான்ஞாலத்தெய்தி
யோகமாநெறியினின்றோருண்மைசாதித்துக்கொள்வர். (௫௨)

என்றிதுகொழுநன்கூறவிளங்கொடியனையதாயி
னென்றொருமக்கண்ஞாலத்துவமையின்ஞானசித்தி
நன்றுறவுணர்த்தவல்லகுரவன்யார்நவிறியென்னக்
குன்றணிமதியமொப்பக்குனித்தவன்கூறலுற்றான். (௫௩)

தொல்லையிலுயர்சுஞ்ஞானிதூய்நிராங்காரனென்போ
ரெல்லையிறவங்கள்செய்யவெமதுமெய்வடிவந்தானே
யல்லமநாமமைந்தனாயினமனையான்றன்னை
வில்லுறழ்நுதலாய்காண்டன்மிகவுனக்கரியதென்றான். (௫௪)

என்றலுமிமையவல்லியெனக்கரிதென்பதென்கொ
லுன்றனியல்லமன்றனுண்மையையறியவேண்டி
னின்றவர்தமக்கெலாமுமெளிதெனநெகிழ்ந்துரைபப
வன்றினர்புரமெரித்தவணிநகையாளன்சொல்வான். (௫௫)

முனிவுறேல்வறியவுன்றன்மொழியளவல்லன்மாதே
வினைதபுமன்பரன்பால்வேண்டியவடிவனாகி
யனையவாவிழியிற்றோன்றியருளுவனலமதேவன்
றனதியல்பியாவரானுஞ்சாற்றிடற்கரியதென்றான். (௫௬)

மெய்ம்மையிம்மாற்றமாதும்வேறுளார்க்கியான்செய்மாயை
பொய்ம்மலிசெயலிற்றப்பிப்போமெனிற்காண்பலென்று
வம்மலைமகடருக்கியறைதலுநின்றனாற்றன்
மைம்மலிகுழலாய்காண்குமென்றிதுவள்ளல்கூறும். (௫௭)

இன்னணஞ்சூளியம்பியினிவறிதிருத்தியாயிற்
பொன்னவிர்சுணங்குபூத்தபுணர்முலைமடவாய்தோல்வி
நின்னிடைவருமென்றண்ணனிகழ்த்தலுமிமையவல்லி
யென்னுரைதவறாதென்றுநெடுமொழியிசைத்துப்பின்னர். ()

மாயையை-பூதலத்தில்விடுத்தல்

ஆயிடையருகுநின்றதமோகுணவடிவமாகு
மாயையைவிளித்துநீபோயமண்ணிடையல்லமப்பேர்
நாயகன்றனையறிந்துநணுகுதியென்றுகூறி
யேயினளவள்வணங்கியினையதொன்றியம்பலுற்றாள். (௫௧)

(மாயைகூறுறவு)

அல்லமனியல்பறிந்துங்கணைகுவனழுவ்மாயின்
வல்லிதின்வலிந்துபற்றியீர்த்திவண்வருவலென்று
சொல்லினளொருசூள்வேலைசுவறவுண்டவேலென்று
புல்லியவெறும்பொன்றாற்றல்புகல்வதுபோலவன்றே. (௬௰)

(மாயைபூதலத்தில்அடைந்தமை.)

தன்னளவறியாண்மாழ்கித் தண்மதிதவழும்வேணி
முன்னவனவையுணின்றுமொழிந்தவச்சூண்முடிப்பான்
பன்னகமுடிபரித்தபார்மிசைச்செலவைநெஞ்சத்
துன்னினளெய்தினளவ்வொளியிழைமாயைமாதோ (௬௧)

இக்கதியில் (உ-வது) பாட்டுமுதல் (௬) பாட்டுகள் திருக்கைலாயச்சிறப்பும் (அ-வது) பாட்டு அரசாட்சிமண்டபசிறப்பும் (௯-வது) பாட்டு சிவபெருமான் ஆதனத்துற்ற சிறப்பும் (௰-வது) பாட்டுமுதல் (௫) பாட்டுகள்சிவபெருமானதுசிறப்பும் (௧௬-வது) பாட்டு கடவுளிடத்து உமாதேவியாரிருந்தமையும் (௧௭-வது) பாட்டுமுதல் (௯) பாட்டுகள் உமாதேவியார் சிறப்பும் (௨௬-வது)பாட்டுமுதல் (௨௨) பாட்டுகள் மகாசபைகூடுதற்சிறப்பும் பொருள் கொள்க.

இரண்டாவது-கைலாசகதி-முற்றிற்று.

ஆக-திருவிருத்தம்-௬௨.

---

மூன்றாவது,

# மாயைஉற்பத்திகதி.

பூதலத்தைப்பொருந்துபுமாயையென்
றோதலுற்றவொருபிடிநுண்ணிடை
மாதவத்தர்மனங்கள்கலங்குறச்
சாதமுற்றுவளர்ந்தமைசாற்றுவாம். (௧)

(நாட்டுச்சிறப்பு.)

களங்கவெண்மதிநெஞ்சங்கவற்றுமோரர்
துளங்குசங்குடைத்தோன்றன்மணத்தணி
வளங்கொண்மண்மகள்மார்பின்மதாணிபோல்
விளங்குமென்பவினவலதேயமே. (௨)

வாவியாவுமதன்பெருந்துணிசெய்
யாவுமாரனெடுக்குஞ்சிலையிடங்
காவெலாமவன்காகளசாலைகள்
பூவைமார்மனைபோர்க்களமென்பவே. (௩)

பொறைக்கயிற்றிற்புகழையின்சொல்லெனும்
விறற்கயிற்றின்விருந்தைக்குரவர்சொன்
மறைக்கயிற்றின்மனத்தைததிருவைநல்
லறக்கயிற்றினசைப்பவொருங்குமே. (௪)

வறியனுவன்வடதிசைமன்னவ
னறிவிலாளனனந்தனுமாவனோர்
சிறியனுவன்சிலையதன்பூம்பொழில்
வெறியுலாவும்விளவலதெய்தினே. (௫)

(நகரச்சிறப்பு.)

இணையிலாதவினையவளமபல
நணுகிவாழுமவிளவலநாட்டிலவ்
வணியினுபபணமுத்தும்விலையிலா
மணியினமேவுமவணவசைமாநகர். (௬)

படிக்குளீரப்பூலாப்பழுத்தொண்புவி
வெடித்தவாயினனந்தன்மணிவெயி
லடுத்துவானத்தமர்மதியைததொடாக்
கடுத்தவேள்குடைக்காம்பெனத்தோன்றுமால். (௭)

நறவவிழ்ந்தநறுமலர்தோறும்வண்
டுறவருந்தியிருளுற்றொடுங்குமா
லறவர்தங்களகந்தொறுமையமுண்
டுறவர்தங்குகைதுன்னுதல்போலவே (௮)

வாவிச்செங்கமலங்களில்வல்லிநண்
மேவித்துஞ்சிவிடிதருகாலையிற்
காவிற்சென்றுகளிவண்டினங்குயில்
கூவத்தண்மதுக்கொள்ளைகொண்டெனுமால் (௯)

பெடையொடுற்றுப்பிரிவில்லைபைங்கிள்ளைகள்
குடியிருக்குங்குளிர்பொழில்வாய்மலர்ப்
பொடியுதிர்க்கிலவேலளிபோய்வயன்
மடையுடைக்குமதுப்பெருவெள்ளமே. (௧௰)

சேலுலாவித்திரியுநதிப்புனன்
மாலியானைமறையக்கதிர்க்தலைச்
சாலிநீடித்தழைததுவிளைவயல்
காலிளேடிக்கடிதுவிழுமரோ. (௧௧)

வரிக்கயல்செங்கமலம்வரிவளை
யிருக்கையான்மலரம்பிணையேந்தலால்
விரிக்குமஞ்சிறைமென்னடைப்புள்வயல்
செருக்குவின்மதன்சேனைநிகர்க்குமால். (௧௨)

நளிர்கடற்றுயிலுரணன்றன்னுருக்
கொளவளிப்பவர்கையிற்கொடுத்திடும்
வளைபிறக்குமிடமெனவண்புனற்
குளமனைத்துங்குடவளைமொய்க்குமால். (௧௩)

(அகழும் மதிலும்)

வேறு

தாழ்ந்தோருயர்வொன்றுமிகவுயர்ந்தோர்தாழ்வொன்றுமறஞ்
சூழ்ந்தோருரைக்குமுறைகண்டாமதில்சூழ்கிடந்ததொல்லகழி [ச்
தாழ்ந்தோரனந்தன்மணிமுடிமேனின்றன்றுயர்ந்துதடவரையை
சூழ்ந்தோர்வரையினுதிப்பவன்றாட்கீழ்நின்றதுபோய்ச்சூழெயி
லே. (௧௪)

(நான்குவருணத்தார்.)

சொற்போர்புரிவர்சான்மறையாறங்கமுணர்ந்ததொழுகுலத்
விற்போர்புரிவர்நெடியசிலையிராமனனையவிறல்வேந்தர் [தோர்
பொற்போர்புரிவர்பிறர்பொருளுந்தம்போற்பேணிப்புரிவணிக
நெற்போர்புரிவரந்நகரில்வேளாண்குலத்துநெறியினரே. [ர்

(நகரின்குறைவு)

உடுப்போர்க்குடுக்குந்துகில்களாலுண்போர்க்குண்ணும்பொரு ள்களாற்,றொடுப்போர்க்கெடுக்குமலர்களாலணிவோர்க்கணியு ஞ்சுடரிழையா,லடுப்போர்க்கடுக்குமனைகளாற்குறைபாடுடைய தன்றதுதான்,கொடுப்போர்க்கிரப்பாரில்லாதகுறையொன்றுள துகூறுங்கால். (கசு)

(யானைகளுங்குதிரைகளும்)

ஈசனளித்தவொருகோட்டியானைக்கியாங்களிணையாயின்
வாசவனைத்தாங்கிருகோட்டியானையெம்மைமானுமெனும்
பாசவுற்கால்யானையொடுபொண்டிலிழுக்கும்பகடியரிற்
றேசினிரதப்பரிசிறந்தவென்னும்பரிகடெருவகலா. (கஎ)

(நூலாசிரியர்)

மறையுங்கலைகள்பற்பலவுமுழங்குமொலியுமங்கலஞ்செய்
பறையுங்குழலும்யாழுமியம்பொலியுங்கரியும்பரிமாவு
நிறையுந்தெருவிலேறுமணித்தேரினொலியுநிறைகடலி
னறையுந்திரையிற்சென்றுவிசும்பமரர்செவியினடைந்திடுமால்.

வேயைநகுமென்சுடர்த்தொடியதோண்மாதுமையைவிடை
பேயுமகன்றுவரற்கரியகைலமலையைப்பிரிந்தெய்தித் [தொண்
தூயமனமுங்கலநகவருந்தவர்வேள்குவவுத்தோள்வீங்க [டு
மாயைபிறந்தவனவசைமாநகரின்வளத்தையார்சொல்வார். ()

(அந்நகரின்அரசன்சிறப்பு).

வேறு.

இம்மாநகரிற்கரசாகியிருந்துவாழ்வோ
னம்மால்புணருஞ்செயன்மாதரையாகம்வைத்தல்
சும்மாபுகழன்றெனவிந்தையைத்தோளில்வைத்தோன்
கைம்மாறுவேண்டாமழைபோன்மமகாரனென்பான். ()

திறைதானளக்குந்திறல்வேந்தர்க்கரியசீரான்
குறைதானிரக்குமவர்க்கோடிக்குறுகநிற்பா
னிறைதானவெற்புமணிர்நாகமுநின்றுதாங்கும்
பொறைதானெடுக்குமிகுமாற்றல்பொருந்துதோளான்.

இரப்பார்வரினோரடினாலமெளியதன்றிக்
கரப்பார்கரக்கும்பொருளன்றெனவீகைகற்றே
யுரைப்பாருரைக்குமுரையாவும்புகழில்வைத்தோன்
றனைப்பாலுவமையிலையாகத்தருக்கிவாழ்வோன்.. (௨௨)

அவன்மனைவிசிறப்பு)

அன்னான்மனைவிவணர்வார்குழலையவேற்கண
மின்னார்மருங்குறளர்ந்தொல்கிமெலியவிம்மிப்
பொன்னார்சுணங்குவிரிபூண்முலைப்பூங்கொம்பன்னா
ளின்னாரமுதமொழிமோகினியென்னும்பேராள். (௨௩)

ஒன்றானநம்பன்மருங்காயிழையுய்த்தமாயை
குன்றாதவாற்றன்முனிவோருளங்குன்றுமாறு
பொன்றாதபொற்பிங்கிவள்பூங்கருப்போந்துபெற்றா
ளென்றாலிவளுக்கிணையாவினியாரைச்சொல்வாம். (௨௪)

(அவ்விருவருமகவுக்காகநோற்றமை.)

வேறு.

இம்மமகாரனுமோகினியென்னு
மைம்மலிமென்குழல்வாள்விழிமாது
மம்மகவின்மையினாருமொய்த்தி
மெய்ம்மெலிநோன்புவிளைத்தனரன்றே. (௨௫)

(மாயைகருவுற்றமை).

முன்னியநோன்புசெய்மோகினிமாதின்
றன்னுதரத்துமைதண்ணருளாலே
மன்னியன்மாரன்வலப்புயமாடக்
கன்னிகைமாயைகருப்பமடைந்தாள். (௨௬)

(கருப்பக்குறி).

முத்தணிகொங்கைமுகங்கள்கறுத்தாண்
மெய்த்திருமேனிவிளர்த்துநரம்பு
பைத்தனமீதுபரப்பவிருந்தாள்
பொய்த்துயில்கொண்டுபுளிக்குமுவந்தாள். (௨௭

(கருவுயிர்த்தமை.)

இன்னணமைமயிருதிங்களிருந்து
பின்னருமோகினிபெண்மகவீன்று
டன்னிகர்கின்றசலஞ்சலமொன்றிங்
கின்னொளிமுத்தினையீனறதையொத்தே. (உ௮)

(பிறந்துழிவிழாவெடுத்தமை.)

சங்கொடுதண்ணுமைசச்சரிதாளம்
வங்கியம்வெந்துடிவார்முரசங்கண்
மங்கலமங்கைமகப்பெறுகாளி
லங்கசன்வெம்முரசென்னவதிர்ந்த. (உ௯)

*இதுவுமது

தூண்டொளிபோன்மகடோன்றவுவப்புற்
றூண்டகைமன்னவனந்தணர்கொள்ளப்
பூண்டுகின்மாமணிபொன்னிலமற்றும்
வேண்டினயாவும்வெறுப்பவளித்தான். (௩0)

(மன்மதன்செயல்.)

வேறு.

இங்கொருமாயையென்னுமெழின்முளை தோன்றலோடும்
பொங்குறுமுவகைநெஞ்சமபொறுக்கலஙிகியெய்யும்
வெங்கணைமழையுந்தூவுமென்மலர்மழையுமொன்று
வெங்கணுமதனவேணின்றிடையறசொரிந்தானம்மா. (௩௧)

(தவஞ்செய்வோருக்குநேரிட்ட இடையூறு.)

கண்ணகனிலத்தகங்கைக்கரையினுமுழையிடத்தும்
புண்ணியவனத்துமெய்திப்புற்றுமாய்மரமாயுற்றுந்
தண்ணியபுனலிற்றீயிற்சார்ந்துமூண்டுயிறுறந்து
பண்ணியதவத்தோர்நெஞ்சம்பதைத்தனமயலின்மூழ்கி. (௩உ

(முனிவர்கள்காரணமாராய்தல்)

ஐம்பெரும்பூதமெல்லாமடுக்கழிந்தொழியும்போதுங்
கம்பமினமதுநெஞ்சங்கலங்கியதென்னைகொல்லோ
வம்புறசெயலீதிங்குவந்தவாறெவ்வாறென்னத்
செம்பொருளுணர்ந்தசீர்சால்செய்தவரிருந்தகாலை. (௩௩)

(துர்வாசர்வந்தமை.)

தளர்ந்துழியுதவுங்கல்விதானெனத்துருவாசபம்பா
கொளுந்தனிமுனிவர்கோமான்குறுகலுமுனிவரெல்லா
முளங்கனிவரநின்றேத்தியுயர்தவிசிடையிருத்தி
வளங்கெழுமலர்கடூவிவந்தனைசெயதுசொல்வார். (கச)

(முனிவர்கள்விஞ.)

என்றுமெம்முள்ளமெல்லாமெழுதியவிளக்குப்போல
நின்றிடுமின்றன்கோல்லோநிலைதடுமாறுநின்ற
தென்றன்முனிருந்தசெய்யசிறுசுடர்போலவைய
நன்றிதையுணருமாறுநவின்றருள்செய்தியென்றார். (கரு)

(அவருத்தரம்.)

சங்கரியொருகூளாற்றன்றமோகுணவடிவமாகிய
மங்கையைவிடுப்பவன்னாள்வனவசைநகரிற்பிள்ளைத்
திங்களினுதித்தாளின்றுசெய்தவக்கிழமைபூண்டீ
ருங்கணெஞ்சதனாலாற்றலுடைந்ததென்றவனுரைத்தான். (கசு)

(அதனைஅங்கீகரித்தமை.)

அருந்தவமுனிநீகூறிற்றுண்மையேயன்றியெங்கள்
பெருந்தவமுயலுநெஞ்சம்பிறழ்தரற்கேதுவில்லை
யிருநதுளம்வருந்தியாய்ந்தவெம்மிடையையமெல்லாம்
பரிந்தனவருளானீயெம்பால்வருகையினாலென்று. கஎ)

(அதனைவிரித்துரையென்றல்.)

முனிவரர்துருவாசப்பேர்முனிவர்கோன்றனைவழுத்தி
பணிமலைவல்லியேவப்பட்டெழிலுமாயையென்னும்
வனிதையிவ்வுலகில்வந்தவாறுநீவிரித்தியாங்க
ளினிதுணர்வுறுமாறோதுகென்றலுமவனுரைப்பான். (கஅ

(அவ்வாறுரைத்தமை.)

கயிலையோலக்கத்துற்றகண்ணுதலல்லமன்று
ணியல்பினையறிந்தேற்றுரென்றுமையுடனுரைப்ப
மயிலியலறிவவென்றுமாயையைவிளக்கைக்காண்பான
பயிலிருளினைவிடுத்தபரிசெனவிடுத்தாளன்றே. (ககூ)

(அவ்விடையூறுநீக்குமாறுகூறினமை.)

காரணமிதுவேயெங்கோன்கைலையைவிடுத்துமாயை
தாரணிதனில்வரற்குத்தக்கவம்மாயையென்னு
மாரணவிடங்கலந்தமயக்கமல்லமனென்றிட்ட
பேரணிகலுழன்றன்னைநினைந்திடிற்பெயருமன்றே (௪௦)

(இதுவுமது.)

பிணிதபவேண்டில்வாழ்நாள்பெரிதுறவேண்டிற்செல்வ
மணிதரவேண்டிற்கல்வியறிதரவேண்டில்வானம்
பணிதரவேண்டின்முத்திப்பயன்பெறவேண்டிலென்று
மிணையுறுமல்லமப்பேரெந்தையைநினைப்பமென்று. (௪௧)

•(இதுவுமது.)

புகன்றவருளத்திற்றுன்பம்போக்குபுதுருவாசனா
ணகன்றுதன்னிடத்தடைந்தானன்றுதொட்டருந்தவத்தோர்
மகிழ்ந்தருளல்லமன்றன்மலரடிமனசதிற்றாங்கி
யுகந்தவன்புகழ்வாய்வந்தவாறெலாமுரைக்கலுற்றார். (௪௨)

(அவ்விடையூறுநீங்கினமை.)

நெஞ்செனுமகலிலன்பாநெய்நிறைத்துள்ளமென்னும்
பஞ்சுறுதிரியினுச்சிபற்றிடவல்லமப்பே
ரஞ்சுடரிலகவேற்றியருந்தவர்மாயையென்னுந்
துஞ்சிருளகன்றிருந்தார்தொல்லைமாதவங்கள்செய்து. (௪௩

(நூலாசிரியர்கருத்து.)

மந்தரகிரிப்பேர்பெற்றமத்தெறிகடல்போலையர்
சிந்தனைகலங்கிமெல்லத்தெளிந்தமைதெரிந்துரைத்தாம்
வந்துமண்பிறந்தவன்றேமாதவாமனங்கலக்கும்
வெந்திறன்மமகாரன்றன்மகடிறம்விளம்பலுற்றாம். (௪௪)

(தந்தைநாமகரணமுதலியசெய்தமை.)

(வேறு.)

சூர்ந்தம்வலியுமிரும்புபோற்கண்கடன்னோடுறப்பிணித்து
நேர்ந்தமனமோரணுவென்னனியாயமன்றென்றம்மனத்திற்
போர்ந்தவாசைப்பெருங்கடலைப்புகட்டுமகனைக்கண்டுவெந்து
வேர்ந்தன்மாயையெனுநாமம்விளம்பிச்சிறப்புப்பலசெய்தான். ()

## மோகினிமகளைவளர்த்தமை.

மாயைப்பெயர்கொண் மகளைநறுமஞ்சடிமிர்ந்துகணைக்காலி
னேயக்கிடத்திநீராட்டியிணைக்கணுந்திநீரூதி ·· [வி
நேயத்துகிலின்மெய்துடைத்துநெகிழ்மென்முலையோடுறத்தழு
வாயிற்றிவலைகொடுதேய்த்துமண்பொட்டணிந்துநீறிட்டு. ( )

கண்ணிற்கமையணிமையெழுதிக்காற்குச்சதங்கைபொறறண்டை
நண்ணப்புனைந்துபொன்னரைஞாணுவிற்பூட்டிப்புலியுகிர்சேர்
வண்ணப்பசும்பொனணிமார்பிலவனைந்துசிறுமென்றொடிசேர்த்
திப்,பெண்ணிற்கரசிதிருநுதற்பொற்பிறைமேற்சுட்டியொன்ற
ணிந்து. (௬௭)

போக்கும்பொருளாற்கண்மிச்சில்போக்கியன்பான்முலையூட்டித்
தூக்கும்பவளக்காற்பசும்பொற்றொட்டின்மலியக்கிடத்தியே
பார்க்குஞ்சுவைவானமுதமேபார்வேந்தணியேயென்றுயரந்
தீர்க்குங்கரும்பேகண்மணியேதிருவேயென்றுசீராட்டி. (௬௮)

மிடியவொருசெய்யாளனச்செய்விளையக்காக்குஞ்செயல்போலப்
படியில்நல்விவிரும்பினோன்பாடம்போற்றுமதுபோல .
கொடிவில்செங்கோன்மனுவேந்தனுலகம்புரக்குமுறைபோலக்
கொடியநோன்புசெய்தீன்றகொடியைவளர்த்தாள்மோகினியே

(மாயைவளர்தற்சிறப்பு.)

கள்ளமாயைதன்னெழில்போற்கண்டதில்லையென்னமிக
வுள்ளம்வியந்துதலையசைப்பதொப்பவசையுஞ்சுடர்பார்த்து
மெள்ளவிரலொன்றனைச்சுவைத்துமிளிர்பூஞ்சதங்கைத்தாளு
தைந்து,விள்ளுமலர்வாய்குவித்தழுதுமீளநகைத்துங்கிடக்கு
மால். (௭௰)

மாயைகவிழ்முகங்கவிழ்ந்தமதனனிருந்தானவளிருப்பப்
போயசிலையொன்றெடுத்தெழுந்தான்பொன்னிலியன்றபாலை
யெழ, மேயவனங்கவேண்டந்தான்வேந்தன்பயந்தமகண்டப்பத்
தூயதவஞ்செய்தைந்தவித்ததுறவினோர்பாலோடினான். (௭௧)

குழலும்யாழுமினியவெனக்கூறு வண்ணமென்கனிவாய்
மழலைமொழிந்துமுடற்கினபமருவவோடிமேல்விழுந்தும்
விழையுமமிழ்தின்மிகவினிமைவிளையநுகருஞ்சுவையடிசில்.
செழியசிறுகையாலளைந்துஞ்செய்தாண்மோகமீன்றோனை.

பரவுபெருஞ்சீரல்லமனைப்பறறவந்தமதியாற்றன்
னுருவநிழலைப்பற்றநினைந்தோடியோடிகைகலுழ்ந்திடுவாள்
பொருவின்மதியமென்முளிந்துபொங்குமழலைவீசாமன்
மருவியுறவுகொள்வாளம்போல்வாவாவெனவழைத்திடுவாள்.

(பெதும்பைப்பருவமடைந்தமை.)

மாதிப்பரிசுதந்தைதாய்மகிழவளர்வுற்றாசிருந்த
நீதிக்கிழவனிறப்பவனெறிசேரிளஞ்சேயவன்றவிசின்
மீதுற்றதுபோன்முன்முளைத்தவெண்பல்விழவேயெயிறுதிப்பப்
பேதைப்பருவங்கடந்துமேற்பெதும்பைப்பருவநண்ணினாள்.

(அப்பருவத்தின்சிறப்பு)

செய்யவல்லகம்மியன்செய்சிங்கஞ்சுமந்தமணியணைமேற்
றையவந்துமணிமௌலிப்பாரோங்கிருக்கும்பரிசுபோல்
வெய்யகுதம்பைவளர்த்தகலவிழுநீர்வள்ளைக்காதினிடைத
துய்யபசும்பொன்மணிகுயின்றதுணைத்தோடமையதோன்றி
னாள். (௫௫)

(அப்பருவத்தின்வளர்ச்சி.)

மட்டுக்கணைவேளரணைகவளர்த்தகுழற்காடலர்விரவிக்
கட்டுற்றதுநமபரனகளசதிறகம்வுமவிழிகள்சிறிதுற்ற
முட்டித்துறவாமபறவையமனமுடியிற்படுதன்மெல்லமறைந்
தெட்டிப்பார்ப்பவெனமுகங்கொண்டெழுந்தமார்பினிளமுலை
கள். (௫௬)

அன்னநடையுமன்னமிலாவையர்நடையுந்தளர்வெய்தக்
கன்னிநடைக்குநடைகற்றாள்கரும்புகசக்குமொழிபெற்றாண்
மன்னுமலர்வீழ்சுரும்பனையமைந்தர்பார்வைக்குறிப்புணர்ந்தா
டன்னையரியளெனவறிந்துதானேமனத்திற்றருக்குற்றாள். ( )

இந்தக்கன்னிமதிமுழுநோக்கெய்திச்செவ்வாய்வலியடைந்து
சந்தச்சிங்கந்தனையடுத்ததக்கவரவின்வலிசார்ந்து
மூன்றைக்கொடிமீனத்தலைவன்முனிவாகுங்கைவெல்லக்
கந்தப்பகழிபலவேழக்கருப்புச்சிலையிற்றொடுத்தனனால். (௫௮)

(மங்கைப்பருவமடைந்தமை)

ாகமாகப்பொங்கியெழும்பதமேபோலப்பொங்குமெழின்
மோகமாயைதன்பருவமுன்னிமுடிவேந்தயனுமா
ாகுமாடமொன்றுபுரிந்ததன்கட்கல்விபற்பலவும்
போகுமாதர்பலர்சூழப்போற்றியிருப்பச்செய்தனனால். (ருகூ)

(பொழுதுபோக்கல்.)
வேறு.

வாய்த்துளவம்மணிமாடநண்ணுபு
பாததொடைபற்பலபயின்றுநதநிரி
நாத்தனியாழைமாணுக்கனெனறுதான
பேர்த்ததுளவிரல்களாற்பேசுவித்ததுமே (சு0)

அங்கொருமடவரலதிர்ப்பத்தண்ணுமை
மங்கையர்சிலரிசைமரபிற்பாடுறக்
கொங்கவிழ்மலரளிகுமுறத்தென்றலாற்
பைங்கொடியசைதல்போற்பாடியாடியும். (சுக)

வருமுலையிறைக்கிணையாகவந்துறக்
கரமெனுமேவலன்புடைக்குங்காட்சிபோல்
விரைமலரோதிமேன்மிஞ்றிரைந்தெழப்
பருமணிகுயின்றமென்பந்தடித்துமே. (சுஉ)

பூந்தொடைவார்குழல்புனைந்துநல்விரைச்
சாந்தமுநானமுந்தயங்கப்பூசியு
மேந்திழைபலவுறப்பிசையத்தாங்கியு
மாந்துறுசுவைபலவகையமாந்தியும். (சுங)

தீங்கனிபாலொடுசெம்பொற்பஞ்சரந்
தாங்குறுபைங்கிளியூட்டித்தன்மொழி
யாங்கதுபயில்வுறவளித்துங்கற்பகப்
பூங்கொடியனையவள்பொழுதுபோக்குநாள். (சுச)

(அரசனும்ஆசிரியனுமணத்தலைவனைத்தேர்தல்)

தென்னவன்செம்பியன்சேரன்கொங்கண
மன்னவன்மாளுவன்மகதநாட்டிறை
யென்னுமிங்கிவர்தமுள்யாவர்கண்ணதோ
கன்னிதன்மணவினைக்கடனென்றுன்னியே. (சுரு)

ஆய்ந்திருந்தனன்மமகாரனாயிடைப்
போந்தனனவன்குருவாகப்போற்றுறுஞ்
சாந்தவாங்காரனாந்தகுதிப்பேரினோன்
வேந்தனங்கெதிர்கொளீஇவிதியிற்றாழ்ந்தனன. (சுசு)

மன்னவன்வந்தனைமரபிற்கொண்டவன்
கன்னிதன்னெழினலங்காணப்போயினா
னன்னவளெதிர்நடந்தாரியன்றனைச்
சென்னியின்வணங்குபுசிறப்புச்செய்தனள் (சுஎ)

மாந்தளிராலிலைவயங்குகோங்கரும்
பேங்தெழின்மனைமலரொய்தியற்புதப்
பூந்துணர்வல்லிநேர்பொனனைக்கண்டவ
னோர்ந்தனன்காரணமாதென்றுன்னியே (சுஅ)

மாதுருவுறுகுறிமதித்தறிந்தவ
னாதரவொடுமுடியரசைநோக்கிநின்
கோதையையார்கொலோதோளிற்கொள்பவ
ரோதுகவென்றலுமுறைத்தன்மையினான். (சுகூ)

உணர்ந்திலனடியனேனொருநங்கோதைதன்
மணந்தனக்குரியவர்மனிதாவானவா
கணங்களுளொருவரைக்கருத்திற்றேர்ந்துநீ
யிணங்குறவெனக்கிவணியமபுயென்றனன் (எ0)

(தலைவனைத்தெளிதல்)

கொங்கவிழ்தொடையினாய்கூன்கொக்கன்றுவான்
கங்கையையடைவதுகடவுளன்னமே
மங்கையையணைபவர்மனிதரல்லர்நஞ்
சங்கரனேயிவடலைவனென்றனன். (எக)

(ஆசிரியன்அரசன்ஐயமகற்றல்)

மாலுநான்முகனுநாடரியவள்ளலிவ்
வேலவார்குழலினாட்கெளியனோவென
வாலமார்மிடற்றினனன்பர்வேண்டிய
கோலமாய்நணுகுமீதுண்மைக்கூற்றென்றான். (எஉ)

(உபதேசஞ்செய்தமை.)

இன்னணமரசனோடியம்பிமாயையாங்
கன்னியைவிளித்தவள்கருத்திணங்குறச்
செந்நிலைதனையுபதேசித்தேகினான்
றன்னிகர்குருபரன்றனதிடத்தரோ. (எங)

(நூலாசிரியர்)

குருவருண்மொழிநெறிகொண்டுமாயைதான்
வரவணவசைநகர்மதுரைநாதனைப்
பரவினளருச்சனைபயின்றுபூசனைக்
கருவிகண்முழுவதுங்கடைப்பிடித்தரோ. (எச)

மூன்றாவது மாயையுற்பத்திகதி முற்றிற்று.

ஆக-திருவிருத்தம்-கஙச.

நான்காவது

## மாயைபூசைகதி.

---

பதியையமேவுறுங்காதனெஞ்சகத்தினுட்பதித்து
மதுரைநாதனைவரன்முறைவரிவிழிமாயை
யுதயகாலையிற்பூசைசெய்நாள்களுளொருநாள்
விதியையோதுவன்குவிமனத்தவர்கொளவிரித்து. (க)

(சூரியனுதித்தல்.)

விதுவைச்சேய்மையிற்கண்டலர்குவளைகண்மெலிய
முதிர்விற்பூணிளமுலையெழின்மாயைதன்முகமா
மதியைச்சேர்தருவரிக்கருங்குவளைகண்மலரக்
குதிரைத்தேரவனெழுந்தன்குணத்திசைக்குன்றில். (உ)

(நீராடல்)

அனையகாலையிலன்னமென்றூவிபெய்யணைமேற்
றணியண்மாமயில்போற்றுயின்றவடுயிறணந்து
வினையி[illegible]ன்ம்விமஞ்சனச்சாலையுண்மேவி
யினியவாசநீராடினள்சேடியரோர்ந்த. (ங)

(கலைதரித்தல்.)

விலைவரம்பறியாமணிக்கோவைசூழ்விளிம்பு
கலையணிந்தொருதலைமுலைமேலலங்கரித்தாண்
முலையொடுந்துகில்கண்டநாண்முதற்றொடர்ந்தன்றோ
விலகுறுங்கலைவல்லவாகடபடாமென்றல். (௪)

(அலங்காரமண்டபமடைந்தமை)

மணியமைந்தபொற்பாதுகையொருத்திமுன்வைப்பப்
பிணியவிழ்ந்தசெந்தாமரைப்பதங்கொடுபெயர்ந்தே
யணியணிந்திடுமண்டபத்தணைமிசையமர்ந்தாள்
பணியணிந்திடுமங்கையரடைந்தனர்பலரோ. (௫)

(ஆபரணந்தரிக்குமுறைகள்)

மாரவேள்சிலைவளைந்திடப்பூட்டியவண்டு
நாரியோர்தலைநெகிழ்த்துவிட்டெனவொருநாரி
காரவாமலர்குழற்சனிகைபுனைந்தியற்றி
வீரவேனெடுங்கண்ணிதன்முதுகுறவிடுத்தாள். (௬)

பின்னும்வேணிவார்குழலெனுங்கரியபேரரவ
முன்னமார்தருசுடர்களையுமிழ்ந்திடுமுறைபோற்
கன்னிவாணுதன்மிசைக்கதிர்ப்பிறையொடுகவினப்
பொன்னவாஞ்சுணங்கவிர்முலையொருத்திகைபுனைந்தாள்

ஓதியாகியவறன்மிசைச்சுவடுறவூர்ந்து
தீதிலாதவொண்சந்தனத்திலதவெண்மதிக்குப்
போதுமோர்சிறுபாம்பெனமயிர்வளிர்ப்பொருந்தச்
சோதிமாமணிச்சுட்டியொன்றொருத்திதூக்கினளால் (அ)

வேனலம்பதிகொலைவிடமூட்டியவெவ்வேன்
மானவஞ்சனமெழுதியவிழிபொரவரலாற்
றுணதன்பகைதனைத்துணைகொண்டுறுந்தகைபோற்
பாணலஞ்செவிமிசையணிந்தனளொருபாவை. (௯)

அடுத்துமாதவமழிமினென்றனங்கவேடமக்கு
விடுத்தவோலையைக்கண்கடம்மேற்பழிவிரும்பிற்
கொடுத்தவேண்மிசைசிந்தைகூறுதற்குவைத்திருத்தல்
கடுத்துவாழ்தரவொருத்திபொன்னோலைகாதணிந்தாள். (௰)

தன்னைநிந்தைசெய்வெண்ணகைமேற்பழிசா
மன்னியங்கதுங்கரறவாழ்மனைவாய்தன்
முன்னிறந்திடுவேனெனஞான்றுகொண்முறைமை
யென்னவெண்மணிமூக்கணியொருத்திநின்றிட்டாள். ( )

கற்றையங்குழனறுமலர்த்தொடையொடுகனமா
யுற்றணங்குமென்றிலகுபூணபிடித்ததையொப்ப
விற்றயங்குவாணுதலெழின்மாயைதன்மிடற்றிற்
பொற்றடந்தகட்டணியொருமடவரல்புனைந்தாள். (௧௨)

கன்னியத்தம்வந்தினமணிக்கற்கடகத்தின்
மன்னியுற்றதற்புதமெனவளைபலகாக்க
வின்னுதற்கருங்கண்மடமாதுகைவிளங்கப்
பொன்னினற்கடகம்புனைந்தனளொருபூவை. (௧௩)

ஆயுமின்சுவைதரச்செலுங்கையுடனடுத்து
வாயினெண்கவின்காணியமருவுறுமாபோன்
மாயைதன்கையிற்பொற்கடகத்தின்முன்வனைந்தா
டீயசெம்பவளங்களைக்கோத்தொருதோகை. (௧௪)

மங்கலத்தொழிலாடவர்மனநடுங்கிற்காக
குங்குமப்பெருஞ்சேற்றினைக்குழித்திடுகற்போன்
மங்கையர்க்கொருதிலகமாகியவெழின்மாயை
கொங்கையிற்புனைந்தனளொருபெண்மணிக்கோவை. ( )

பாயும்வெண்டிரைக்கருங்கடனிலச்சுமைப்பாம்பி
னாயிரம்படங்களுந்திறையிட்டனவனைய
மீயிலங்கொளிவிரிமணிமேகலைவேய்ந்தாண்
மாயைமங்கைதனல்குலினொருதிருமடந்தை. (௧௬)

கறையடிக்களியானையின்வரவினைக்கண்டு
மறுகினுற்றவரிரிதரமணிமருங்கிடல்போ
லுறுதவத்தினரறிந்தனரோட்டொண்ணுதற்கு
நறுமலர்ப்பதத்தணிந்தனள்சிலம்பொருநங்கை. (௧௭)

(சந்தனக்குழம்பணிதல்)

கூடைமென்மலர்மணத்திறலறிந்ததைக்குறுகப்
பாடும்வண்டினஞ்சூழ்தல்போலிளைஞர்கண்பரப்பத்
தேடரும்பொருளனையகட்குறுநறுந்தேய்வை
பீடுறுங்குவிமுலைக்கணிந்தனளொருபேதை. (௧௮)

(கண்ணாடிதெரித்தல்)

நின்றன்விம்பமேநினக்கெதிரன்றிவேறில்லை
யென்றுகண்கொளத்தெளிந்தபோரடியொன்றெடுத்தாள்
குன்றெனுங்குவிமுலையவளொதிரகொடுங்குழைமேற்
சென்றுசென்றுபாயரிமதர்மழைக்கண்ணார்தெரிவை. (௧௯)

(மாயையின் விளக்கம்.)

வீரவேள்வளையாதசெங்கரும்பன்வில்லி
ஞரிமேலிடாமலாமறுவிலாநகைமதியங்
காருறாதமின்கடற்பிறவாதவினனமுதம
வேரிலாதபூங்கொடியெனவிளங்கினண்மாயை. (௨௰)

(நூலாசிரியர்)

மாதரிவ்வகையணியலுமதுகைநாயகன்றன்
பாததாமரையருச்சனைப்பொருள்கள்பற்பலவு
நீதியாலமைந்தனவினிநீகிரிலெம்பிராட்டி
போதுவாயெனவொருமடமாதெதிர்புகன்றாள். (௨௧)

(பூசைக்கிச்செல்லல்)

மயிலெழுந்தெனவெழுந்தனள்கோமகள்வாழ்த்திக்
குயிலெழுந்தெனவெழுந்தனமடந்தையர்குழாங்க
டயிலெழுந்தெனவெழுந்தனநூபுரத்துழனி
வெயிலெழுந்தெனவெழுந்தனமணியணிவிளக்கம். (௨௨)

பொன்னிலங்கியசிவிகைமுன்கொணர்ந்தனர்பொறுப்போ
மன்னியங்கதையேறினண்மதர்விழிமாயை [ர
சின்னம்வெண்பணிலம்பணைதண்ணுமைதிமிலை
முன்னிரைந்தனமதியெழக்கடன்முழங்குதல்போல் (௨௩)

ஆன்றிரட்டுறுங்கண்ணனீவாய்க்குழலிஃதணிபூண்
மான்றிரட்டுறுமெனக்குழலூதினர்மலர்விற்
கோன்றிரட்டியவமுதனையாண்முனங்குறுகி
மூன்றிரட்டியமுகமுடைமுருகனுமுருக. (௨௪)

வயங்குமாயையங்கரும்பினிற்றாழ்ந்தவர்மாவி
னுயர்ந்தமாதரார்நற்றிருந்தொழுகுகண்மலரா
நயந்துசூழ்தருமளியினண்ணினர்பிறர்காலா
வியங்குமாதிருபுடையினுமிடையறவீண்டி. (௨௫)

வேளித்தனன்றன்குடையெனக்குடைவிதிர்க்கும்
வாளெனப்பிறழ்மதர்நெடுங்கண்ணிபான்மருவக்
காளமொத்தகண்மடந்தையர்பலரிளங்கமுகின்
பாளையொத்தவெண்கவரிவீசினரிருபாலும் (௨௬)

காமவெந்தழன்மூட்டல்போற்கடிமலர்ச்சிவிறி
தாமஞ்சந்தனபொய்க்கணைசொரிந்துவிற்றடக்கைக்
கோமகன்றிருந்திழையுளமறிதல்போற்குறுகிப்
பூமடந்தையையென்றவர்பூமழைபொழிந்தார். (௨௭)

பாகுவெள்ளிலைசந்தனங்குங்குமம்பளித
மோகைமான்மதம்வண்டிமிர்நறுமலரொலியல்
பேர்கெழும்பணிப்பெட்டிமென்றுகிலுடைப்பேழை
தோகைமார்பலர்மருங்கினிற்சுமந்துபோயினரால். (௨௮)

கொங்கையங்குவிமுகிழ்விழிக்கயலிதழ்க்குமுத
மங்கையம்புயமுந்தியஞ்சுழியிவையடுத்துப்
பொங்குறுங்கவினீர்பெருகாற்றினைப்புரையு
மங்கலந்திகழ்வுறுமணிமாளிகைமறுகு. (௨௯)

திங்கள்வாணுதன்மடந்தையர்செஞ்சிலம்பொலியுஞ்
சங்கினோடணிகலன்களின்சிற்றொலிதாமுங்
கொங்குலாமலர்த்தொடையளியிசைகளுங்குழுமிப்
பொங்குமாழியிற்பஃறுளிபெருகுதல்போன்று. (௩௦)

துன்றுபெண்படைசூழ்வரமாயையந்தோகை
வென்றியங்கனன்மழுவினோன்விழியினால்வேளைக்
கொன்றதென்னெனக்கேட்பமென்றுளவலிகொண்டு
சென்றுறுஞ்செயலென்னவத்தெருவிடைச்சென்றாள். (௩௧

சேடியர்களைக்கண்டஆடவர்அறிவழிந்துபுகல்தல்.

வேறு.

அரிமதர்மழைக்கணல்லரிவைதன்புடை
ஒருமடவரலியர்வனப்புக்காண்டலு
மெரிபுரைவிழியரியேறுபோல்பவர்
கரிநுகர்வெள்ளிலங்கனியையொத்தனர். (௩௨)

இடையொருசற்றுவாணுதல்சற்றேழையர்
படைவிழிசற்றுவாய்ப்பவளஞ்சற்றிணைக்
குடமொருசற்றிவண்கொள்ளைகொள்ளநம்
புடைபெயரறிவெலாம்போயிற்றேயென்பார (௩௩)

இனத்தியல்பரமறிவென்பதுண்மையே
மனத்துயர்செயுமயன்மாற்றுநீறுதா
னனிச்சமெல்லடியினார்றுதலடுத்தலும்
பனித்துடல்வெதும்புமால்படுத்தலாலென்பார். (௩௪)

தொல்லைநஞ்சடர்துயர்சொலக்காததவன
வல்லிபங்குடையருண்மதுகைநாயகன்
செல்லுமங்கையர்விழிநஞ்சுசெய்வதுஞ்
சொல்லுதுமவனுடுதொழுதுநாமெனபார் (௩௫)

இக்குழுமகளிருள்யார்வனப்பினன்
மிக்கவளெனத்தமைவினவினொதிர்
முக்கனிகளுட்சுவைமுதிர்ச்சிபெற்றுள
தெக்கனியதனைநீரியமபுவீரென்பார் (௩௬)

கரும்பினுமினியசெங்கயற்கணாரிளங
குரும்பையும்பயன்படாக்கோவைதன்னையும
விரும்பினமுலகர்முன்வீணினெஞ்சகம்
வருந்துதனைகைதருமடமையேயென்பார். (௩௭)

விடங்குலாமதர்விழிவிரைத்தண்பூங்குழ
னுடங்குநூலிடைப்பிறைநுதற்பொற்கொம்பனார்
குடங்கணுநுமிளங்குவவுக்கொங்கைபோ
லுடம்பெலாமுடினுலுய்யலாமென்பார். (௩௮)

இவ்வணங்கருத்தழிந்திளைஞர்மாழ்குறக்
கொவ்வையங்கனியிதழ்க்கோதைமாரொடு
மௌவலங்குழலெழின்மாயையென்பவ
ளவ்வரங்கோயிலினருகுபோயினள். (௩௯)

(ஆலயமடைந்தமை).

சிவிகையினிழிந்துதன்சென்னிதாங்கிய
குவிகையினெடுபுகாக்கோபுரத்துள்வெண்
கவிகையனெனுமமகாரன்கன்னிகட்
செவிகையினணிபரனெதிர்சென்றுளரோ. (௪௦)

(பூசையின் துவக்கம்)

வேண்டியவனைத்தையுமேவன்மெல்லிய
ராண்டருகுறவமைத்தளிப்பமாயைதான்
காண்டகுநுதல்விழிக்கடவுட்கன்புளம்
பூண்டனளருச்சனைபுரிதன்மேயினாள். (௪௧)

(நிர்மாலியங்களைதல்)

ஆதியவரன்முறைசெய்தருக்கிய
மாதியகொடுபரனணிந்திருந்தபூ
வாதியகளைந்துமந்திரமறைந்துநம்
மாதியைமஞ்சனமாட்டன்மேயினாள். (௪௨)

அபிஷேகமுறைமை.

வேறு.,

தயிலமுடனுணிடத்தைந்தையமுதநறுநெய்பாறயிர்செழும்தேன் வயலினெழுகரும்புடைத்துக்கொள்சாறுபழம்பிழிந்தமதுரச்சாறு, புயலளவுதாழையிளநீர்நறுஞ்சந்தனக்குழம்புபோற்றூலினியலினமைதபனமிவையொன்றன்பினொன்றுமுறையிறைவற் காட்டி.

(சந்தனம் அட்சதை).

சங்குலவுமென்கைநெடுஞ்சுடரிலைவேல்விழிமாயைசாம்பற்பூத்து, மங்கலமாகியமேனிமுழுவதுஞ்சந்தனத்திரளைமலியச்சாத்தித்,திங்களொளுமொருசிறுகூன்முதுகிப்பியீன்றதெனச்சினவெள்ளேற்றான், கங்கைமுடிமீதினில்வெண்ணிலவெறிக்குநித்திலவக்கதையுமிட்டாள். (௪௪)

(மாலை பரிவட்டம் ஆபரணம் .

பிறைதவழுநெடுஞ்சடையெம்பெருமானைச்சார்ந்துசர்ப்பபிராந்திமேவ, நறுமலர்மென்றொடைமாலைபலவனைந்துகூர்ங்கோட்டுநால்வாய்ச்சிற்றக், கறையடியீருரிசுபந்ததிருமேனியழகுறநுண் கலைபுனைந்திட்,டிறைவனெலும்டணிநாணவிர்மணிப்பூண்பற்பலவுமெடுத்தணிந்தாள். (௪௫

(கஸ்தூரி அன்னநிவேதனம் தாம்பூலம்).

நற்றாமங்கமழ்நித்தியகல்யாணிமணாளற்குநானஞ்சாத்திப்
பெற்றானங்கடிதலிலாக்கறிமருவுபோனகங்கள்பிச்சையல்லான்
மற்றானொன்றில்லாதபெருந்தகைக்குநிவேதித்துவண்டுகிண்டி
யுற்றாதுங்கடிமலர்மென்குழன்மடவாள்வெள்ளிலையுமுவந்தளி
த்தாள். (௪௬)

(தூபம்தீபம் உபசாரம் வாத்தியம் தோத்திரம் பிரகாரம்).

நறியபுகைசெழுஞ்சுடர்மென்சிவிறியொடுவெண்கவரிநாடுமோடி
நெறிமுறையினெடுங்கடல்போலியமுழங்கநின்றுதவிநிமலன்ற
ன்னைப், பிறைநுதலிவ்வகைபூசைபுரிந்துதுதிபலசெய்துபெரு
குமன்பான், மறைபுகலுமஞ்செழுத்துமறைந்துவலம்வந்துமு
னம்வணங்கிப்பின்னர். (௪௭)

(நடனசபையைஅடைதல்).

அன்பினுளமுருகிவிழிசொரிநீராலெழுதியமையழிந்திருப்பப்,
பொன்புனையும்வடிமெட்ர்பொடிப்பவெயர்வாணுதலின்பொட்ட
ழிந்து, மின்புனையுநெடுஞ்சடிலப்பொன்மலையினணைந்தவெள்ள
மூழ்கி, யின்பினடிப்பவனென்னவந்துநடநவிலரங்கதெய்தின
ளால். (௪௮)

(நடன அலங்காரம்).

அரங்கினிடைநடநவிலுஞ்செயற்கேற்பவுடையணிந்திட்டரும
பைவென்ற, குரும்பைமுலையினைவம்புகொண்டணிந்துதவங்க
ளெல்லாங்கொள்ளைகொள்ளுங், கருந்தடங்கண்மலர்க்கோதை
சிற்றடியிற்கைபுனையக்கற்றமாதர், சுரும்புமுரன்மல்லிகைமெ
ன்போதனையசிறுசதங்கைதுளங்கவார்த்தார். (௪௯)

(தாளம மத்தளம் வீணை).

மாயைமுலைகளிணையெனவென்முன்றானும்வந்ததெனவலக்கை
த்தாளம, போயிடைக்கைத்தாளமதைப்பொறாமையினாற்றாக்
குதல்போற்புடைத்தொலிப்ப, வாயுனாக்குமொழிபோலத்தண்
ணுமைசெங்கைகளால்வார்த்தைசொல்ல, மேய்கலைப்பெண்வி
ளர்ப்பவெழினமாதரிசைபாடவீணைகொண்டு. (௫௰)

(நூலாசிரியர்)

என்றொருகையோடெமற்போர்புரிகவெனநிற்பவள்போலிடையி ஞேர்கை, மன்னியுறவைததொருகைநீட்டியரனெதிர்நின்றும்மா யைவல்லி, கன்னன்மதன்றனைவருகவெனவிளித்தல்போற்றழ நகக்காற்சதங்கை, பொனனினியவொருபாவைநடிக்கின்றதெ ன்னநடம்புரியலுற்ருள். (௫க)

(நடனம்).

வேறு.

தண்ணுமைவிளநகலுறதாளமிசையெல்லாம
வண்ணமலாமெல்லடிமுழிச்சதியினிற்பக்
கண்ணிணைகொள்பல்வளையகைவழிநடப்பப்
பெண்ணமுதமன்னவள்பெயாந்தனணடித்தாள். (௫உ)

வாயுரைசெய்சொற்பொருண்மலர்க்கரமுரைப்ப
மீயுயர்விசுமபினெழுமென்புளொலியெல்லாம்
பாயொளியபஞ்சுறபதத்துறமிதெறுப்
பேயொடேநடித்தவிறைபிதறுறநடிததாள (௫௩)

(நூலாசிரியா)

அந்தணனிருநகலையணங்கினையுமிழ்ந்தான்
செந்திருவைநேமியிறைசியெனவெறுத்தா
னிந்திரனருந்சியையெண்ணிலன்மறந்தான
பைந்தொடிநடிப்பநரர்பட்டதெனுரைப்பாம் (௫௪)

பொன்னெயிலிஞென்றியபுழைக்குண்முகமவைத்துந்
துன்னிமுனாநின்றவாதோமிடையிவர்ந்து
மின்னெனநடமபுரிபுமெலலியனமருநகு
லென்னும்வெளிகாணியவிடாப்படுவாமைந்தர். (௫௫)

பற்றுமனமோடியிருபார்வையினுமெய்தி
மற்றையபுலன்களைமறந்துநடமாடும்
பொற்றொடியைநண்ணவுயர்பொன்மதிலுறுப்பி
னுற்றபொறிபோலசைவொழிந்திளைஞர்நின்ருர். (௫௬)

(பிரசாதம் அளிததல்).

இளங்கொடிமருங்குலவளின்னணநடிப்பக்
களங்கனியையென்றமணிகண்டனையருச்சித்
துளங்குளிரருந்தவனுவந்திறையணிந்த
வளங்கெழுமுசந்தமலர்மாலையொடளித்தான். (௫௭)

(அவைவனற்றல்)

வணங்கிமதுகேசனிருமாலியமதேற்றங்
கணங்குமடவாருடனரங்கிடையிருந்தா
ணுணங்கிழைமருங்குன்மிகநோமெனவிரைந்து
பிணங்குறுசதங்கையழுபிள்ளையிணடங்க. (௫௮)

(நூலாசிரியர்)

மைத்தடநெடுங்கணிளவல்லிநிகர்மாயை
பத்தியொடருச்சனைபயின்றதையறிந்தா
னித்தனுலகெங்கணுநிறைந்தவனனாதி
முத்தனருளல்லமமுதற்பெயரினானே. (௫௯)

நான்காவது மாயைபூசைகதி முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௨௧௫.

ஐந்தாவது.

## பிரபுதேவர் வந்தகதி.

---

நிரந்தரமடியார்வேண்டுநினைவெலாநிரப்பாநின்ற
பெருந்தகையல்லமையன்பெயர்ந்தொருமனிதனாகி
வருந்துறுமயன்மனத்தால்வந்தனைபுரிந்தாடன்பாற்
பொருந்துறுபவன்போற்செய்தபுணர்ப்பினைப்புகன்றுரைப்பாம

(நூலாசிரியர்).

தாமுறுநுகர்வும்வீடுந்தந்திடவல்லன்றானே
யாமெனவியம்பலாலெம்மல்லமதேவனுண்மை
நாமமுமறையவேறோர்நாமமுற்றம்மாயைக்குக்
காமியவினைப்பயன்றான்கடைப்பிடித்தருளவெண்ணி (௨)

(மாயைமயங்க அல்லமன் வடிவுகொள்ளல்).

கதந்தருதிருநுதற்றீக்கண்ணினானீறுபட்ட
மதன்செயல்செய்யவன்றான்வடிவுதான்கொண்டதென்ன
முதிர்த்தழகொழுகுமாறுமுகங்களுட்சிறந்தவொன்றோ
டெதிர்ந்துளமுருகவென்னவிளமையோடழகுவாய்ப்ப. (௩)

அவிர்சடைமுனிவர்மாதரழுங்குறக்கொண்டகோலங்
கவினும்வடிவங்கொள்ளக்கற்றுமுன்விட்டதென்னக்
குவிமுலைமகளிராவிகூட்டுணுங்கோலமென்னப்
புவியுறுமிரவியென்னப்பொங்கொளியுருவொன்றுற்றான். (௪)

விளிம்புறநடுக்களங்கமவீழ்ந்துசூழ்மதியொன்றுண்டேல்
வளங்கெழுமயிரொழுங்குவள்ளல்வாண்முகநிகர்க்குந்
துளங்குறுமுந்திமேற்போய்மார்பிடைத்தோன்றுரோம
மிளங்கருநளினமுண்டேலேய்க்குமென்றியம்பநின்றான். (௫)

விலைவரம்பறியாவாடைவிரித்துடுத்தரையிலங்க
மலைவருமபுதியசந்தமான்மதங்காதநாறக்
கலைவரம்பறிந்துளோர்தங்கருத்தினுக்கரிதாயென்புன்
றலைவருங்கமலப்பொற்றாளுடையபிரானமலியச்சாத்தி. (௬

தளிர்த்ததண்பொழிலிற்றேமாநறுஞ்சினைக்குயின்முகம்போற
றுளித்தலைமுகிலகற்றுஞ்சுரிகுழற்சிகழியாத்திட் [ம்
டளிதொடர்மாலைவேய்ந்தவலங்களைக்குறுவோர்க்கெல்லா
வெளிற்றுணைப்பொருள்போற்றோன்றமனறலைச்சாத்தணிந்து

களத்திடையிருப்பினுண்மைகாண்குவனொன்னவாலங்
குளத்திடைவாங்கிவைத்தகொள்கைபோற்றிலதந்தீட்டி
யொளித்தனிமதிநன்பாங்கரோணியோடொருபெண்கூட்டி
யளித்துறைவதொத்ததென்னவணிமணிசெவிக்கணிந்து. (௮)

விலையில்வெண்டரளக்கோவைவீரசங்கிலிகேயூர
மிலகுசெம்மணிப்பொன்னாழியிவைமுதலாயவெல்லாக்
கலனுமொண்கவினெனுஞ்செங்கனலிற்பெய்நறுநெய்யென்ன
மலைவினங்குருகுகேசன்மெய்யங்குறுப்பெலாமணிந்து. (௯)

(மத்தளமேற்றல்)

இந்திரதிருவிற்கேற்றவிலக்கணமுழுதும்வாய்த்த
சுந்தரகுமரற்காவாவிதனைத்தான்சுமப்பதாக
வந்துளதெதுகொலோவென்றெண்ணிமானிடர்மயங்க
நிந்தையின்முதுகின்பாற்றண்ணுமையொன்றுநிகழத்தாங்கி. ()

(மத்தள முழக்கல்).

சென்றருண்மதுகைநாதன்றிருமுன்வான்சுடர்வலஞ்சூழ்
குன்றுறழ்கொடிநெடும்பொற்கோபுரத்தெதிர்போய்நின்று
மன்றிடைநவில்கூத்தாடிமத்தளத்தொழில்கைக்கொண்டா
னென்றுளமருளவெங்கோனெறிந்துதண்ணுமையதிர்த்தான்.()

உரலசைந்திடாதடுக்கியுறியினெய்யெடுத்தயின்றோன்
குரலசைந்தாதுமோர்வேய்ங்குழன்மொழிமாதர்மாழ்கச்
சிரலசைந்தாடாநின்றசிறகர்போன்மத்தளத்தை
விரலசைந்தறைதலன்றிமெய்யசையாமனின்றான். (கஉ)

(மாயைவியப்புற்றுப்புகல்தல்).

சுத்தமெய்ஞ்ஞானந்தரூரியன்கரத்தாலார்க்கு
மத்தளமுகின்முழக்கநடிததுறமயில்கேட்டம்ம..
வித்தைமானிதர்கையாலெஞ்செவிப்படாதிருந்த
புத்தொலியிதுவென்றுள்ளமவியந்திதுபுகலுமன்றே. (கங)

மோட்டிளமுலையீரின்னதண்ணுமைமுழக்கங்காதாற்
கேட்டிலமிவ்வாறுண்டெனறுரைப்பவுங்கேட்டிலேமால்
வேட்டிலகவைத்துநின்றுவியக்குமிவவிஞ்சைகற்றுக்
காட்டியவவன்யார்கொல்லோகாண்கவென்றணங்குரைத்தாள்.

(பாங்கியர்பகர்தல்).

மாதர்வல்விரைந்துசென்றுமத்தளமுழக்கிநின்ற
சோதியைவிழியாற்றுஞ்செய்தொல்லைமாதவத்தாற்கண்டு
காதொடுபொருதுமீனுங்கயனெடுங்கருங்கட்செவ்வாய்க்
கோதைதன்மருங்கின்மீண்டுவந்திதுகூறலுற்றார். (கரு)

(பாங்கியாமாயையின் முன்அல்லமனைச்சேர்த்தல்).

கற்றதன்விஞ்சைபோலக்கவினுநாங்கண்டதில்லை
விற்றொழிலனங்கவேளேமேனிகொண்டடைந்தானென்ன
வுற்றனனொருவனென்னவொண்டொடிவிளிமினென்றாண்
மற்றவர்விளித்துவந்துமாயைமாதெதிர்விடுத்தார். (க

(நூலாசிரியர்).

அந்நிலையலமனுமத்தண்ணலைக்கண்டபோதே
செந்நிலமுருநீர்போலச்செல்வீமான்மயமேயாகிப்
பொன்னவிரொருபூம்பாவைபோன்றசைவறவிருந்தாள்
கன்னல்வின்மதவேளெய்துகையினைத்தருகுநின்றான். (கஎ)

(பாங்கியர்அல்லமனோடுரையாடல்)

மயக்குமென்பதுபோரிய்மாயைமயங்குமென்றிடவிருப்ப
வியக்குநின்றேயம்யாதுவீரவேளனையாயின்பம்
பயக்குநின்பெயர்யாதெங்குப்பயின்றுறைகுவைசொல்லென்னு
நயக்குமென்மொழியார்கேட்பஞானவாரிதியுரைக்கும். (கஅ)

(அல்லமன்பாங்கியர்க்குப்புகல்தல்).

செல்லுறழ்குழலீர்தேயமோபரதேயஞ்சூளால்
வல்லவனென்னவந்தோர்வலிநிலையல்லவென்று
மல்லமனென்பேரொன்றுமன்புசெய்பவரிடத்திற்
புல்லுவன்றொடர்பிலாயவென்றனன்பொய்ம்மையில்லான். ()

(அல்லமனைப்பாங்கியர்உபசரித்தல்)

உலகுளவிஞ்சையெலலாமுணர்ந்தவெம்பிராட்டிதன்பான்
மலைவறவிஞ்சைகற்றோர்தம்மொடுமருவியப்பாற்
செலவினையொழிந்திருத்திசெல்வமோடையவென்று
விலவிதழமுதமன்னாரியம்பினரிணக்கும்வண்ணம். (உ0)

(மாயைமகிழ்வுற்றது)

தன்கனிவாய்திறந்துசாற்றவேண்டியசொல்லெல்லா
மின்குழுவனையமாதர்விளம்பலுமகிழ்வுற்றீது
புன்சடைமதுகைநாதன்பூசனைப்பயனென்றெண்ணி
யின்குழன்மொழிமடந்தையிருந்தனளுரையாடாமல். (உ௧)

(மாயைஅல்லமனுக்குத்தாம்பூலமளித்தல்)

மோகினிதவஞ்செய்தீன்றமுகிழ்முலைமாயைதன்கைப்
பாகுவெள்ளிலையளித்துப்பரிந்தருகுறுமடைப்பைப்
போகியென்பவள்சிறந்தபோகிபோனடித்துநின்ற
யோகிதன்கரத்தளிப்பித்துரியனபலவுஞ்செய்தாள். (உஉ)

(அவையேற்றல்)

அடிக்கமலங்கள்போற்றுமடியவர்வேண்டிற்றெல்லாங்
கொடுத்தருள்கருணைவள்ளல்கொண்டகோலத்திற்கேற்ப
நடிப்பவனுதலாலேநாமவேற்றடங்கண்மாயை
யெடுத்துதவுறுவதனைகையேற்றனனிழிந்துளோன்போல்.

(நூலாசிரியர்)

விடைக்கொடியமலன்றன்னைவிடைகொடுபுறம்போந்தங்கண்
மடக்கொடிமதவேள்வாளிமறுமம்பாய்ந்தருகணைந்து
நடக்கரிதாகியப்பொனகைமணிச்சிவிகையூர்ந்து
தொடிக்கைநுண்ணிடைமருங்குற்றோழியர்சூழச்சென்றாள். ().

(மாயைஅரசனைத்தன்வசப்படுத்தல்)

நண்ணிவெண்குடைவேந்தன்பானடம்புரிதொழிற்கிசைந்த
தண்ணுமைமயலமன்றன்சதுருணைத்துடனிருபபக்
கண்ணகன்ஞாலங்காக்குங்காவலனிசைவுகொண்டு
பெண்ணமுதனையமாயைபிறங்குதன்மாடமபுக்காள். (உரு)

(மாயைஅல்லமனோடுனையாடல்)

வலம்புரிவளையனந்தமருங்குசூழ்ந்துறச்சிறந்த
சலஞ்சலமிருப்பதென்னததமனியமணிமாடத்திற்
பொலங்குழைமகளிர்சூழப்பூந்தவிசிருந்துவிஞ்சை
நலந்தெரிபவள்போலெலகணம்பனோடுனாவிழைந்தாள் (உசு)

(மாதரியற்கைக்குணம்)

நினைவவன்புணர்ச்சிமேற்றுநெடுங்கணோக்கனங்கனன்று
வனிமிகுமழகின்மேற்றுநரவெறுங்கூற்றின்மேற்று
புனைமலர்வண்ணர்வார்கூந்தற்பொற்றொடிக்கிதனலன்றே
மனமொழிமெய்யொருங்குமஙகையரரியவொனபார். (உள)

(நூலாசிரியர்)

தீதறுகழைக்கரும்பிற்றீஞ்சுவையிரதநீத்துக்
கோதினைவிரும்பிக்கொள்ளுங்கொள்கைபோலுவியின்கட்
போதுறுமதம்விடுத்துப்புன்மலங்கொள்ளுமாபோற்
பேதையெம்பிரானுன்முத்திபெறுதுபுன்போகம்வேட்டாள். ()

(இதுவுமது)

ஒன்றிரண்டொழியவாளியுளவெலாமாரன்றூர்த்தான்
குன்றிரண்டனையகொங்கைக்கோமகளாற்றளாகி
மின்றிரண்டனையமேனிவிமலன்மேற்சாய்ந்துவீழ்வாள்
பொன்றிரண்டனையமாதர்பொருந்தலாலுணிநின்றாள். (உக)

(மாயைபரவசமடைந்தமை)

தளிரியல்காமத்தீயிற்சருகுபட்டாற்றளாகி
யுளநிகர்மகளிர்சில்லோருடன்வரவெழுந்துட்போகி
யளிமலரளகஞ்சோரவணிமுலைத்துகில்விலங்க
வளம்லியணையின்மீதுவாயுயிர்ப்பெறிந்துவீழ்ந்தாள் (கூ0)

(மாயைபாங்கியர்க்குத்தன்கருத்துணர்த்தல்)

அள்ளிக்கொளும்பேரழகனருணும்புகலுமவாவாலு
முள்ளக்கருத்தையுயிர்போலுமகளிர்க்குணர்த்துமுளததா௰௲
மெள்ளப்பவளவாய்திறந்துவீடேதலமன்மேவுதற்குப்
பிள்ளைப்பிறைவாணுதன்மடவீரொன்றுள்பிறைமொன்றுளே.

(பாங்கியர்மாயைமனமறிதல்)

இறங்குதுறையினீத்தாயிற்றென்னமாயையிடத்துமயல்
பிறந்தபொழுதேயுயிரளவாய்நினைறதென்னும்பெற்றிமையை
யறிந்துமகளிர்நின்கருத்தையறியவுணாத்திலல்லமற்குச்[வ
சிறந்தமனையொன்றளிக்குதுமென்றுரைத்துப்பின்னுஞ்செட்

காம்புளேதோன்றிற்றுனக்கென்றெங்கள்கருத்திற்றோன்றிற்று
வாமமணிமேகலைமருங்குல்வடிவேன்மருட்டுமதர்விழியா
யாமுனினதுநெஞ்சகமுமவேறலேநின்னிதயத்திற்
சேமமதனைநாணுமற்செப்புகென்றார்திருந்திழையார். (௩௩)

(மாயைதன்பெருமைகருதல்)

கன்னித்தன்மையழியுமெனுநாணுமுலகங்காக்குமொரு
மன்னற்குரியமகளென்னுமபெருமைதானுமத்தளிகன்
றன்னைப்புணர்ந்தாளெனறுவருந்தகாதமொழியுந்தன்னுளத்தி
லுன்னிக்கருங்கண்மடமாயையொன்றுமுறையாதிருந்தனளால்

(சகளைவிலாசியைவினுதல்)

இறைவியொன்றுமுறையாமல்வாளாவிருப்பவேவல்புரிந்
ஹுறவினின்றசகளையெனுமாதுபிராட்டியுமையொடுதான்
பிறவுமின்றுவேறுபட்டாளென்னேனபெண்ணேயறியேனென
றறிவுகலங்கியொருவுகலாவிலாசியணங்கைவினுவினுள். (௩௫)

(சகளைக்குவிலாசிபுகல்தல்)

இனியான்மறைப்பதென்கொனுமத்தின்றுவந்தவல்லமனுந்
தனிநாயகன்பேரழகென்னுநறவையுண்டுதெரியாமற்
கனிவாய்மடந்தையுளமழிந்தாளென்றுவிலாசிகட்டுரைக்க
முனியாளியைந்துபுன்னகைகொண்டிருந்தாண்மாயைமுகங்க
விழ்த்து. (௩௬)

(மாயையின்கருத்தைப்பாங்கியறிந்தமை)

மாயையிடையையுளண்முலையான்மற்றைமாதர்போலென்று
தூயமதிஞானுமதித்துச்சொல்லுமருங்குற்றோகைதான்
வாயினிளவெண்ணகைதோன்றவாளாவிருப்பக்கண்டுமைய
லாயினுடையளெனமாதரறிந்தாருத்தாபததியினால். (கூஎ)

(அல்லமனிடத்தில்மதமாணிதூது[illegible])

வல்லியுள்ளமறிந்தனமிம்மாயைதனையுமயக்கவல்ல
வல்லமன்றன்கருத்தையினியறியவேண்டுமென்றவர்தாஞ்
சொல்லவொல்லைமதமாணியென்பாள்யானத்தோன்றறனை
மெல்லவுள்ளமறிவலெனச்சென்றாள்விரோதவிமலன்பால். ()

(அல்லமனுமதமாணியும்வாய்வலிகூறல்)

மங்கைவருமவ்வரவையறிந்தவளோர்மாற்றம்வகுத்திடுமுன்
றங்குமனையிற்சென்றிருப்பனுங்கடலைவியெனைத்தேடிற்
றிங்கணுதல்வெண்ணகைக்கருங்கட்செவ்வாய்த்திருவேசெப்பு
கவென்றெங்கடலைவனியம்பமதமாணியியம்பன்மேயினாள். ()

வீடுபுறநீவேண்டற்கவையவெமதுவிளங்குமணி
மாடநினதேயிவணுறைகவரசர்கோமான்மகளிதய
பீடமதனிலுனைவிடாதிருத்தியிருந்தாள்பிரிவறநீ
கூடவுறையும்விருப்புடையளென்றாள்குறிப்புவெளிப்படவே

[illegible]மில்லேனுநீவிர்மிகவுமுடையீரும்மிறைவி
வென்றியரசர்குலமடந்தைசாதியறியாவிகிர்தன்யா
னன்றிமகளிர்நீவிர்நான்மைந்தனென்றாலடாதம்மா [னான் (சக)
வென்றுமுங்களுடனுறைவனென்றெந்தநகைகொண்டியம்பி

நள்ளாதொழியினன்றியவணட்டாளாயிற்பினைப்பேதங்கடவுளை
கொள்ளாளொருவர்மாட்டுமெனிலுயிர்போற்சிறப்பிற்கொண்
டெள்ளாளென்னவேண்டுமோவென்சொலெல்லாமிருந்தறிதி
வள்ளாலெனவின்மொழிபுகன்றாண்மாற்றமறிந்தமதமாணி. ()

காரிற்சிறந்தமலர்க்குழலாய்நின்சொலெல்லாங்கவர்பொருளைப்
பாரித்திருந்ததேறுகிலேன்பணியொன்றொருவர்பாற்புரிவோர்
தூரத்திருந்துவருங்காலந்துணிந்துவருதறுணிவென்றா
னரிக்கிணங்குமவன்போலநடித்துவிடுத்துநழுவுவோன். (சங)

மன்னர்மன்னன்மகடிருவோலக்கங்காணுமைந்தரோ
டுன்னையுன்னுமவளல்லடலைவனாகவுன்னினளா
லென்னவன்னமனையாய்நுந்தலைவிக்கியற்கையுயர்த்திடுதன்
முன்னமென்னவடங்கியொழுகுறுதலெனக்குமுறையென்றான்.

சொற்போர்செய்துமறைப்பதினியென்னும்யாங்கடொழுமிறை
யாய்,நிற்போய்நின்னையெதிர்ந்தளவேகரியுண்விளவினிறையழி
ந்தாள்,கற்போனின்றவருந்தவருங்காணுமுன்னமுனைக்கண்ட
தற்போனின்றுதடுமாறநினைப்போலிருந்ததலைவியே. (௬௫)

(அல்லமன்மாயைக்குடன்பாடுற்றது)

என்றுமங்கைகூறுதலுந்தலைவியிதயநீயறிவை
யன்றியின்றுபுதியன்யானறிவனோவிங்காய்தமாய்
நின்றவுன்றன்மொழிகேட்குமதுவேயெனக்குநெறியென்றான்
குன்றைவென்றகுவிமுலையாள்களிப்பவெமையாட்கொள்ளு
வோன். (௬௬)

(மதமானிமகிழ்வுற்றுமீளல்)

நல்லசகுனமென்னவெதிர்கண்டுவந்தாய்நம்பிநீ!
வல்லவசுரர்சுரர்முனிவரெல்லாமயங்குமாயையையோர்
புல்லினெளியளெனப்புல்லநின்றாயெனப்புன்முறுவலொடு
சொல்லிமகிழ்வுகொண்டிறைவிபான்மீண்டனனச்சுடர்த்தொ
டியே. (௬௭)

(மதமானிதூதுசென்றபின்மாயைவருந்துதல்)

அங்குமாயைமதமானிசென்றதறிபினகந்தளர்ந்து
மங்கைவாய்மைகூறியுடம்படுக்குமோமன்மகடனக்குப்
பங்கமாமென்றென்னுயிரைச்சீறியகலப்பண்ணுமோ
விங்குநானென்செய்வனெனவறியேனென்னவிருந்தயர்வான்.()

என்னோவறிந்துபோயினள்சந்துபொருந்தாதெய்துமோ
வன்னோவரசன்மகளென்னவஞ்சியழகனக்லுமோ
வின்னோரன்னநினைவின்றியெனையேநினைந்திட்டிருக்குமோ
பொன்னோடுறழும்வாண்முகங்கண்டலதுதுயரம்போகாதே. (

(நூலாசிரியர்)

என்னப்பலவுநினைந்துமடமாயையிருப்பவிகுளை மார்
மின்னற்கருங்கணிடனூடக்குறிகணல்லவிளங்குதலாற்
கன்னிக்குவகைகைகூடுமென்னவிருக்குங்காலைதனி
லன்னப்பெடைபோனடந்துமதமானிகளிப்புற்றனடைந்தனளால்

(மதமானிவரவறிந்தபாங்கிர்வினவிற்குவிடைபுகல்தல்)

வெண்டாமரைபோன்முகமலர்ந்துவந்தாள்சென்றமதமானி
கண்டார்மகளிரவனுள்ளங்காயோபழமோகழறென்றார்
தண்டார்வனைமென்குழன்மடவீர்பழமேயென்றுசாற்றினள்
கொண்டாருவகையவர்மாயையுவகையாரோகூறுவார். (ருக)

(மாயைமகிழ்வுற்றது)

மன்னனறியினென்றுமோவறியோமிதனைமறைமமனைப
பன்னிமகளிருளத்தடக்கிக்கங்குலிரவுபார்த்திருந்தா
ரன்னமனையாளல்லமன்றனுடம்பாடுரைத்தவம்மொழியே
கன்னன்மதவேளெய்தபசும்புண்ணின்மருந்தாக்களிப்புற்றாள்

(இரவுக்குறி).

புனலின்விளையாடிருமைந்தர்தமமுளெழுந்துபோயோடிப்
புனலின்விழுவான்போல்விழுந்தவொளிஞாயிறுபோயப்புண்
ரியிடைப், புனலின்விழுந்துமூழ்குபுவங்கெழுவான்போலக்கு
ஞூதுகடற், புனலின்மிசைவந்தெழுந்ததிருள்பருகிப்புதுவெண்
டிங்களே. (ருரு)

(செவ்வானம்).

தொக்ககமலம்வாய்மூடக்கள்ளுண்டிடருஞ்சுரும்பினங்கண் [ற்
மொய்க்குநறுமென்குவளைவயேதிறந்தமுகிறுஞ்சிளம்பொழிலி
புக்கமணிநீர்க்கயத்திரைதேர்குருகுவிண்மீன்பூத்தனவாற்
செக்கரொனுஞ்செந்தீயினிடைப்பொரிந்துதெறித்தபொரிபோல

இதுவுமது.

தூயம்சாதிப்பகலவன்போய்மேலைப்புணரிதோய்ந்திடலு
மாயைநாமங்கொண்டிருந்தமணிமென்கலாபமயிலையா
ளுய்யதோம்பிகணமெனந்துடலஞ்சிவப்புற்றடங்கல்போன்
மேயமாலைப்பொழுதிலிருஞ்செக்கர்தோன்றிவீந்ததால். (ருசு)

(நூலாசிரியர்).

காலையரும்பிப்பகலெல்லாம்போதாயிருந்தகாமமலர்
மாலைமலர்ந்துபொருமலொருமாயைநாமமணிவல்லி
மூலையிருந்துபுறம்போந்துவிரிவெண்ணிலாவெனமுற்றத்திற்
பீலிமஞ்ஞையெனவீழ்ந்துமதநோய்மிகவாய்பிதற்றுமால். (ருசு)

(நிலவைப்பழித்தல்).

தாய்வாயடைந்துமிகுந்தலையைமோதிமோதிச்சலித்தலறக்
காய்வாய்நிலவேயுடன்பிறந்தாளிருந்துவாழுங்கடிமனையை
நீவாவெழுந்துவந்தழிப்பாயென்றலந்தோர்நிலையின்றித்
தேய்வாய்நின்னேடிமையில்லாவென்னையென்னசெய்யாயே. ()

தக்கன்மகத்திலொருஞான்றுதாளிற்பரிந்தலையேறி
மிக்கமுனிவர்மந்திரநீரிறைப்பவினனுமீண்டிலாய்
நக்கன்பவளவாய்ப்பட்டுக்களத்தேயிறங்குநஞ்சுநினை
யொக்குமென்பதறியாமையன்றேவொளிரவெண்மதியமே. ()

அங்கமதினஞ்சிருத்திறுனங்கமல்லாவவிர்சடைமேற்
றங்கநினைவைத்திட்டதுநின்கொடுமைகருதித்தானன்றே
பொங்குமமுதகலையென்னநின்னைப்புகறல்வெண்டிகொ
ளிங்குமணிதர்காராட்டைவெள்ளாடென்பதேய்க்குமால் (ருகூ)

உருப்பமிகுவன்றழல்சிவப்புற்றலகர்காணவொளிதரவு [ன்றே
நெருப்புவெண்மையென்பதுநன்னியாயர்நின்னைக்குறித்தன்
பொருப்புநறுஞ்சந்தனச்சேறுபுலர்ந்துபொரியப்பூவணையும்
விருப்பமலருங்கொளுந்தழல்வீசியெழுந்தவெண்டிங்காள். ()

இன்றேருலகிலெனக்கொன்றுபிறர்க்கொன்றாகியிருக்கின்றாய்
நன்றேவுனக்குமதியமேஞாயிறேபோல்வாழாமன்
முன்றேகையர்களியாவரையுமொப்பக்காணுமுயற்சியா
லன்றேதேய்ந்துபோகின்றாயந்தோவதனையறியாயோ. (கூக)

(தென்றலைப்பழித்தல்). [ய்

கொல்லாநோன்புமுனிமலையிற்றேன்றியென்னைக்கொல்கின்று
பொல்லாமந்தமாருதமேயென்னேகருணைபூண்டிலாய், சொல்
லாய்திருப்பாற்கடலினிடைத்தோன்றுங்கடுவிற்றன்குணமே,
யல்லாலமுதகுணமுண்டோநின்னைவெறுப்பதறிவன்றே. ()

(குயிலைப்பழித்தல்).

உயிர்த்தபொழுதேநின்குரல்கேளாமுன்னோடிற்றீன்றதாய்
நயத்தின்வளர்த்ததாய்குரல்கேட்டலுமேநடுங்கத்துரந்ததாற்
பயத்தமல்ர்ப்பூங்காவகத்திலிருந்துபல்காற்கூவினூற்
செயிர்த்துநின்னைக்குயிலேநான்வெறுத்தல்செப்பவேண்டுமோ

(மன்மதனைப்பழித்தல்).

கன்னற்சிலையாயென்மனத்தைக்கலக்குங்காளைகவின்கண்டு
முன்னிற்பதற்குநாணியோவிங்கேநின்றுமுனிகின்றாய்
தன்னிற்பெரியாரில்லையெனுமவனைச்சமரிற்றாக்காம
னன்னார்த்தளிரின்மெலியாளையடர்த்தாயாண்மைநன்றரோ. ()

(மதமானி அல்லமனிடத்தில்மாயையைசேர்த்தமை)..

என்றுபுலம்பிமயன்முதிர்ந்துமாயையிரங்கியிருந்தயர
மன்றன்மலர்பெய்மெல்லணைப்பூம்பள்ளியறையின்மதமானி
சென்றுநம்பியல்லமனைமுன்றந்திருத்தித்தேனையூண்
வென்றிமடங்கற்கிடுதல்போலவளைவிடுத்தாளவ்வறையுள். ()

வேறு.

(மாயைஅல்லமனைத்தழுவுதல்).

வேனிலண்பகலின்வெய்யபாலையுணீர்வேட்டவனங்கிலத்துறு
நீர், தானெதிர்கண்டுபெருகவோடுதல்போற்றண்மலரணைமிசைய
மர்ந்த, ஞானநல்விளக்கைவிழியுறக்கண்டுநகையொடுதிருமுகம
லர்ந்து, பானலங்கண்ணிபுணர்முலைவிம்மப்பரிந்துமேல்விழுந்
துபுல்லினளால். (சுசு)

(அல்லமன்உருவெளிகண்டுமாயைவருந்துதல் .

நாடியவாடிகிழலெனவணைமேனுண்ணுறத்தோன்றியவிறையை
யோடினள்விழுந்துதழுவுறத்தழுவுறாமையாலணைமிசைவிழு
ந்தே,யாடியினிழலைபற்றநீட்டியகையாடியிற்றாககநின்றழுது
வாடுறுமழலைப்பேதையேபோலவருந்தினண்மதர்விழிமாயை.()

சொல்லருமழகன்றிருவுருவிழியிற்றோன்றலான்மீளவுமெழுந்
து, புல்லினண்மலர்மென்கைகளால்வெளியைப்புல்லல்போற்சு
ழல்வுற்றனள்வெறுவாய், வல்லியவ்வாறுவெளிமயக்குற்றுவன்ன
றன்னைப்படாமையினூ, லல்லமன்லனீருருவெளியென்னவுயிர்
த்தனளுண்மையையன்றே. (சுஅ)

(நூலாசிரியர்).

அருந்தவநெடுநோன் முயன்று தான்பெற்றவமுதைவாய்வைத்திடு மளவிற், கரந்தவறுதல்போலல்லமதேவன்கட்புலத்துற்றுமென் றேளிற், பொருந்துறவெளிபோல்வராமையாற்றீயிற்புழுவெனப்பதைபதைத்தரிவை, வருந்தினள்காமமல்லமாயன்றிவடிவுளார்யார்கடந்திடுவார். (சுகூ)

(இதுவுமது).

கன்னிகையென்றுமிறைமகளென்றுங்கருதிடாதவாவிளைத்திட்டு, மென்னிணைமுலைகண்மார்புறத்தழுவியிதழ்சுவைத்தணை மிசைப்புணர்வுற், றின்னலினின்பக்கடலிடைமூழ்கவிவன்றனுற்பெற்றிலேனென்று, தன்னகனைந்துவெய்துயிரபெறிந்தாடவத்தளையலைத்தவமடந்தை. (எ0)

(இதுவுமது).

பொழிந்திழிமழையால்வளிநனைந்திடுமேற்புகைந்தெழுமெரியில்வான்வேமேன், முழங்குவெண்டிரைப்பேராழியக்கலயமுனிவனையுழுத்துமேனஞ்ச, மெழுந்தரன்றன்னைவருத்துமேன்மயக்கமெய்துவனல்லமதேவ, னெழிந்தவர்தம்மையொழிவறமயக்குமொருத்தியுமவன்றனைமயக்கும. (எக)

(கனவுகாணுதல், சூரியனுதித்தல்).

விண்ணினைக்குத்திக்கையிளைப்பவர்போல்வேனெடுங்கண்ணியநங்கிருந்த,வண்ணலைத்தழுவித்தழுவிமெய்வருந்தியவசமுற்றணை மிசையுறங்கி, யெண்ணுறுங்னைவாலவன்புணர்ந்ததுபோலின் கனவொன்றுகண்டெழுந்தாள், கண்ணகனிலத்தினிருள்குடிப்பவனுங்கருங்கடன்முகட்டினிலெழுந்தான். (எஉ)

(மாயைபாங்கியர்க்குக்கனவுகூறல்)

காலையின்மாலைவார்குழன்மாதாகண்டுரைசெய்வளல்லமன்றன் கோலமென்சொல்வேன்விழியெதிர்தோன்றிக்குறுகிவெண்கைப்படாணதனுற், சாலவுணைந்துதுயின்றனன்கனவிற்றடமுலைகுழைந்திடப்புல்லி, மேலுநல்லருள்செய்துன்னைகாணென்றும்விடுகிலேனென்றனனென்றுள். (எகூ)

(பாங்கியர் அல்லமன் உண்மைதெளிதல்)

அருந்தவமழிக்கு மழகுடையணங்கிற்ககப்படாவிறலினன்யா
ரோ, புரந்தரனயன்மால்சுரர்முனிவராகிம்புருடர்விதியாதர
ரென்னப், பரந்தவர்தமமுளலனிவனொருவன்பார்த்திடிற்பராபர
னென்று, திருந்திழைமகளிர்மனததுளேவியந்துதெரிவையோ
டுரைத்தன்மேயினரால் (எச)

(பாங்கியர்கனவின்பயன்கூறக்களிப்படைந்தமை)

ஆசைநின்னுளத்தின்மிகவளர்ப்பதற்காயல்லமனிவ்வகைநடித்
தான்,பேசுறுகனவின்பயனுனக்குரைப்பிற்பின்புனைமெய்யுறவ
ணைவன், வாசமென்குழலாயென்றணைமனததின்கருத்தமற்றிட
வறிந்துரைத்தார், காசனிமருங்குன்மடநதையர்மாயைகவலைதீர்
ந்துள்ளுளேகளிததாள (எரு)

(மாயையைத்தாய்முனிதல்)

இன்னணமாயைமாதிடைநகழ்ந்தவியல்பினைமோகினிசிலர்போ
ய்ப், பன்னுறவறிந்துமானமீககூறப்பருவரற்கடலிடைப்படிந்து,
தன்னொருமகளவாழ்நாளினைக்கெய்தித்தனையைப்பாங்கிமாரொடு
கூ, டென்னிதுசெய்தாயையகோபேதாயென்றுரைநதின்னனபு
கன்றாள். (எசு)

மானமுமுயிருமொருங்குநில்லாதவழியுயிர்தன்னையேவிடுத்துத்
தானுறுபொருளாய்மானமேகொளுமுனரைந்ததன்செவிப்படி
லென்னாம்,பானுவுமறியுமியங் குறுமளவுமபழியிதுவழிவழிவரா
தோ, யானுனைவருந்தியீன்றதுமிதற்கோவென்செய்தாய்பாவி
யென்றிசைப்பாள். (எஎ)

குரவர்தாமியைந்துகொடுத்திலராயிற்குமரகேளனையவரெனி
னு, மருவராநிற்பர்தந்தைதாய்தங்களானையினொழுகுகன்னியர்
தா, முருவிலாரெனினுங்குரவருண்மகிழ்வுற்றுதவுறிணனையவ
ர்தம்மைப், பரவுவான்கடவுளாகவேநினைந்துபண்பொடும்பயி
லுவரன்றே (எஅ)

மணம்புரிவதன்முன்குரவரானையினுமணவினைமுற்றியபின்ன,
ரிணங்குறவருள்செய்கொழுநனானையினுமிருப்பர்தம்வயமில
ரன்று, மணஙகனையவர்தாமென்பதையறிந்துமடாதவிச்செய
லினைச்செய்தாய், பிணஙகுவாரிலையென்றிருந்தனைபோலும்பே
தைநீயென்றுதாய்முனிந்தாள். (எகூ)

(உலகவியல்பு, நூலாசிரியர்).

தான்செயுந்தவறுந்தாய்செயுமுனிவுந்தன்மனந்தனைநனிவருத்த
நான்செய்வதென்னென்றிருநிலநோக்கிநாணிநீர்விழியுக விருந்
தா, டேன்செய்மென்மொழியாண்மோகினிகண்டுசினந்தவிர்ந்
தகங்கரைந்தீன்மேண், மான்செயும்விழியாய்பிழையிலையென்று
ண்மனங்கரைவன்னேபோலுண்டோ. (௮0)

(மோகினிமுனியப்பாங்கியர்புகல்தல்)

மங்கைமீர்நீவிர்சூழ்ந்தனரிருந்தும்வளைதருவேலியில்பயிர்போ
லெங்கடம்மடந்தைநிறையழிந்தொழியவென்செய்தீர்பாவிகா
ளென்று, ளங்குறுமடவார்சொல்வெம்பிராட்டியருளொடுகே
ண்மதிமதனு, லுங்குலமடந்தையுயிர்விடாதிருந்ததுன்றவமென்
றுரைந்துரைத்தார். (௮௧)

பாங்கியர்பகரச்சினஞ்சிறிதவிந்துபாங்கியர்குழுவினுட்சிறப்புற்,
றோங்கியசகளைதன்முகநோக்கியுரைப்பண்மோகினியெனுமரசி
பூங்கணைமதவேளனையவல்லமனைப்புறத்துநின்றகற்றிடாதெங்க
ளீர்ஙகதிர்முகமெல்லியன்முனம்விடுத்தாயென்கொலோவெனவ
வளுரைப்பாள். (௮௨)

மானிடப்பிறவியரிததிலரசர்மக்களாகுதலரிததனி
லூனுறுப்பமைதலரிததிலரிதாலுணாவொடுபோகங்கணுகர்த
ருனெனப்பெரியர்கூறலாலன்னாய்தவம்பலமுயன்றுநீபெற்ற
மீனெனப்பிறழுங்கண்ணியைவெகுண்டுவெறுப்பதுதகாதெனவு
ரைததாள். (௮௩)

மோகினிசகளைபுகன்மொழிகேட்டுமுகமலர்ந்தென்றவப்பயனும்
பூகெனுமொழியாடவறிலள்யாழோர்பயின்மணமரசர்மேற்றெ
ராகலிவிவளுக்கல்லமன்றுனேயருமணத்தலைவனங்கவன் [ன்ப,
பாற், போகம்வேண்டியவாகொள்கெனப்புகன்றுபுகன்றனள்பி
னனுமோர்மாற்றம். (௮௪)

(மோகினிமாயையினினைவிற்கிணங்கியது)

உலகெலாமறியவதுவைசெய்காறுமுலகமன்னவனறியாமற்
றிலகவாணுதலாளொழுக்கநீர்மறைமின்றேமொழியீரிவடமைநீக்
கலமெலாதுமதேயாதலானுமக்குநான்சொல்வதென்னெனுமகளு
கலகிலாவுவகைசெய்துபோயினடன்னகத்திலுண்முனிவுறவர்
தான். (௮௫)

(மாயைவினாவும் சகளை விடையும்)

என்பிழைபொறுமலன்னையோடென்பாலிருந்தவரோசொலினத
னா,லன்புடையன்னைமுனியுமோவென்னவறைந்தனண்மாயை
கேட்டறைவாள்,பொன்புனைசகளைநங்குருவுனக்குப்புராரியேத
லைவனென்றிருப்பப், பின்பிதுநீசெய்தனையெனின்னினைப்பிழை
சொல்வார்மேறபிழையுண்டோ. (௮௬)

மானனையாய்நந்தாயறிந்தமையான்மறைநததுநொய்துபட்டன்
றிக், கோனிதையறிவனெனினெளிதாமோகோமளவல்லிநீகே
ண்மோ, போனதுபோகவினியவன்றன்னைப்புறத்தினில்விடுவே
தேயறிவு, தானெனவுரைத்தாண்மாயைகேட்டயர்ந்துதாங்கரு
ந்துயரமோடிருந்தாள்., (௮௭)

(அல்லமன் அறியான்போன்று சகளையைவினாவிடைபுகல்தல்.)

அல்லமனறிந்துநந்திருமடந்தைக் கடுத்ததென்புகலெனச்சகளை
வல்லிநின்மாயைவலையிடைப்பட்டமறையெலாமிறைமனைநிறை
ந்த, தொல்லைநல்வினையாலறிந்திலன்வேந்தனொருவனும்யாமுய்
யவேண்டிச், சொல்லுவதொன்றுண்டையநீபுறததோர்சூழலிலி
ருத்தனன்றென்றாள். (௮௮)

(அல்லமன்வருந்துதல்).

மாயையையகன்றானடக்கக்காலெழுமோவாயிடைமாற்றமொ
ன்றுண்டோ, போயொருவிடயமுணமனம்வருமோபொருந்து
றும்பகலிரவுளவோ, காயமுமுயிருங்கலந்துவாழ்வுறுமோகண்ட
னமெனவெனையொருவர், நீயறிவுறவிங்குரைப்பவருளரோநேரி
ழாயென்றனனண்ணல் (௮௯)

(நூலாசிரியர்)

கருத்தினையறியாதவன்மொழிதனக்குக்காட்டியபொருளையே
கொண்டு, விரைத்துணர்மலர்மென்குழலினாள்புணரும்விதியுள
தென்னிலெங்கொடியைத், தரித்தெவனொருநீயிருப்பினுமுனக்
குத்தருமிதிலையம்வேண்டாவென், றுரைத்தனள்கருணையென்
றுசெய்குவனென்றுழன்றவளண்ணலைநோக்கி. (௯௰)

சகளையிவ்வாறுமொழிதாநங்காய்சாலவுநன்றுநன்றென்று
நகைமதிதவழுஞ்செஞ்சடைமதுகைநாயகன்றிருமுனஞ்சென்று
முகிழ்முலைநடிக்கும்பொழுதுதன்செயல்செய்முயற்சியினின்றன
ன்றனக்குத், தருமெனவளர்போறிவிஞற்றன்னைத்தானலாதறி
தரப்படாதான். (கூக)

ஐந்தாவது-பிரபுதேவர்வந்தகதி-முற்றிற்று.

ஆ_திரு-விருத்தம் கூஎ௯.

---

ஆறுவது

# விமலைகதி.

---

அமலையேவவகனிலத்தெய்துபு
சமலமாயைதனக்கருண்மூர்த்தியா
நிமலனல்லமனீதியையன்பிஞல்
விமலைகூறியவண்ணம்விளம்புவாம். (க)

(நூலாசிரியர்)

மதுகைநாதனைநாடொறுமாயைதா
னதிகவந்தனையாற்றிநம்மல்லம
னுதவுமான்மனத்தோங்கவிருந்தன
டிதிகளெண்ணிலசெல்லநிலத்திஞே. (உ)

(அம்பிகைஏவுதலால்விமலைமாயையைக்காண்டல்)

ஆயகாலையிலம்பிகைஞாலமேன்
மாயைபோய்நெடுநாளினும்வந்திலள்
போயிராதவட்கொண்டிவண்போதென
வேயிஞணல்விமலையையென்பவே. (ங)

கறையில்சோதிக்கயிலையினின்றுநம்
மிறைவியேவவிறைஞ்சிவருமுலைப்
பொறையிஞல்விழுந்தாளெனப்பூமிசை
மறுவிலாமதிபோல்பவ்வந்தனள். (௪)

வந்துபொன்னெயிலவட்டவனவசை
நந்துபொன்மணிமாடநணுகியே
சந்தமாயைதனதெதிர்நின்றனள்
கந்தமென்மலர்க்கற்பகவல்லிபோல். (௫)

(மாயைவிமலைக்குஆதனமளித்தல்)

நின்றபோதெதிர்கண்டுநிலவுல
கன்றுபோலுமிவ்வாயிழைவாழிட
மென்றுமாயையெழுந்துதொழுதணை
யொன்றுமேவியிருப்பவுதவினள். (௬)

(பாஙகியரவ்விருவரைவியப்புறுதல்)

அருகிருந்தவணையாிருவரு
மிருகரங்களுமேந்துமணியென
வுருவமைந்திவளொத்தனவொன்றுசூழ்
புரமடைந்தையர்புந்திவியந்தனர். (௭)

(மாயைவினவிற்குவிமலைபுகல்தல்)

மாயைவந்தமடந்தையைநோக்கியே
நீயிருந்தநெறுகுன்பெயர்யாதுநீ
மேயதன்மையென்னென்றுவினவலுந்
தேயுநுண்ணிடைசெப்புதன்மேயினள் (௮)

கயிலையென்னிடஙகற்பகவல்லியென்
பெயரியம்பின்விமலைபெருஙகுலச்
சயிலமங்கைநின்றன்புடையேவினள்
வியனிலநதனில்வந்துனைமேவினேன். (௯)

என்னமன்மகளெம்பெருமாட்டிதான்
மன்னும்வெந்துயர்மக்கட்பிறப்பினேன்
றன்னையுன்னிநின்றன்னைவிடுததெதன்
பன்னுகென்னப்பகர்தரன்மேயினள். (௧௦)

வேறு.

அல்லமன்வலிநிலையறிந்துவாவென
நல்லுமைநினைவிடநன்றென்றெஙகைநீ
வல்லமைபேசியிம்மண்ணில்வந்தபின்
சொல்லியநின்பெருஞ்சூண்மறந்தனை. (௧௧)

நின்னையுமறிநதிலைநீயென்ருலிவ
ணுன்னுறுமனமொழியுருதவல்லமன்
றன்னைநீயறிவுறுந்தனமையுண்டுகொல்
கன்னிமாதுமைதமகலையயல்லையோ (கஉ)

ஒடுறமருந்தயின்றுறஙகல்போலுமா
யாடியசூண்மறந்தயர்ந்திருத்தலா
ஞடிநின்றனைதரற்கென்னைநல்லுமை
யேடவிழ்மலர்க்குழாலேவிஞளென்ருள. (கங)

(நூலாசிரியர்)

கதிரொழுபகலெனக்கண்டிடாதுதண்
மதியெழுமிரவெனமணந்தெளிநதுதன
றிதியொடுநின்னைவுமோர்சிறிதறிந்தனள்
விதியுணரிறைமகளவிமலசொல்லிஞல் (கச)

மூலகாரணனெனச்சிலர்மொழிந்திடு
மாலுமோர்மானிடப்பிறப்பில்வந்துதன்
சீலமோர்ந்திலனெனிற்சிறியபேதைநான்
ஞாலமேன்மயங்குதனவிறல்வேண்டுமோ (கரு)

(இதுமுதல் கூரு-கவிகளால்விமலைஅல்லமன்சரித்திரம)
மாயைக்குப்புகல்தல்.

அல்லமனியல்பெலாமறியப்பூந்துணர்
வல்லிநின்குமுதவாய்மலர்ந்துகூறெனச்
சொல்லிநின்றினையடிதொழுதமாதொடு
வில்லுறழ்நறுநுதல்விமலகூறுவாள். (கசு)

கயிலையினுமையொடுகண்ணுதற்பிரான்
செயலுறுமல்லமன்செய்திகூறலு
மயலுறவிருந்துநானறிநதுளேனதை
மயிலியல்கேளெனவகுததன்மேயிஞள். (கஎ)

வேறு

படியில்வள்ளிகாவையெனும்பதியிற்றனக்குநிகரில்லா
ஞெடிவில்கருணைநிராங்காரனென்னுமுண்மைப்பெயரிஞன்
மடிவில்கற்பினவன்றேவிமாசுதீர்ந்தசுஞ்ஞானி
கடிவின்மறையாகமவிதிகள்கண்ணுற்றறியவொழுகுவார். ()

மெய்ம்மைசிவமேயல்லாமல்விரியுமுலகம்பொய்யென்பா
ரிம்மைமறுமைநிலையல்லவென்னநிகழ்ந்தகருத்தினர்
செம்மைநெறியிற்புறமொடகந்திரியுங்கரணங்காமாதி
பொய்ம்மைவினையிலவர்குருநூல்பொருளாய்த்துணிந்து
வீடுவப்பார். (௧௧)

இனையராகியிருக்குநாளில்வாழ்க்கையினின்றிடுதலாற்
றனையரின்மையானெஞ்சந்தளர்வான்போன்றுநிராங்கார
னினையுந்தியானமில்லாதநெஞ்சுஞானமில்லாத
வினையும்போலுமக்களிலாமிக்கவாழ்வென்றியம்பியே. (௨௰)

இந்தவுலகிற்குதவியாயியன்றதொழில்கள்பலசெய்யு
மைந்தன்வேண்டுமெனநிற்போன்மக்கட்பதடியாகுவா
னந்தவுலகிற்கானினைப்போனறங்கூர்மகனுமத்துவிதா
னந்தமுதவுமகவிருப்போன்ஞானியாகுமென்றெண்ணி (௨௧)

உடம்பைப்பொறியைக்கரணத்தையுயிரைத்தானென்றுழலாம
லடங்கத்துறந்துதனையறிந்துபேதாபேதமென்னுமயல்
கடந்திட்டிருக்கும்பரமுத்திகாட்டும்புதல்வன்வேண்டுமென [ன்
விடும்மைப்பிறவிநோய்தணிப்பவெண்ணுமனத்தானெண்ணிண

இரண்டோடிரண்டுமூவிரண்டையிரண்டாறிரண்டுமீமிசை
யெண், ணிரண்டோடிரண்டுகொண்டிருந்தவிதழ்ப்பங்கயங்க
ள்கடந்துபோ, யிருந்தகுளத்தின்மேலோராயிரந்தோட்டமலக
மலமிசை, யிருந்தசோதிதனைக்கண்டெம்மெண்ணமுடிப்பே
மெனவெழுந்து. (௨௩)

வேறுமொருவனுடனிருப்பும்வேண்டாதவத்திற்கென்படுதொடு
மாறும்மனையுங்கொழுநனும்போய்வனத்திற்கமலாசனத்திருந்து
தேறார்புனல்போற்றெளிந்தமனந்திறந்துந்திறவாவிழியொடு
பேறுமிட்டலிங்கத்திற்பிறழாதமையும்படிவைத்து.(௨௪) [தம்

தறிபோலுடலநேரிருந்துதயங்குமருங்கினிருநாடி
னெறிபோய்மீளும்வளியதனைநிறுவிநடுநாடியிற்செலுத்தி
யறிவோர்சிறிதுஞ்சலியாமலன்னப்பெயர்மந்திரமாறிக் [ரால்.
குறிபோயிருந்தவொருகுறியைக்குறித்துகொண்டங்கிருந்தன

வாயுநிற்பமனநின்றுமனந்தானிற்பப்பொறிநின்று
பாயபொறிகணிற்பவிடர்படுபுன்புலன்கணின்றனவா
லாயபுலன்கணின்றமையாலகிலந்தோன்றாதுள்ளத்தே
தூயபரமானந்தபரஞ்சோதிதோன்றக்கண்டிருந்தார். (௨௬)

ஒருங்குமனமோடிணையசிவயோகசமாதிநவதிங்க
ளிரம்பவிருந்தகாலத்துநெற்றிமிசையிற்பரஞ்சோதி
திரண்டுகுழவியுருவாகிச்சென்றுபுறமுற்றிடவதனை
விரும்புமிருவர்தாமுமுடன்விழிகடிறந்துகண்டனரால். (௨௭)

வெம்மையொழிந்துநிலத்திழிந்துவிளங்குகதிரோபனிநீங்கி
யெம்மையாளவருமதியோவிடுமிந்தனங்கணுகராத
செம்மையொளிவான்பேரழலோதெரியாதென்னவொளிர்ந்ததவ
தம்மையறியாவுவகையுளந்தழைப்பச்சோதிமதலையே. (௨௮)

அலைந்துபிறப்பிலாங்காரவஞ்ஞானிகளாமானிடரு
மலிந்தசுரருமுனிவருமற்றையோரும்பெறுவரோ
தொலைந்தமாயைநிராங்காரசுஞ்ஞானிகள்போன்மலவிருளை
நலிந்துவளர்சச்சிதானந்தநந்தாவிளக்காமதலையையே. (௨௯)

பேரானந்தம்பிள்ளையாப்பெற்றவர்க்குவிடயத்து
ளோரானந்தம்பெற்றுடனேயொழியுமுலகர்தம்மைநா
நேராவியம்பலாகுமோநிகர்தாந்தம்மிற்றாமென்று
வாராரிளமென்முகிழ்முலைநன்மடவாயுரைப்பதன்றியே. (௩0)

பண்டுபாசந்தபுசிலரும்பரஞ்சோதியைத்தாந்தம்முளே
கண்டுவாழ்வுபெறுநரலாற்கண்ணிற்காட்டுமவரில்லை
தொண்டுபடுமிந்நிராங்காரசுஞ்ஞானிகடம்முட்கண்டு
கொண்டவொளியையுலகுய்யக்குழவியாக்கிக்காட்டினரால். ()

சங்குந்தெய்வதுந்துமியுந்தழங்கமலர்மாமழைபொழிந்த
வெங்குந்திசைகள்விளங்கினகன்றீன்றமலடுதறிதளிர்த்த
பங்கங்கலந்தபுனறெளிந்தபதகர்மனமுந்தெளிந்தவருள்
பொங்குந்துறவர்மனமகிழ்ந்தபுனிதன்மகவாய்த்தோன்றுநாள்.

நையாமனத்துநிராங்காரன்ஞானத்திரளாம்பிள்ளைதனை
மெய்யாமுளக்கணன்றியுமிவ்விழியுங்காணப்பெற்றனமென்
றெய்யாவுவகைக்கடன்மூழ்கியேறான்மார்போடுறத்தழுவிக்
கையாலெடுப்பவெங்குநிறைகனவான்கனவாஞெய்தாகி: (௩௩)

செவ்வாய்ஞானமயில்கொழுநன்செந்தாமரைத்தாள்வணங்குபுந
மிவ்வாய்மகனதியல்புநீயியம்பாயென்னவவனெறிந்து [ம
சைவாகமமுமாரணமுஞ்சாற்றற்கரியநமமகவை
யெவ்வாறுரைப்பனியான்மடவாயென்றுவியந்துகூறுவான். ()

நாம்பார்க்குழவியாகாமனம்பாற்குழவியாயினன் [ந்
நீமபாற்கடலிற்றுயில்வோனுஞ்செந்தாமரைமேலுறைவோனு
தாம்பார்க்கரியவடிமுடியோன்றனேயையமிதற்கில்லை
காம்பாற்புரிந்ததனையதோட்கனிவாய்த்தடங்கணென்றான் ()

ஆன்றமயல்செய்சையோகத்தன்றித்தவயோகத்தினு
லீன்றபொழுதிற்றன்மகனையிருந்துசான்றோனெனக்கேட்டு
தோன்றுமுவகைக்கடற்படிந்தாள்சுஞ்ஞானித்தாய்பசும்பொன்
போன்றுவளர்ந்துமருங்குன்மிடிபோககவறியாவிளமுலை[மலை,
யாய். (௩௬)

வேறு.

மத்தநெஞ்சகமோடுதம்மதியினென்றையறைந்தி து
மெய்ததுறும்பொருளென்றதைவேதமாகமமோதுமென்
றுத்திகொண்டுரைசெயதெதிரொன்றைநிந்தைசெய்சமயர்தம
பித்தைதயல்லெனுமல்லமாப்பிரபுவெனும்பெயரிட்டனர். (௩௭)

வினையினுலொருவன்றருமேனியாளனலாதொரு
மனிதனுகிநடித்திடும்வடிவனுதலிலல்லம
னினையுமாறுதவழ்ந்துபின்னின்றுமெல்லநடந்துபோய்
வனையுமாமணிமாளிகைமறுகிைடல்பயின்றனன் (௩௮)

வருகவெங்கடமாவியேவருகக்கண்ணுகரமுதமே
வருகவெங்குலதீபமேவருககேடறுசெல்வமே
வருகபாசவிநாசனேவருகஞானவிநோதனே
வருகவென்றனையுளமகிழ்ந்திடவந்துமேல்விழுமல்லமன் (௩௯)

மாயையாலுளவாகியவடிவுநாமமழித்துள
தாயவோர்பிரமந்தனையறியுமாற்றிவித்தல்போன்
மேயபேதையர்மணலமைவீடுதாள்கொடழித்தனன்
போயுலாவுவன்மாணிடன்போலவேவிளையாடுவோன். (௪௰)

நாணியக்கினியங்குறுஞாலமென்றறிவிதல்போற்
றனுருட்டுநெல்வீதியிற்றமணியச்சிறுதேரினை
யாணடக்கருநெஞ்சகமிதனையொக்குறுமென்பது
போனமக்குயிராயினேன்புதியபம்பரமாடுமால். (சக)

ஆடியொன்றெதிர்கொண்டுதம்மானனந்தெரிவார்கள்போல்
கூடியொண் குருவெதிர்கொடுகொண்டுதன்பெருவிஞ்சைக
ளாடியொண்கலைகற்றல்போனாடகம்பலசெய்தனன்
பீடுறுமபழமறைகளும்பேசருமபுகழாளனே. (சஉ)

தந்தைதாயுளமின்புறத்தனதுபேரருளாலிள
மைந்தனாகியிருந்தொருவாலலீலைநடித்தரு
ளெந்தைதானுலகெங்கணுமெய்திமக்கடமவல்வினை
சிந்துமாறுநினைந்திதுசெப்பன்மேயினனென்பவே. (சங)

உங்கள்பாவனையாருமையாலுருவமாமகனாகிநா
னிங்குமேவியிருந்தனனினிநடந்துலகெங்கணுந்
தங்குமாதவர்முதலியோர்தங்களெண்ணமுடிப்பனென்
றெங்கணாதனியம்பவவ்விருவரும்புகல்கின்றனர். (சச)

பிறப்பெனுங்கடலிற்படும்பிழையேமுறுபுணையனைய
துறப்பின்வீடெனுமொண்கரைதுன்னுறு தமிழ்வேமெனு
மறப்பிலாவிருகுரவருமனமுளைந்துரைசெய்திடச
சிறப்பஞானசிகாமணிதெளியுமாறுரையாடினன். (சரு)

சறறுநும்மையகன்றிடேன்றளரன்மின்மனமென்றுநான்
சொற்றதையுமக்கெனிற்றுணியுமாகமவேதநூல்
கற்றுளோரைவினாய்நிராங்காரஞானிகடமையிவ
ணுற்றவல்லமனகல்வனேலுணாமினென்றுணர்மின்களே (சசா

என்றுபொன்றுமிவ்வுடன்முதலியாவும்வேறெனநீக்குப
நின்றதம்மில்வேறலனெனுநிலையைநின்றுதாதான்மிய
மொன்றுறும்பரிசுரைசெயூவுணரும்வண்ணமுணர்த்தினன்
பின்றலின்றியவல்லமாப்பிரபுவெனுங்குருராயனே. (சஎ)

தநதைதாயிலனாகியதானுவாகியசங்கரன்
மைந்தனாய்மகவில்லெனுமனவருத்தமகற்றவு
முந்துதேசிகனாகிநன்முத்திநல்கவுமெய்தினோ
ரிந்தமாதவரலதிலையென்றுமக்கடுதித்தனர். (சஅ)

ஆதலாலெழிலல்லமனருளினாலுறுகின்றது
வாதமாறுநன்முத்திதான்மலைதருங்கொடியறிதியென்
றோதினானதுபொழுதுடனிருந்தனனென்றவண்
மேதைமாயையறிந்திடவிமலைகூறினளென்பவே (௪௧)

எள்ளிலெண்ணெயெனப்படாரிந்தனத்தெரியென்னவாய்
விள்ளுமென்மலர்மணமெனவிரவியெங்கணுநிற்பினும்
வள்ளலல்லமனன்பர்தம்மனமடைந்துவிளங்குவன்
றெள்ளுமின்சுவைவிம்முபாறிரண்முலைக்கணினொழுகல்போல்

ஆறாவது-விமலைகதி-முற்றிற்று.

ஆக-திருவிருத்தம்-௩௫௪.

---

ஏழாவது

## மாயைசோலாகலகதி.

நல்லெழில்விமலையின்னணநவின்றிட
முல்லைவெண்ணகைவருமுயற்சியெண்ணியே
புல்லுவனவனையென்றெழுந்தபோதினி
லல்லமனகன்றமையறியக்கூறுவாம். (௧)

(மாயைஅல்லமனைஅடையும்விதம்வினாதல்)

முகிழ்மதியணிபவன்முதல்விக்கோதிய
வகைபெறவிமலைதான்வகுப்பமாயைகேட்
டகநெகிழ்வுற்றுநாமல்லமப்பெருந்
தகைதனையடைவதெவ்வாறுசாற்றென்றாள். (௨)

(இதுமுதல் ௰௪-கவிகளால்விமலைவிடைபகர்தல்)

மழுவலமுயரியவள்ளல்வந்தனை
யழகுறவியற்றினையாயினல்லமன்
விழியெதிர்தோன்றிநீமனத்துவேண்டிய
தொழிவறநல்குவனுனக்கென்றோதினாள். (௩)

முதல்விநீயுரைசெயுமுன்னமேயருண்
மதுகைநாயகன்றனைவழிபட்டேத்தினே
னதுதரும்பயனிலையறிந்துளேனெனப்
புதுமயன்மூழ்கினாள்புலர்ந்துகூறினாள். (௪)

வெருவறவிவளகவிழியிலாமையாற்
பரசிவபூசனைப்பயனிலெனறனை
ளாகரவென்றுகாதமகைவைத்தி.:.
துனைசெயும்விமலைதன்னுளங்கலங்கியே. (ரு)

பயனிலையருச்சனைபயின்றுமென்றனை
யயனரிமுதலியவமரர்க்காயினு
நயமொடுசெதூசிவநாதன்பூசனை
முயலுதலன்றியோவொண்ணமுற்றுமோ. (சா)

வாசவனரியயன்வானநாட்டுளோர்
பாசமின்முனிவரர்பலருமண்ணிடைப்
பூசனைவிதிமுறைபுரிந்தவாலயங
காசணியல்குலாய்காண்கிலாய்கொலோ. (எ)

மலைமகள்சூரரமகளிர்பாற்கட
லலைமகண்முனிவரில்லறக்கிழத்தியர்
கலைமகள்விழிநுதற்கடவுட்பூசையா
னிலைமைகளடந்தமைநினைந்திலாய்கொலோ. (அ)

சித்தியுமாயுளுஞ்சிறப்புங்காமிய
புத்தியரடைவரப்புதநிபோக்கினோ
முத்தியையடைவொமமுதல்வனபூசையாற்
சத்தியஞ்சத்தியந்தளர்மருஙகுலாய் (கூ)

பீடுறுமானிடப்பிறப்புவாய்த்துநல்
லேடவிழ்மலரினுலிறையைபபூசியார்
பாடமைகாளெலாம்பாழ்க்கிறைப்பவர்
மூடரையெண்ணுஙகான்முந்திநிற்பரோ. (கய)

காம்படுதோளிமுக்கண்ணன்றுண்மலா
தேம்படுமலர்கொடுபூசைசெய்பவர்
பாமபொடுபழகிலாபபரமனென்றவர்
பூம்பதமணமகிழ்ந்துலகம்போற்றுமே. (கக)

நோய்ப்பிறப்பிலாதகண்ணுதலைப்பூசியா
வாய்ப்புறததலைக்கொருமதிபெறுநர
ஞய்ப்பிறப்புற்றதினறிஞொள்ளுரு
காய்ப்பிறப்பாற்றவுநன்றுநன்றரோ. (கஉ)

பொருவிலியாகமம்புகன்றமந்திரக்
கிரியைகள்வழுவறக்கிளக்குநல்லருட்
குருபரனருளினாற்கொண்டுசெய்குநர்
ப்ர்சிவபூசனைப்பயனைநண்ணுவார். (௧௩)

அண்ணலைம்முகங்களுமருளுமாகம
நண்ணியவிதிமுறைநன்குசெய்யினு
மெண்ணருமன்புளத்தில்லையேயெனிற்
பண்ணியபூசனைபயன்றராதரோ (௧௪)

பூசைசெய்தன்னையும்பூசிக்கப்படு
மீசனதியிலபையுமிறைவன்பூசைசெய்
யாசறுபொருளையுமறிவறிந்துயர்
தேசிகனருளினாற்றெளியவேண்டுமால் (௧௫)

மந்திரதந்திரவழுக்கள் வந்தவோ
சிந்தனைபுறவிடயத்திற்சென்றதோ
பைந்தொடிபூசனைபயனிலென்றுநீ
நிந்தனைசெய்ததென்னிகழ்த்துவாயென்றாள் (௧௬)

(நூலாசிரியர்)

என்றுநல்விமலைமாதியப்பூசையால்
வென்றிகொளல்லமன்விழியிற்றோன்றிய
நன்றியையறிந்திலணழுவிநிற்றலால்
வன்றுயர்மனமுறமாயைகூறுவாள். (௧௭)

(மாயைவினாவிற்குவிமலைமனமிரங்கிவிடைபுகல்தல)

வேறு.

ஒன்றையுமுணர்கிலேனானெனகுருவுரைததவாற்றா
லின்றளவிலிங்கபூசையியற்றியுமபயனொன்றில்லை
யென்றனள்பருவமுற்றோர்க்கிருமறையுபதேசிப்ப
தன்றிவன்மனிதர்க்கோதினதுபயன்படுவதுண்டோ (௧௮)

நெறிபலமுறையுணாத்துநினைந்திலளதனையந்தோ
மறுகுறுமனத்தாளாகிமாயைமால்கொண்டிருந்தா
ளறிவிலர்க்கறிவிப்பார்தாமறிவிலராவரொன்று
வெறிமலர்வணர்வார்கூந்தல்விமலைதன்மனந்தளர்ந்து. (௧௯)

இவண்மனங்கவன்றிருந்ததினைநானறிவலென்று
குவிமுலைவிமலைசொல்வாள்கோற்றொடிமடந்தாய்நின்மே
லவிழ்மலரம்புபட்டதாயிருந்தன்றெனக்கு
நவிலுதிமறையேலன்னைநகமகளாணையென்றாள். (உ0)

ஆணையைவெருவிமாயையம்பலத்தாடாநின்ற
தாணுவுமுளமவிரும்புந்தண்ணுமைதொழிலான்கண்கட்
கூடொணுமழகின்மிக்கானொருவன்வந்தனனன்னானைக்
காணலுமெனைநான்காணேனென்றனள்கற்றார்போல. (உக)

அல்லமனனையனுமமவன்றனக்கலதென்னெஞ்சக்
கல்லுருகுறுதுமுக்கட்கடவுளுக்கன்றிமேரு
வில்லுருவாவதுண்டோவிளங்கிழாய்நின்னைக்காணு
நல்வினையொன்றிருப்பநானுயிர்தரித்தேனென்றாள். (உஉ)

நீநவிலல்லமன்வேனெடுங்கண்வாணுதன்மடந்தாய்
நானவிலல்லமன்றானச்சுமுன்றனக்குத்தக்க
மானிடவடிவங்கொண்டுவந்தனனபோலுமன்னோன்
ஞானநல்விழியினன்றிநயந்துதன்னுண்மைகாட்டான். (உங)

என்னநல்விமலைகூறவிலங்கிலைநெடுவேற்கண்ணி
தன்னிகரல்லமன்சசிதாநந்தசம்புவென்றா
யன்னவனலனிவன்றானமதத்தளவல்லமன்காண்
முன்றொடுபின்மயங்கமொழிந்தனையணங்கேயென்றாள். (உச)

வேண்டியவடிவங்கொண்டுவேண்டியவாறுசெய்யு
மாண்டருளல்லமற்கீதாமென்றுமாகாதென்றுங்
கோண்டருநினதுநெஞ்சாற்குறித்திடப்படுவதுண்டோ
பூண்டிகழிளமென்கொங்கைப்பொற்றொடியென்றுசொன்னாள்.

(மாயைவிமலைக்குத்தன்வலிமைபுகல்தல்.)

தருக்கநின்னுடனுரைத்தறக்காதினியரங்கிலென்றன்
கருத்துறுமனையன்றன்னைக்காட்டுவல்கண்டுநீயின்
புரைத்தருளினையனென்னவுணர்ந்தறிவரியனென்று
தெரித்தவனாயினன்றன்றிறலினைக்காண்பலென்றாள். (உசு)

(மாயைவிமலையோடுஆலயமடைதல்.)

கண்டுகொண் மணியின்றன்மைகாட்டுதற்கறிந்துளோனைக்
கொண்டுசெலபவரபோல்வந்தகோதையையுடன்கொண்டேகிப்
பண்டுதன்பூசைக்கெய்துமபரிசுபோன்மகளிர்சூழத
தொன்டையங்கனிவாயமாயைசுடர்மணிக்கோயில்புக்காள். ()

அருச்சனைமுன்புபோனன்றுற்றுபுமதுகைநாதன்
திருச்சரணங்கள்போற்றிசசேயரிநெடுங்கட்செவ்வாய்
விளைததுணர்மலாமெனகூநதல்விமலைமாதோடுமெந்து
நிருத்தமண்டபம்புகுந்தாணிளைவளைசதளிர்க்கைமாயை. (உஅ)

(மாயையாடிததல்.)

அலலமரிவாதாநதாமெனறறிதரவறிதிராமற்
சொல்லுகவெனசடிககுநதோற்றமபோன்மததளததை
வல்லவனறைதலோடுமாயைநெஞ்சுசலாடச்
சில்லரிமணிசசிலமபுசிலமபுறவாடுகினறாள (உகூ)

முன்னுறவிருந்தஞானமூர்ததிமேல்விழியுமார்த்துப
பின்னுறநின்றமூாததிமானமிசைப்பெயருநெஞசு
மனனுறவிருததின்னறுமாயைதானடிததாளகணடோா
தனனயனமுமானெஞசுநதனமிசைவநதுவீழ. (கூ0)

(நூலாசிரியா)

அரததமதுறபளிஙகாயரிமதாமழைககணமாயை
கருத்துறுகாமநதனபாற்காணுறததோனறிநின்றுன
வருததுறுசெயல்கொணமாயைமருவியகுணமடுததுப்
பரததிநிற்றென்றுமென்றுபகர்வதுமுணமையன்றே. (கூக)

கூத்துக்குப்புகுநதநம்பிகெரிட்டுகெகுநாணுறுமற
சீர்த்தப்புநடநவின்றுசிநதைதேறுகினறுள
வார்ததைக்குட்படாதஞானவாரியைவாயாற்சொல்ல
மூததுக்குமதியைவெனறமுகததியர்குழாததுணணி. (கூஉ)

கையொடுசெல்லாநின்றகடைக்கணுன்மாயைகாட்ட
வையனைவிமலைகண்ணுற்றதிசயமுடையளாகி
ஙவயகமதனின்மிககமனிதருளினையனபோல
மெய்யழகுடையான்றன்னைவேறுகண்டிலனென்றெண்ணி. ()

மாறருமலமனேயிவவடிவுகொண்டிவளசெயபூசைப்
பேறருளுதற்குற்றனேபெருந்தவத்தாறபிறநத
வேறொருமகனேனென்றுவிமலையைய த்தாளகித
தேறிலணிற்பமாயஞ்செய்துநின்றனனெனகோமான். (௯௪)

தமமில்வேலையினிற்சேய்மைததடத்தொருவனைக்கண்டன்று
னமைவுறவருதல்போதலையமுற்றறியாபோல
நிமலனைவிகாரியென்றுநிகழ்நிருவிகாரியென்றும்
விமலையேமயஙகுமென்னின்மாயையைவெறுப்பதென்னே. ()

(விமலைமாயைக்குஅல்லமனைதெரித்தல்.)

நீர்நிலைகோலாற்காணுநீர்மைபோலிங்குநின்றான்
சீர்நிலைமாயைதன்னாற்றெளிவுறவறிவலென்று
வேர்நிலைவடிவமாயைக்கினையனேயலமனென்று
வார்நிலைமுலைமடந்தைவடிக்கணாற்காட்டினளால். (௯௬)

(மாயைஅல்லமனையறிதல்.)

கண்ணினாற்கேட்குஞ்சீர்சால்கஙகணத்திறைவன்முன்னர்
கண்ணினாற்குமரர்நெஞ்சக்கட்டவிழ்த்தாடுவாட்குக்
கண்ணினாற்கூறவந்தகயிலைமாதறிந்தாளன்றாள்
கண்ணினாற்கண்டுஞானக்கண்ணினாற்காண்பான்றன்னை (௯௭)

(நூலாசிரியர்)

வல்லிதன்மனத்திற்காமமாய்ந்துவண்கயிலைக்குன்றிற்
சொல்லியசூணெஞ்சத்திறமறான்றலுஞ்சுழன்றுடிப்போ
யல்லமன்மீதுவீழ்வாளாகமேல்வீழ்ந்துபற்றிப்
புல்லியநினைந்துசென்றாள்புல்லியநெறியினின்றாள். (௯௮)

(அல்லமன்மாயையின்செயலைவெளிப்படுத்தல்)

கண்டனனவள்கருத்தைதக்காரிகைமனத்திற்காம
மண்டலமுணரக்காட்டிவழிக்கொள்வலென்றுளத்திற்
கொண்டுகைதவறிவீழ்ந்தகுடமெனமத்தளந்தான்
விண்டுகெவெறிந்துபோகட்டோடினன்விரைந்துவீரன். (௯௯)

(பாங்கியர்வியப்புற்றுவருந்துதல்.)

இத்தனையாட்டமெல்லாமிவட்கிதனாலென்றெண்ணி
மத்தளமதனைவீசிப்போகலபோல்வளளல்போகப்
பித்தடைந்தனன்கொலென்றுபித்துறீஇமாதரொல்லாங்
கைத்தளிர்விரன்முடக்கிக்கவுளடிவைத்துநின்றார். (௪௦)

பறையடித்தின்றுகாறுமறைத்தவிப்பாவைசெய்கை
பறையுடைத்தொழிந்துகாளைபாரொலாமறியச்செய்தான்
கறையடிக்களிநல்யானைக்கருங்கழற்சீற்றத்துப்பி
னிறைமகட்குயிரிலாதென்றிகுளையர்மனமுளைந்தார். (௪௧)

(மாயைதன்சூள்நழுவவருந்தல்.)

சிலைமதனின்றுசெய்யுஞ்செருவினுக்கன்றிவெள்ளி
மலைதனிலியம்புமாற்றம்வழுவிற்றென்றுளமழிந்தாள்
கலவிசெய்தலைவனீங்கக்கைப்பொருட்கழுதிரங்கு
முலைவிலைமகளிர்போலமுத்தவாணகைப்பொற்கொம்பு. (௪௨)

(மாயையைப்பாங்கியர்தேற்றல்.)

மாலைவாய்மனையேபோலுமாயைவாண்முகத்தைக்கண்டு
வேலுலாங்கருங்கட்செவ்வாய்விமலைமாதவளுளத்திற்
சாலுமாரஞரறிந்துதடங்கணாய்தளரேனீநின்
சீலநாயகன்போந்தேயந்தேடிநாங்காண்போமென்றாள். (௪௩)

(நூலாசிரியர்)

சிலைநுதல்விமலைசொல்லாற்றெளிந்துளமிறையைநோக்கிக்
கலைதொடருழைபோன்மாயைகாட்டினிற்றொடர்ந்துபோனாள்
மலர்தொடரளிகள்போலமாயையைத்தொடர்ந்துசென்றார்
கொலைபடுமயிலமர்த்துக்குழைபொருதடங்கணல்லார். (௪௪)

மெய்த்தவம்பயின்றுபெற்றுவேந்தர்க்குங்கொடாமன்முக்க
ணத்தனுக்கென்றுவாளாவரசன்வைத்திருந்தபாவை
மத்தளிகன்பின்போனாண்மகடனையந்தோவாண்டு
பத்தின்மேல்வைத்திருத்தல்பாவமென்றிகழ்ந்தார்கண்டோர் ()

பாவமும்பழியுநல்கும்பல்வகைப்புகழறங்கள்
யாவையுமழிக்குமெய்துமின்பமுமதனாலெய்து
நோவுநன்மரபுஞ்செய்யுநோன்புநல்லொழுக்கமேன்மை
சாவுமெண்ணுறுமனிற்குந்தயங்குபுன்காமமென்பார். (சசு)

(மாயைபாலையிற்செல்லல்.)

வேறு.

பஞ்சின்மேன்மிதிப்பினும்பதைபதைக்குமென்பதங்க
ளஞ்சுறுள்பரன்மிதிப்பதைநீருணவவாவாள்
விஞ்சுஞாயிறுமுதிரகதிர்வெதுப்பினைவெருவா
ணெஞ்சியோகிமேலிருத்தியந்நினைவிலைசென்றாள். (சஎ)

(பாலைவனச்சிறப்பு.)

காமவெந்தழலாலுடல்வெந்துளங்கரிந்த
கோமடந்தையலாலலைமேல்வருகுளிர்தண்
பூமடந்தையப்பாலையிற்போமெனிற்புனலிற்
றுமிளங்கயல்சுடுமணல்வீழ்ந்தெனத்தளரும். (சஅ)

பானலங்கருங்கண்ணிபோகியகொடும்பாலை
யானைதன்புழைக்கைநிகர்தூளியிடைவிடாமல்
வானநின்றுபெய்யினுந்தழற்பட்டவல்லிரும்பின்
மேனகந்தெறிதிவலைபோற்சுவறுறுமவிந்து. (சகூ)

மாலருந்தியபோதுதன்வயிற்றிடையிராதிப்
பாலையென்றுடனுமிழ்ந்திலனுகின்மெய்பதைத்து
வேலையின்றலைவீழ்ந்ததனாலுமுண்வெண்ணை
யாலுமவெந்தழறணிந்துயிருய்குவனலனே (ருo)

நாயினுவிநீர்சிறுமுயற்குருளைகணக்குந்
தீயபாலையிற்றனைமறந்தவசத்திற்சென்ற
மாயைமாதுபின்றொடர்ந்துசென்மலர்முகமிர்தர்
வாயினீரறீஇக்கண்கணீர்சுரந்தனவந்து. (ருக)

கானனீரொனச்சிறிதிடங்கடிதுசென்றிளைப்பார்
மானனூர்சிலர்வாய்க்ககடைநாவினல்வருடித்
தானையோாகரமுகத்தெதிரசைத்துமெய்தளர்வார்
வேனிலாகொடிதென்றுதம்விதியினைவெறுப்பார். (ருஉ)

மாதரிவ்வணந்தொடர்ந்துபின்வரவெழின்மாயை
பாததாமரைவருந்தினபாலையுண்டந்தவ்
வாதிநாயகன்றனைமறித்துதவிசெய்தறன்மெல்
லோதியோடுறவாவமென்றுழைகணமுன்னேறுமே. (௫௩)

கூந்தன்மேல்விரிமுகிறரக்கோபமவாயகாட்ட
சேந்தகொங்கைமயனவடமலையருவியையேய்ப்பக
காந்தளங்கைகடரவருங்கானெனக்கலாபம
வாய்ந்தமஞ்ஞைகண்மகிழவந்தனள்பெருவனத்தில். (௫௪)

(மாயைவரவறிந்தமாதவாமனந்தளர்தல்)

சிங்கமுங்கரியும்பணிசெயத்தவஞ்செய்யூ
உங்குறுந்தவாமாயைதன்முலையிடையாமா
தங்கமுஞ்சிறுசிங்கமுங்கண்டுளந்தளர்ந்து
பொங்குறுந்துயரோடெழுந்திரிந்துபோயினரால். (௫௫)

(நூலாசிரியர்.)

கொடியவாளரிவேங்கையைக்கண்டமான்குழாம்போ
னெடியவார்சடைமுனிவரர்கலங்குறுநிலையுந்
தொடியுலாவுமென்றோண்மடவார்வருந்துயரு
முடியுமாறருள்செயநினைந்தனனருண்மூர்த்தி. (௫௬

மாயைபோகவோர்கணத்தினிற்றரப்பனீர்மனத்தி
னேபுரீரெனவொருமுனிபோனின்றுநுவன்று
தூயமாதவாக்கருள்செய்துதொல்லைநல்லுருவாய்த்
தேயுநுண்மருங்கணங்கெதிர்தோன்றினன்சிரித்து. (௫௭)

பொங்குமாரழல்வெஞ்சுரம்புக்கபூவையர்க்குக்
கங்கையாறெதிர்ந்தாலெனக்கண்ணெதிர்தோன்று
மெங்கணாயகன்றிருவடித்தாமரையிணையைத்
தங்களாகுலந்தீர்ந்துமெய்குளிர்தரச்சார்ந்தார் (௫௮)

(பாங்கியர் அல்லமனைத்தூறுதல்.)

பெருகளற்றினிலழுந்தியங்கெழுபவன்பிடித்த
கரனெகிழ்த்துவிட்டகல்பவன்போலிளங்காளாய்
விரைமலர்க்கணைபட்டுளனையுமெல்லியலை
யருளறத்துறந்தனையென்கொலென்றனரவர்தாம். (௫௯)

(பாஙகியர்க்கு அல்லமன்சமாதானம்.)

பற்றியாயிடைவிடுத்ககாநீயிரோபற்றி
யிற்றறநா ஞா பெரிதெதிலெளிதனையிவ்வுலக
முற்றமோதாறுந்தமபிழைமொழிகுநருளரோ
குற்றாஙடியேதிலரிடைகூறுநரல்லால். (கூ0)

(பாஙகியர் அல்லமனைப்பழித்தல்.)

என்னவோதலுமல்லமனேந்திழைமடவார்
மன்னன் மாமகண் மனதழுதெழுகாமநோய்வளரு
முன்னநீமுனியாதிருந்தின்று தான்முனிந்தா
யென்னையேறவிட்டேணியைவாஙகினையென்றா.' (கூக)

(மாயைக்கும அல்லமனுககும்வாக்குவாதம்)

தொலலைநின்றிருமேனிபோலுள்ளமுநதூயதாய்
நல்லையென்றனைநமபினேனஙஞ்சகநடிப்பு
வலலையெனபதையறிந்திலேனெனவன்சொற்
சொல்லிநின்றனண் மாயையெமபிராணிதுசொல்லும (கூஉ)

வஞ்சநாடகநடிப்பதுமாயைதன்செயலோ
தஞ்சவலலமனறனசெயலோவெனததடஙகட்
பஞசின்மெல்லடியாய்கடவுளையுமபடிறி
னெஞசமாதவாதமையுங்கேட்டறிதிநீயென்றான். (கூ௩)

கள்ளன்மஙகையைகசளவுசெய்பொருளினைக்கண்டு
கொள்ளுநன்குறிபுகல்விப்பதொககுமென்கூதலைதத
தளாருஞசுராமுனிவராற்சொல்விக்குந்தகைமை
வளளலென்றுபுன்னகைகொளீஇயுரைக்குமம்மாயை. ()

நெஞ்சமயாதிறலெலனையகன்றிடவரிநினைக்குங்
கஞ்சன்மாயையையிலனெனக்கழறவாயுண்டோ
விஞ்சும்வானிறையென்னையெமமெய்யிறல்விடுவான்
றஞ்சயாயையென்றிகழ்தரததக்கசொற்கற்றோய். (கூரு)

என்னையஞ்சிமாவழங்குகாட்டிருக்குமாதவரொன்
றன்னைவென்றிடவல்லரோவல்லரொன்றன்னைப்
பின்னைவென்றிடவல்லரியார்பேசுதியென்று
மின்னைவென்றநுண்ணிடைசொலவல்லமன்விளம்பும. ()

என்றனுணையக்கடப்பவரிலையிலையென்று
வென்றிகூறினையேலவர்நிற்கவேல்விழியாய்
நின்றவாருயிர்முயற்சியாணிகழ்த்தியமாற்ற
மன்றிவாழ்மறையாகமத்தறிதியென்றறைந்தான். (௬எ)

* நாலுவாக்குநீபார்ப்பினுநானவற்றினுக்கு
மூலகாரணமாகுவன்மொழிந்தவிம்மாற்ற
நூலெலாமுணாத்திடுமெனச்செருக்கொடுநுவன்றாண்
மாலெலாம்பிறப்பதற்கிடமாகியமாயை. (௬அ)

ஆட்டுகிற்பனிவ்வுலகமுமென்றனைநின்னை
யாட்டுகிற்பவராரெனவறிந்திலைபேதாய்
கேட்டுநின்னையோர்பொருளெனமூடரோகிளப்பார்
நாட்டுமென்னைநன்கறிந்துயர்ஞானிகணவில்வார். (௬௯)

(நூலாசிரியர்)

ஆனையாரிருந்தாட்டுவோரவதையறியே
மாரவேள்செயுநோய்மறித்ததன்பினென்வாதம்
பாரெனுவியம்பினள்பசிக்கனமிடிற்பசிநோய்
தீருமாமருந்துதவுவனென்பவர்சீர்போல். (எ0)

காமியாகிநீயருச்சனைகடைப்பிடித்தமையா
னுமவேனெடுங்கண்ணினுய்காமிபோனடித்தேன்
றீமைனெஞ்சினுற்சூணினைந்தனைநினைத்தீண்டேன்
போமினுருடனென்றனன்வன்சொலாற்புனிதன் (எக)

(மாயைதன்வலியிழந்துவருந்துதல்).

வேறு.

மண்ணுலகிலிழிகுலமத்தளத்தொழிலோன்றனைவிரும்பிவறிது மீண்டா, ளண்ணன்மகளெனும்பழியைமாளாமனிறுவிப்போயங்கைகொட்டி, விண்ணுலகநகைசெய்யச்சூண்முடியாதெவ்வாறுவிமலன்பங்கிற், பெண்ணரசிதன்முகத்தில்விழிப்பலெனமாயையுளம்பீழையுற்றாள். (எஉ)

---

* நாலுவாக்காவன. பரை, பைசந்தி, மத்திமை, வைகரி. என்பனவைகளாம்.

(அல்லமன்மாயையைமுனிதல்.)

அன்பிஞலன்புபெறற்கெளியனுமெனைச்சூளோன்றறைந்துவ ந்து, வன்பினுற்பெறவேண்டிநின்றழிந்தாயிதுதகுமோமாயை மாதே, முன்பினுக்கவிதைத்துக்கரும்பாகவேண்டிமிக்முயன் றுநெஞ்சிற், றுன்பராய்த்திரியுமவர்போலென்றுன்மாயைதனைத் துறக்கவல்லான். (எங)

(மாயைவருந்தவிமலைஅல்லமனுக்குப்புகல்தல்.)

கறைகுறுகவந்தகலங்கவிழ்ந்தநாய்கன்போலக்கலங்கிநின்ற வளைபுனைமென்முலைமாயைதனைக்கண்டுவிமலையுளமறுகிமாழ்கி யிரதமுறுகளிம்புமலிசெம்பினியனேக்குருவியல்புபோல வருள்புரிதியையவிவள்குணநோக்காதென்றுதொழுதஞ்சிச் சொன்னள். (எச)

(விமலைக்கு அல்லமன்சமாதானம்.)

இலங்கிலைவேன்மருட்டுமதர்விழிவிமலாய்வறுயவோடிரதந்த ன்னு, னலங்கிளர்பொன்னுருவாயிலென்னுலிம்மாயையின்பீதனு குமென்று, புலங்களறிவரியபரமானந்தசிவயோகிபுகலமாயை, கலுங்கியெளிபசும்புண்ணிற்செவ்வேல்பட்டெனவழுங்கிக்கழறுகி ன்றுள். (எரு)

(நூலாசிரியர்.)

நனவொருபுன்கனவாகமயங்கவெனைப்புணர்தலினுனேம்வெ ன்றி, யெனவெதனநின்றுளஞ்செருக்கிமடமாயைகூறுதலுமெங்க ள்கோமான், கனவினுகர்வுறுமுணவுகுறையுமோபசியதனுற்க ளைவதுண்டோ, நினைவில்வருகனவொன்றுகண்டிறுமாந்தனை யேதாய்நீதானென்றான். (எசு)

எவ்வண்ணமுனைவன்மைகொண்டுநீதன்னினுகானின்றுபோ கேன், கைவண்ணமலர்ப்பழிமதனனையாய்நினைத்தழுவிக்கட்டிக் கொண்டு, செவ்வண்ணனமர்கைலைக்கேகியெஞ்ஞுண்முடிப்பலெ னச்செருக்கிச்சொன்னள், மைவண்ணமலர்க்குழலாள்வான்றிர ட்டிவிழுங்குவலென்மாற்றம்போல். (எஎ)

முடிக்குமலர்க்குழன்மடவாள்சூண்முடிப்பலெனுமொழிக்கு
முறுவல்செய்து, பிடிக்கவலையாயிலெனைப்பிடிநடையாய்பிடியெ
ன்றுபிரான்மறைந்தான், மடக்கொடிதன்விழியினாற்காண்பதும
போய்மதிமயங்கிவெறிதுநின்றாள், சுடத்தொடிமென்றோண்மட
வாரின்றிழந்தோமிவளையெனத்துயருழந்தார். (௭௮)

வெண்டிங்கணிலவுவாயிடைப்புகினுஞ்சகோரமென்னுமென்பு
ளன்றி, யுண்டிங்குவாழுமுயிருளதோநம்மல்லமனுமொருவன்
றானும், பண்டங்குமொழிமாயைகைப்படினுமவன்பிடிக்கப்படு
வனோதான், றொண்டன்பின்வழிநின்றுமனமாசுதீர்ந்தபெருந்து
யோர்க்கல்லால். (௭௯)

மாயைதனைவாதித்துத்தள்ளுருபுதன்னிலைநின்றுமாயாவாதி
யாயினனல்வீரசைவசித்தாந்தகுலதீபமாயினனென் [மாற்றற்
றோயுமனநிறுவியிறப்பெதிர்வுநிகழ்வெனுங்காலமுணரு [ந்தார்.
றூயமுனிவரொல்லாமல்லமனைத்தொழுதுதவந்தொடங்கிவாழ்

ஏழாவது-மாயைகோலாகலகதி-முற்றிற்று.

ஆக-திருவிருத்தம்-௪௯௬.

---

## எட்டாவது.

# வசவண்ணர் வந்தகதி.

---

உசைவிலல்லமற்காயுமைநற்கலை
வசவதேவன்வலியகணங்கடாங்
கசியுமன்பிற்கயிலையினின்றுதென்
றிசையில்வந்ததிறமுரைசெய்குவாம் (௧)

நீங்குகாணுஞ்சிறுவிலைநாட்கடன்
வாங்குமோர்பொருள்போக்கும்வறியர்போ
னீங்கஞானநெடுந்தகைமாயைநின்
றேங்குமாவியியக்கமுமின்றியே. (௨)

(மோகினியுமமகாரனுமாயையைத்தொடர்தல்.)

மத்தளங்கொடுவெந்தவன்றன்சொடு
பொய்த்தநுண்ணிடைபோயினளென்னவே
சித்தநாணுந்துயரமுந்தின்றிடப்
பித்தர்போற்பின்றொடர்ந்தனர்பெற்றவர். (க)

தக்கதந்தைதாய்சாயப்பழிசெயு
மக்களின்றிமிலேடர்தாமாதலு
மிக்கவன்பிணிமேவலுநல்லவென்
றுக்கநெஞ்சுடனோடினன்மன்னவன். (௪)

காய்பசிக்குக்கவன்றுதசைதின
வாய்பதைக்குமறவர்வலையிடைப்
போய்விழக்குழக்கன்றுபுகுந்தவண்
டாய்பதைப்பதுதன்னெதிர்காணுமோ. (ரு)

கண்டுவார்சிலைக்கானவர்பார்ப்பினைக்
கொண்டுபோகக்குடம்பைகண்டேங்கியே
தூண்டமாரினைசோரப்பறவைகண்
மண்டுநோயின்மறுகுதல்காணுமோ. (சு)

அரின்மிதிட்டதர்படப்பூம்பணை
மரமுறிததுமழைமதக்கைம்முக
வுரலடிப்பிறையொண்மருப்பஞ்செவிக்
கரிநடப்பக்கலங்கியிரியுமோ. (எ)

பரற்கண்மென்பதம்வைத்துப்பதைக்குமோ
சுரத்துமேனிதுவண்டுவெதும்பிநீ
ரிரக்குமோமகளென்செயுமோவெனத்
தரிக்கருந்துயர்தாயடைந்தேகினள். (அ)

பொன்னையன்னபுதல்விபொருட்டிவண்
மன்னர்மன்னன்மனத்தில்வளர்ந்தெழு
மின்னல்காணவுமழொன்றிருந்ததென்
றுன்னிமாழ்கியவ்வூரர்பின்போயினர். (க)

(அரசன்மகளைக்கண்டுபுகல்தல்).

அயர்ந்துநிற்குமரிவையைக்கண்டுநான்
முயன்றுமெய்த்தவமுற்றும்பயின்றனைப்
பயந்ததற்குப்பயனன்றுதவினை
நயந்தெமக்கெனத்தந்தைநவின்றனன். (௧0)

(தாய்வருந்தல்)

என்னைநீங்கியிழிதொழில்செய்பவன்
றன்னைநாடித்தலைமையிழந்தனே
கன்னிநீகொடுங்காட்டில்வந்தாயென
வன்னையோவென்றரற்றியழுதனள். (௧௧)

(விமலைஅவ்விருவர்க்கும்உண்மைபுகல்தல்).

மகனுமல்லனவ்வல்லமன்மாயைநும்
மகளுமல்லள்வளைபுனைதோளினு
யிகலும்வாட்கணரசியுநீயுமிங்
'கநலுமென்றுவிமலையறைகுவாள். (௧௨)

வினைப்பயன்கொளவேண்டுநேரரிடந்
தனைப்பொருந்துறச்சம்பந்தமாதிரத
தெனக்கினுரிவவொன்றபிமானமொன்
றனைப்பொருந்தியழிவரறிவிலார். (௧௩)

தனையராகியுந்தந்தைதாயாகியு
முனையுறுதவுயிரிலையாதலா
லினையர்கேளிரினையரயலென
நினைவுறேன்மினிர்நெட்டிலைவேலினுய். (௧௪)

(மாயைமுன்நிகழ்வுகூறிக்கைலாயஞ்சென்றமை).

வேனெடுங்கண்விமலையிவைசொலப்
பானலங்கட்பனிமதிவாண்முகப்
பூநறுங்குழற்பொற்றொடிமாயைமுன்
றனடைந்தமைதந்தைக்குணர்த்தியே. (௧௫)

காவியங்கட்கனியிதழ்மாதுமை
யோவவந்தவென்னெண்ணமுடித்திலன்
போவனங்கிப்புரிகுழலோடுநா
னீவிர்நோவன்மினென்னைநினைந்தெனா. (௧௬)

விரைந்தெழுந்துவிமலையணங்கொடு
வருந்துநெஞ்சகமாயையக்காட்டுளோர்
பிரிந்தழுங்குரல்பின்றொடர்ந்தேகவே
பொருந்தருங்கயிலைத்தடம்போயினாள் (௧௭)

(நூலாசிரியர்)

அழுதுவாய்விட்டரற்றிலன்றன்னுடல
புழுதியாடப்புரண்டிலன்மன்னவன்.
பழுதிலாததன்பாவைகாணாமையா
லெழுதுமோவியமென்னநின்றனனோ. (௧௮)

(மாயையைநினைந்துதாய்படுந்துன்பம்).

விழுவண்மீளவெழுவண்மெலிந்துநைந்
தழுவண்மேனியசைந்துநிலங்கையா
லுழுவள்வாய்நொண்டுயிர்ப்பளிறப்பலென்
றழுவள்கைநெரித்தேங்குவளன்னையே. (௧௯)

பாடுமாதரும்பந்துங்கழங்குநன்
றாடுமாதருமாகுமரிவைய
ரோடுமேவியொருமகள்வாழ்ந்தவம
மாடநாளினிக்கண்டுயிராவாழ்வனோ (௨௦)

துளிக்கும்வார்மதுச்சோலையும்வாவியும்
பளிக்குமாடமும்பாழ்படவெனமகள்
களிக்குமாணிருங்காட்டினுளெம்மைவிட்
டொளிக்குமாறொருசற்றுமுணர்ந்திலேன். (௨௧)

என்னைவிட்டிருப்பினும்பொற்றொடி
யுன்னைநான்விட்டுயிர்பிழையேனென
வன்னைவாய்விட்டரற்றினளாயிடை
மின்னனாருங்கதறினர்வேலைபோல். (௨௨)

## இருபத்துமூன்றாவது

## ஆரோகணகதி,

---

ஒருவருரைப்பணவொருவர்பசிகெடார்
தனையிலென்னுஞ்சகுமொழிபொய்த்திட
வருளினல்லமனுருமபசிகெட
விரவியுண்டமிகுதிவிளம்புவாம். (௧)

தண்ணாந்திங்களிற்றண்ணெனத்தண்கதிர்
வண்ணங்குன்றுறுஞாயிறுவாசிலைப்
பண்ணங்குன்றுறுபான்மையினுதனத்
தெண்ணணந்தேவனிருந்தருள்காலையின். (௨)

ஏத்துற்றஅல்லமனைக்கண்டவசவேசர்அசைவற்றிருந்தமை

வசவனுள்ளம்வயல்புகுநீரென
விசயநல்லமன்மேனிவடிவமா
யசைவிலன்பிறிதொன்றுமறிந்தில
னிசையுமோவியமென்னவிருந்தனன். (௩)

அல்லமனுகியவமுதத்தைச்சென்னவசவையர்நோக்குதல்;

கழுமணித்தவிசென்னுங்கலத்திடை
யழிவற்றதிகழல்லமனுகிய
செழியநற்சுவைதெசன்னவசவனும்
விழியினுக்குவிருந்திட்டனனரோ. (௪)

(மோளிகைமாறன்மடிவாலமாச்சையர்முனமாகியவண்டினங்
களஅல்லமனுகியமலரிடத்துற்றமை)

முனிவினைக்கொளுமோளிகைமாறனும்
வினையினைத்தெறுமெய்மமடிவாலனுங
தனைநிகர்க்குந்தவிசமர்பூவினை
மனமெனப்படுமவணடுறவிட்டனர். (௫)

(அல்லமனிருந்தஆதனத்தைஅடியார்கள்சூழ்ந்தமை)

முன்னிருந்தமுதுக்குறைவாளரும்
பின்னடைந்தபெரியருமாகிய
மன்னிருந்தமணித்தவிசின்புடைத்
துன்னியெங்கணுஞ்சூழ்ந்தனர்தொண்டரோ. (௬

(ருத்திராக்கமணிபவர், பஞ்சாக்கரதியானமுடையார்சிலர்)
புண்டரந்திருநெற்றியிற்பூசிமெய்க்
கண்டியெனவுங்கலனணிவார்சிலர்
பண்டைநான்மறையின்பயனாகவே
கொண்டவஞ்செழுத்துங்குறிப்பார்சிலர். (எ)

(ஆகமவிதிப்படிசிவார்ச்சனைபுரிபவர்சிலர்)
நந்தனந்தருநாண்மலர்மஞ்சனஞ்
சந்தனஞ்சுடர்தண்புகையாதிகொண்
டிந்தியங்களெலாமடங்குள்ளமோ
டந்திவண்ணனையர்ச்சிப்பரோர்சிலர். (அ)

(இந்திரியாலயமுடையார்க்கேவல்புரிபவர்சிலர்)
தாவில்பூசனைதாம்புரிகிற்பதிற்
பாரெலாஞ்சொலப்பட்டிடுமைம்புலக்
காவல்செய்யுங்கருத்துடையார்தமக்
கேவல்செய்தனன்றென்றுசெய்வார்சிலர். (கூ)

(சிவபிரானைத்தோத்திரஞ்செய்பவர்சிலர்)
பூசனைத்தொழில்பூண்பதினெண்மடங்
கீசனைத்துதித்தேத்துதனன்றென
ஆசலொத்தவுளமிலராய்ப்புலத்
தூசிநிற்பத்துதிப்பவரோர்சிலர். (க0)

(வேதத்தின்முடிவாகியதத்துவமசியின்பொருளைத்
தியானிப்பவர்சிலர்)
அங்கலிங்கமயிக்கமிதுவென
மங்கலந்தருமாமறையின்முடித்
தங்குறுந்தத்துவமசிதன்பொருள்
பங்கமின்றிப்பகர்பவரோர்சிலர். (கக)

(அல்லமனுகியஆசிரியனிடத்திற்பசுபதிபாசவியல்பைத்
தெளிபவர்சிலர்)
பாசமேதுபசுவெனப்பட்டதே
தீசன்யார்பதியெவ்வகையாருயிர்க்
காசுதீரவருளுமருளுடைத்
தேசிகரவெனத்தேர்பவரோர்சிலர். (கஉ)

(மானதபூசையாற்சிவபோதமிழந்தவர்சிலர்)
புறந்தினஞ்செயும்பூசையினன்றெனச்
சிறந்தகஞ்செய்தியானமருவிமெய்
மறந்திருந்தமனஞ்சிவலிங்கமுற்
றிறந்திடுந்திறமெய்தினரோர்சிலர். (கங)

இடகலைபிங்கலைதடுத்துச்சுழிமுனையினிறுத்தினர்சிலா
ஒடிமீளுமுயிர்நின்றிடாதெனி
னீடுமாமனநிற்பதன்றுதலால்
வீடுமேவரிதென்றுவிதிமுறை
நாடிவாயுநலிபவரோராசிலர். (௧௪)

(அல்லமனிடத்தில்அன்புவைத்தவசவரைக்கண்ட
அடியார்கள்மனமவருந்திநீங்கினமை)

இனையராகியிருந்தவக்காலையி
லனையனாகியவல்லமன்றனனிடை
நினைவெலாமுறநின்றுதமதிடை
மனமிலாதவசவனைக்கண்டனர். (௧௫)

வேறு.

பெரியவர்சிறுமையொன்றும்பெற்றிடை
யரவணிகடவுடனடியர்தமமுளே
தெரிபவனெவனவன்சிறியனேயென
விரிவுறுமறையெலாம்விளம்புமென்பவே. (௧௬)

ஆவுரிதகிடினுநீறணியுமன்பனம்
மாவுரித்தவனெனவணங்கத்தக்கவன்
பூவுரித்தவன்பதம்புனையப்போற்றுற
நாவுரித்தெனமறைநான்குமோதுமால். (௧௭)

வந்தவர்வருபவர்வருகின்றார்களா
மந்தமிலடியர்மாட்டாற்றுஞ்செய்கையைச்
சிந்தனைசெய்கிலன்றேசிகனசெயு
மிந்திரசாலமுற்றிருந்துநந்தியே (௧௮)

பத்தியிற்றவறினேன்பாலிருந்துநாந்
துய்த்துடற்சுமப்பதிற்றுறத்தனன்றென
மெய்த்தவக்குழாமெலாமருண்டுபோயின
வத்தனற்றண்டநாயகனைவிட்டரோ. (௧௯)

(அடியார்கள்நீங்கவசவேசர்மணவினைமுடிந்தமனைபோலிருக்கு
மடத்தைநோக்கினமை)

துன்றியமெய்த்தவர்துறந்துபோயபின்
மன்றல்செய்மற்றைநாண்மனையையொத்தொரு
தன்றனிநற்புரந்தனிப்பக்கண்டனை
னன்றறிநற்செயனந்திதேவனே. (௨0)

அடியார்கள்அமுதருந்தாதொழிந்தமைநோக்கிவசவேசர்மனம
வருந்துதல்)

எழுவினனன்புசெயவழியையின்றுநான்
குழுவுறுமடியவர்க்குறிததுச்செய்தவிவ்
வொழிவறுமடிசிலுண்டொழிந்திடாததீங்
கழிவுறுமேயெனவகந்தளர்ந்தனன். (உக)

சங்கமபத்திசெய்தண்டநாதனே
சங்கமபத்திசெய்தகைமைபூணுநான்
சங்கமபத்தியிற்றவறினேனென்றாற்
சங்கமபத்திசெய்தன்மையெனமையோ (உஉ)

இழிப்பினுமவெறுப்பினுமில்லினுள்ளனை
வழிப்பினுமுடமபினையரிந்துகொல்லினுங்
பழிப்பறுசங்கமபத்திசெய்பவ
ரொழிப்பதுபிறவியென்றுலகமோதுமே (உங)

அடியார்கள்பசிநீங்கஅல்லமனவசவேசரிடத்தில்அமுதருந்த
நினைததல)

இம்முறைசங்கமபத்தியெய்திய
வெம்முடைநந்திதனெண்ணமுற்றுற
வம்மடையடிசிலுண்டலமன்மாதவா
தம்முறுபசியெலாந்தணிப்பவுன்னினன (உச)

சவேசரிடத்தில்அல்லமன்தனதுபசிநோயைவிரைவி
லகற்றென்றல்)

ஒருவன்யான்சிறுபசியுடையனசிற்றுண
விரைவுறவிடுதிநீவேண்டுமாறுபின
பரிவுளவடியவர்பாற்செயென்றனன்
பொருவறுவசவனைநோக்கிப்போதகன் (உரு)

(வசவேசர்அல்லமனையுபசரித்துஅமுதுசெய்வித்தல்)

ஐயனுமுனிவுறுதருளும்வண்ணமயான்
செய்யுநல்வினையெனமகிழ்ந்துதேவனைப்
பையவுண்மனையிடைப்பணிந்துகொண்டுபோய்ப்
பெய்யுமென்மலர்மணிப்பீடத்தேற்றினான். (உசு)

ஏற்றியவருள்வசவேசனெம்பிரான்
காற்றுணைமலர்களைக்கந்தமஞ்சன
நாற்றமென்மலர்நறுமபுகைவிளக்கெனட்
போற்றியவிவைகொடுபூசைசெய்தனன். (உஎ)

பூசனைசெய்தபின்போற்றிநின்றுபொற்
பாசனமமைத்தவென்பதம்படைத்துமேல்
யோசனைகைகமழ்நறியுமொள்ளிய
போசனமுறையிடப்புரிந்தனனதியே. (உஅ)
அருந்துகவெனவடிதொழுவமக்கலந்
திருந்தியமுநளோரவிழுஞ்சேடியா
தருந்தினன்றரிமைப்போதனலமன்
பொருந்தியவரிறுபபூதராகவே (உகூ)
பின்னருமமுறைபெய்யவயனவ்
வன்னமுமமுமைறயநந்திப்பின்னரும்
பின்னருமமமுறைபெயயவுண்டனன்
றன்னுளமகியநதனனறண்டநாயகன். (கூ௦)
சிறுச்சிறிதனமிதிருசெய்கையாலரு
ளிறைக்கெறிலுதரவெமெருப்பெழுந்ததால்
விறற்கனலமுறைவிறகிடககனன
றறப்பெரிதெனவெழுந்தோங்கல்போலவே. (கூக)
எண்ணியவெணணறிபாங்கியற்றுமேவல
ரண்ணலுமவருநெனவழைததுநமனைப்
பணணியபதமெலாமபடைமினென்றலுந்
துண்ணெனவனமிடுதொழிறொடங்கினர். (கூஉ)

வேறு.

அளவறுமடியர்க்கெல்லாமாக்கியவடிசிற்குன்றங்
கொளவுறக்கூடையோடுகூடைகடாக்கக்கொண்டு
வளமுறுகயிலைக்குன்றபெயர்த்திவண்வைத்ததென்னத
தளவுறவடிசிலெங்கடம்பிரானெதிர்குவித்தார். (கூங)
பருப்பொருபொருப்பெனத்தாம்படைசதனர்சிலரொடுத்து
விளைப்புதுநெய்கவிழ்த்துவிடுத்தனர்சிலாமணக்கும்
பொரிக்கறிபளிதமபாகுபுளிங்கறிபலவுமெல்லா
நிலைத்தொருசிலர்சொரிந்துநின்றனர்முகில்கள்போல. (கூச)
வடைபடுதிகிரியாகமாங்கனிகவண்கல்லாக
வுடைபடுகழைக்கரும்பங்கொண்கதையாகக்கொண்டு
கடைபடுமுலகிற்கெல்லாங்காரியகருத்தன்முன்னர்ப்
படைபடையெனச்சொரிந்தார்படைமுகத்திளைஞர்போல. (கூரு)
குளங்கரையாகவந்தக்குளத்தினுட்பசுவின்றீம்பால்
விளங்குறுமமுதவேலைவிடுத்தெனவிட்டாசில்லோ
ருளங்கனிமூவர்செய்யுளொத்தமுக்கனியுமேனோர்
வளங்கெழுதொடர்புபோலுமற்றையபழமுந்தார்ததார். (கூசு)

எண்ணிலரிடுவவெல்லாமினியனவின்றென்றான்
கண்ணிமையொடுங்குமுன்னங்கடிதயின்றுதவுறுமல்
வண்ணமெனமலர்கைவாங்கிப்பறிதிருந்தனனெங்கோனேர்ப்
பண்ணவன்பரிக்குமேபெள்ளமெனபணவங்குண்டோ. (௩௭)

(மடைத்தொழிற்புலவர்வசவேசெருக்குக்குறிப்பறிவித்தல்)

சற்றினுமுண்கவென்றுதமருபசரியாவண்ணஞ்
சுற்றினுமிடுகவென்றுதம்பிரானுணர்த்தினான்
மற்றிதுகண்டுநின்றோமட்கலமொழியவேறு
பற்றிலையென்றநந்திதிருமுகம்பார்த்துச்சொன்னார். (௩௮)

(அடியார்கள்தங்களிலவிளைந்தவமுதுகளைக்கொண்டுவந்து
படைத்தல்)

உண்விளையாடல்செய்யுமொருவனைக்கண்டுவேண்மேற்
கண்விளையாடுநெற்றிக்கடவுளைமெய்யடியாரெல்லாம்
விண்விளையாடுஞ்சோலையயனகரிடத்திற்செலவ
பெண்விளையாடுந்தமிற்பேரணிமிகுறநண்ணி. (௩௯)

பாண்டினைமேலேற்றியெருதுமபானையிறகுடந்துமந்தும்
வேண்டியபாகமுற்றுவேறுவேறுயானை
மாண்டகைக்கூரனுணணவளவிலாசொரிந்துயர்த்தா
ரூணடழலவெறுக்குமவணணமூட்டுவெவ்வபார்போல (௪௰)

மலையெனவமலஞானவாரிமுனசெறிந்துபாப்பா
ரிலைமலாபசுங்காயந்தமிளகுசொற்ந்தணடாற்செய்த
வுலையமைபல்காயபெயொணகறியமுதுவேறு
பலபலமுறைமயங்கப்படைப்பர்சொல்விரைந்துவந்து. (௪௧)

குய்கமழ்கறிகளிட்டுக்குவிப்பார்சிலரொடுதது
நெய்கவிழ்கையராகிநிற்பர்சிலர்நிரமபப்
பெய்கவிழ்சொரியெனறுன்பால்பெய்பவர்சிலரளைந்த
கைகமழ்தயிர்க்குடத்தாற்கவிழ்ப்பவர்சிலரங்கம்மா. (௪௨)

இட்டவர்மறியவன்னமிடுதற்குவிரைந்துசெல்வார்
மூட்டுவரொதிர்நடந்துமூரல்கைவாங்கிவாங்கிக்
கொட்டுவாடிசிறந்தகூடைகள்கவிழ்ததெறிந்து
தட்டுவரனம்படைக்குந்தம்பிரானடியரன்றே (௪௩)

(அல்லமனுக்குப்பசிநோய்தணியாமையால்பலபண்டங்களா
லொழிக்கநினைத்தல்)

இன்னணம்படைத்தவெல்லாமிமைப்பினிலயின்றுசைவ
மன்னவனவயிற்றின்வெந்தீவளர்த்தினிநீயொல்லா
மென்னநல்வசவதேவனிருந்தபல்பண்டங்கொண்டு
முன்னவன்பசியையாற்றமுன்னிமற்றிதனைச்செய்தான். (௪௪)

அவரையும்பயறுமெள்ளுமரிசியுமவலுங்கொள்ளுந்
துவரையுங்கடலையுஞ்செஞ்சோளமுநெல்லும்புல்லுங்
குவரையுங்கயிலையுமபொற்குன்றமும்போலஞாலத்
தெவரையுங்களிப்புச்செய்யவெங்கணுங்குவிப்பித்தானால்
(வசவேசர்மனத்தாலியற்றவல்லமனிலைவாலயின்றமை
குன்றெனக்குவித்தவெல்லாங்கொள்ளெனக்கொண்டுநம்பனை
மென்றனைக்கணத்துளின்றுமெல்வனகொணர்தியென்ன
வன்றிறற்றண்டநாதன்மனத்தினாலவையியற்றி
நின்றிடத்தம்பிரானுநினைவினாலவையாயின்றான். (௩௯)

(அடியார்கள்வசவேசரியல்பையும்அல்லமனியல்பையுநோக்கிப் புகன்றுவணங்குதல்)

நோக்கினாலளித்தவெல்லாநோக்கினாற்றொலைத்தானந்தி
வாக்கினாலளித்தவெல்லாமவாக்கினால்வளனளுண்டு
போக்கினானிடுதலுண்ணவென்னுமிப்போரின்கண்ணே
தூக்கினாலிருவர்தாமுந்தோல்வியுற்றுடைந்தாரில்லை. (௪௰)

படைத்திடுந்தொழின்முயன்றபத்தனாரியல்புமன்ன
துடைத்திடுந்தொழிலினின்றதூயவனியல்புநோக்கி
யடுத்தநற்பத்தரெல்லாமனைபவரிருவர்சீரு
மெடுத்துரைத்துளம்வியப்புற்றிறைஞ்சினரொருங்குமாதோ ()

இடுதற்குவல்லானந்தியிடுபொருளெவற்றையுங்கை
தொடுதற்குவல்லானித்தத்தூயவனென்பரிவ்வா
றிடுதற்குவல்லாரில்லையென்பரிவ்வாறுநாங்கை
தொடுதற்குவல்லார்தம்மைச்சொல்லவுங்கேளேமென்பார் ()

(அல்லமனுக்கமையுமுணவைவசவேசருக்குச்சென்னவசவையர்புகல்தல்)

கண்ணப்பனன்பினானேநறியெனவமைத்தவூனை
யுண்ணப்பனூணினவேறுமுயிருணினமையவனென்று
வண்ணப்பொன்னனையசென்னவசவதேசிகன்வணங்கி
விண்ணப்பஞ்செய்தான்றுங்கவிடைமுகங்கரந்தானோடு (௫௰)

(மடிவாலமாச்சையர்புகலவசவேசர்அல்லமனுக்குப்பொருந்துமாறுவமுதருத்துவித்தல்) வேறு.

சென்னவசவன்சொல்லியவசசெயலேசெய்யுஞ்செயலென்று
மன்னுமருளின்மடிவாலமாச்சிதேவன்வந்துரைப்ப [து
வென்னையுடையானும்மொழியேயெனதுமனத்தைத்தேற்றும
பின்னேயுளதோ*கதகமலாற்பெருநீர்தெளித்தற்கென்றுரைத்து.

* கதம்-தேற்றாங்கொட்டை.

பொறிகள்கரணம்பூதங்கள்புலன்கண்மற்றும்பல்வகைய
கறிகளாகவாருயிரோகலந்துண்பதமாகீயுண்ணப்
பெறுவதிலன்யானெனநின்றுபிறவிபடணிதீர்மருத்துவன்ற
னறியமலர்மெல்லடிபணிந்தானமையாளுடையகருணந்தி. ()

(அல்லமன்அடியார்கள்களிக்கவசவேசனைப்புல்லுதல்)

வசவனிலேகண்டருணஞானவள்ளலல்லமப்பெயரான
பசியின்வந்தேலனபொருட்குப்படர்காமக்குறைந்திலன்யான்
கசியுநினதுமனத்தனுபுகாணவந்தேனென்றேத்தி
யிசையினமலியுமரனடியார்யாருமகிழவெடுத்தணைத்தான். ()

(வசவேசா அல்லமனைப்புகழ்ந்துவணங்கிநிற்றல்.)

கண்போலுயிர்கள்கண்டறியக்கதிரோபோற்காட்டுமபெருமானே
யுண்போன்யானூட்டுமுனக்கூட்டுவேனென்றெழுந்தமையா
லென்போதெனபோற்பேதைமையாரில்லையில்லையென்றனன்
பண்போடமலனெதிரநின்றுனபதிவடிவமாயினான். [பின்,

(அடியார்கள்புகழ்ந்துமகிழ்ந்தமை.)

செம்மைநெறியானருணந்திதேவன்றன்னைப்புகழ்வமோ
பொய்ம்மைதீருமல்லமனைப்புகழ்வமோவிங்கன்றியிவர்
தமமைவிழியாற்காணபதறகுத்தவஞ்செய்துடலமிதுபெற்ற
மெய்மைபாமேபுகழ்வமோவெனநின்றனர்தமபிரானடியார். ()

(அல்லமன்ஏவுதலால்வசவேசர்அடியார்களுக்கமுதருத்திவிக்கச
செல்லுதல் )

பரிந்தநந்திமுகநோக்கிப்பசித்தாமொன்றுநீதளரப்
பிரிந்தவந்தவடியர்தமைப்பிறங்கலனையநின்மாடத்
தருந்தவணர்க்கிக்கொணர்தியெனவறிவானந்தமயன்கூற [தில்
விரைந்துவிடைகொண்டெழுந்தன்புவெள்ளஞ்சென்றதவரிடத

(வசவேசர்அல்லமனருந்தியவுணவுகளியாவுமருந்தியகமகிழ்வுற்
றிருக்குமடியார்களைக்காண்டல் )

சென்றவசவனருட்குரவன்றிருமேனியிற்றுணங்கணிந்த
மன்றன்மலருஞ்சந்தனமும்வடிவிற்றிகழமடிநிமிர்ந்து
தின்றன்முதலகறிமணக்கத்தேக்குவிடுத்துமுகமலர்ந்து [ல்.
கொன்றைகமழ்வேணியனடியார்குழாங்களிருப்பக்கண்டனனு

(வசவேசர்வணங்கிஅழைக்கஅடியார்கள்புகல்தல் )

கண்டநந்தியடிபணிந்துகடையேன்செய்தபிழையெல்லா
முண்டுபொறுமின்வருகவெனவுள்ளங்களிப்புற்றுங்கிருக்க
தொண்டர்வசவநின்பெருமைசொல்லவெளிதோவயிருரப்
பண்டுபோலவாய்கவொழிற்புடாமலயின்றேமின்றென்று. ()

தேவருண்ணவவியுணவுசெந்தீமுகத்திலிடுதல்போ
லோவில்யாங்களெல்லேமுமுணணவடிசிலல்லமன்ற
ஞவின்மருவவிடுகின்னையோர்நாவோபுகழுந்தரத்ததென
வாவியவினையகந்திரிமலனடியார்புகன்றேறதி. (ருக)
உலகிலொருவன்சிவயோகியுண்டதமமாசராசரமா
மலகிலுயிர்களெலாமுண்டதாகுமென்னமறைகூறு
மிலகுமுறையைக்காட்சியானின்றிங்குணரவுணர்த்தினன்
கலகவினைகடீாக்குமருட்கண்ணன்றிகழல்லமதேவன் (சுய)
ஆதலாலவ்வல்லமனையருத்தலெமைமையெலாமருத்தல்
பாதமனைப்பணிதலெமைப்பணிதலாகுமென்ஞான்றும்
பேதமில்லைநல்வசைப்பெயரோய்செல்கவென்னமலை
மாதுதழுவக்குழைந்ததோள்வள்ளலடியாாதமைவணங்கி. (சுக)
(வசவேசர்மீண்டுஅடியார்களியல்பைஅலலமனுக்குப்புகல்தல்.)
மீண்டுநந்தியல்லமஞாமென்பூங்கமலவடியிறைஞ்சி
யாண்டபெருமானடியார்களனையுண்டவுணவுகரு
வீண்டுமெகவுமுண்ணல்போலெந்தையுண்டவெலாமுண்டு
பூண்டமகிழ்வோடிருந்தனாநீபுனைந்தமலருமபுனைந்தென்றான்.
(உலகோர்புகல்தல்.)
மாறனடித்தவடிபட்டமன்னுமுயிரின்றிறமெல்லா
மீறில்புகழ்க்கங்கணவசவனிட்டவடிசிலுணடுபசி
யாறியிருந்தாதலினுலல்லமன்பூரணனென்னக்
கூறுமொழிமெய்மெய்யென்றுகூறியுலகங்களித்ததால். (சுங)
(அல்லமன்வேதாகமத்தின்பொருளைவசவேசருக்குணர்த்த
நினைத்தல்.)
இவ்வாறருந்தியமைதிபெருமெய்கள்பரமயோகிதான்
றெவ்வாகியவைம்புலன்வென்றதிறல்கூர்வசவன்றனைமகிழ்ந்து
சைவாகமமுநான்மறையுஞ்சாற்றுமபொருளையுணர்த்துதற்குச
செவ்வாய்மலாததிருவுள்ளஞ்செய்துதனிவீற்றிருந்தனனால். ()
இருபத்துமூன்றாவது-ஆரோகணகதி-முற்றிற்று.
ஆக திருவிருத்தம்-கககo.
இருபத்துநான்காவது
மனோலயகதி.

மயக்குதலின்றிமனோலயமெய்திற்
சயந்தருமுத்தலைப்படுமென்று
நயந்தருபல்லமனா தன்விளங்க
வியம்பியவண்ணமியம்புதுமன்றே. (க)

வாரணமாகுமனத்தையடக்கிற்
காரணமாயைகளைந்தொழியாத
பூரணமாகியபோதமடைந்திட்
டாரணமோதுமருமபொருளாவான். (கo)

வேறு.

விரிந்தநெஞ்சங்கருவியாம்விடையமுணரவிரியாம
லொருங்குநெஞ்சங்கருவியாந்தனையுணரவொருங்காமல்
விரிந்தநெஞ்சமுடையவனைவிடாதுபிறவியென்றுணர்க
வொருங்குநெஞ்சமுடையானையுறாதுபிறப்பென்றுணர்கவே. ()

அந்தக்கரணசுத்தியேயறிவையறிதற்சாதனமவ்
வந்தக்கரணசுத்திதனக்கறையுங்கருமமாரணங்க
ளந்தக்கரணசுத்திதானுவதவாவற்றிடுதலே
யந்தக்கரணசுத்தியினாலடைவன்பிண்டப்பெயரன்றே. (க௨)

ஆசையறுதல்வீட்டினைப்பேறடைதற்காரணமா
மாசையறுதலதில்லைப்பலநூலனைத்துமாய்ந்திடினு
மாசையறுவோனசிவனாதறிண்ணமெனநன்றறிந்திருந்து
மாசையறுதலென்கொண்டோவந்தோமனிதரறியேமே (க௩)

ஆசுதீர்ந்தமனத்தினிடையன்றியுணர்வுதோன்றாது
மாசுதீர்ந்தவாடியிடையன்றிவதனந்தோன்றுமோ
பாசநீங்குபரஞ்சுடரைநினைக்குநினைவாற்பற்றுமனங்
காசநீங்குகண்போலத்தனைக்காணவிளங்குமால். (க௪)

வானமல்லேன்வளியல்லேனழனீரல்லேனமண்ணல்லேன
ஞானமல்லேனவினையல்லேனானேசிவமென்றெண்ணினோ
னூனமில்லாவொருசிவமேயாவனிவ்வாறுன்னாதா
னீனமெல்லாமுடையவுடம்பெடுத்துச்சுழலுமென்றும். ()

தன்னைச்சிவமென்றறிந்தவனேயறிஞான்றனையுண்மையாத
தன்னைச்சிவமென்றறியாதானறியானென்றுந்தன்னுண்மை
தன்னைச்சிவமென்றறிந்தவன்றேதாழ்வாமபாசந்தனைநீப்பன்
றன்னைச்சிவமென்றறியாதான்றனக்குப்பிறப்பேதுணையாகும.

தன்னைப்பேதமாய்க்காண்கைசகத்திற்காணப்பட்டதாந
தன்னைப்பேதமறச்சிவமென்றறிவோன்ஞானிதானொருவ
னென்னக்கருதிமறையதுநீயானாயெனவத்துவிதந்
தன்னைப்புகலுங்கண்டதனைச்சாற்றன்மறையின்கருத்தன்றே

தூய்தாகியநெஞ்சுடையார்க்குத்தாமேசிவமாத்தோன்றுமாற்
றீதாகியநெஞ்சுடையார்க்குத்தெளியவபேதமிகலின்றி
வேதாகமங்கள்விளம்பிடினும்விளங்காதென்றும்வேறென்னும்
வாதாலழிவரவர்மாயைமயக்கமயங்குமதியினர். (க௮)

நெஞ்சஞ்சோகம்பாவனையினிற்கநிறுத்திவிடயங்க
ளஞ்சுந்துறவாத்துறந்தசிவயோகியொருவனடியிணையிற்
றுஞ்சுந்திருமால்முதலமரருள்ளமவனைத்துதித்திறைஞ்சா
தெஞ்சுந்தவமாமுனிவரிலையெனநான்மறையுமியம்புமால். (கக)

(உபதேசம்பெற்றவசவேசர்அல்லமனைவணங்கஅடியார்களியாவரும்வணங்குதல்.)

என்றுகருணைபொழிவிழியெங்கோமானுண்மையினிதியம்ப
நின்றவசவராயனுளமழல்சேர்மெழுகினெக்குருகிச்
சென்றுகுரவனடிபணிந்தான்சென்னவசவண்முதலாகத்
துன்றுசரணருய்ந்தனம்யாமென்றுதுதித்துத்தொழுதனரால். ( )

(அல்லமன்தனதுதொழிலில்நிற்றல்.)

இவ்வாறருளாற்றலையுணர்த்தியிருந்தஞானவியல்வீர
சைவாசிரியனல்லமனித்தனையிறபருவந்தலைசிறப்ப
வுய்வானினைந்துதனைநோக்கியுறவடியார்க்குபதேசஞ் [ளுன்.
செய்வானியன்றவடிவொடுசென்றருள்செய்செயல்செய்துலாவி

இருபத்துநான்காவது-மனோலயகதி முற்றிற்று.

ஆக-திருவிருத்தம-கக௨௬.

---

## இருபத்தைந்தாவது.

## மான்மியகதி.

---

வியனிலமேவியவிழுமியோர்க்கெலாஞ்
செயிரறுமல்லமன்செய்தநன்றியைக்
கயிலையினுதல்விழிக்கடவுடன்புடை
மயிலியலொடுசொலுமாறுகூறுவாம். (க)

ஆயிடையருணந்தியாதிமாதவர்
நேயமோடமர்வுறநிறுவியல்லமன்
மாயிருஞாலமேன்மானிடர்க்கெலாம்
போயருள்செயுந்தொழில்பூண்டுளானரோ. (உ)

(திருக்கைலாயத்தில்உமாதேவியார்சிவபிரானைவினுதல்.)

இன்னணமல்லமனிருநிலத்துறத்
தன்னிகர்கயிலையிற்சிங்கந்தாங்கிய
பொன்னணைமிசையமர்புராரிதன்னொடு
மின்னணிமுலையுமைவிளம்பன்மேயினாள். (௩)

(சிவபிரான்அம்பிகைக்கிநந்திதேவர்-சத்துவகுணமாயை,சிவ கணங்கள்ஆகியஇவர்கள்பூவுலகில், அவதாரஞ்செய்துநடபடுத்திய வியல்பையும்வீரசைவசமயாசாரத்தையும்அச்சமயிகளுக்குப்போ தகாசிரியனாகிய அல்லமன்பெருமையையும்விரித்துரைத்தல்)

அல்லமனருள்பெறற்கடைந்தநந்தியோ
டெல்லையினின்கணமெனதுநற்கலை
மெல்லியனிலமிசைமேவிச்செய்ததென்
சொல்லுதியெனவுமையிறைவன்சொல்லுவான. (௫)

நந்திநல்வசவனாமங்கொண்டமாந்
தந்தமிலெம்மடியவனாயாமெனப்
புந்திசெய்தவர்விழைபொருளளித்தமண்
சிந்தியநிலமிசைச்சிறப்புற்றானரோ. (௬)

அறஞ்செயுநின்கலையாகுமங்கைபோய்ச்
சிறந்துளவுலகின்மாதேவிப்பேர்பெறீஇ
மறஞ்செயுமதன்வலிமாளமாய்த்தெலாந்
துறந்தனள்குரவனைத்துருவிப்போயினள். (௭)

நண்ணியநங்கணநாதர்தாமுமக்
கண்ணகன்ஞாலமுற்றெமமைக்காணிய
வண்ணநல்வினைகள்பலவகைபுரிந்தவ
ரெண்ணியபலநகரிடத்துவைகினா (௮)

அளக்கரும்விரதராயவரிருந்திடத
துளக்கமினிலையுடைத்தூயனல்லமன
கொளக்குறைபடாதபேரின்பநகூட்டிண
விளக்கினனுலகினில்வீரசைவமே. (௯)

வேறு.

எவ்வகைச்சமயத்திற்குமிறைவனேயெனினுநேயஞ்
சைவநற்சமயத்துற்றான்சைவமதும்வீரசைவத்
தவ்வவர்பிறவிநீக்குமல்லமன்விருப்பமுள்ளான்
மைவரிக்கயனெடுங்கண்மடவராலென்றான்வள்ளல். (௧௦)

சமயமெவ்வகையினுநதான்சைவமேலாயதென்கொ
லமையுநல்வீரசைவமதனினுஞ்சிறநததென்கொ
லிமையவர்பரவுமுக்கணெம்பிரானருள்செய்யென்ன
வுமையவள்வினவவேழமுரித்தவன்விளம்புமன்றே. (௧௧)

உரைக்குமெச்சமயததிற்குமுத்தரபாகஞைசைவந்
தரிக்குமச்சைவததிற்குததரமெனவீரசைவந்
தெரிக்குநற்காமிகாதிசிரத்தினிற்றிகழுங்கண்டா
யரிக்குரற்சிலம்பாற்றுமடிமலர்த்தடங்கணல்லாய். (௧௨)

புறந்தீருசமயம்புக்குப்புறமலாச்சமயத்தெய்தி
யறந்திகழ்சைவமுற்றுங்கதிற்சரிதாதியாற்றிச்
சிறந்துளவீரசைவஞ்சேர்ந்தபின்வீடுநண்ணு
நறுந்தளிர்கவற்றுமேனிநளினமலர்வல்லியன்னாய். (கஉ)

அருமறைமுடியுஞ்சீர்சாலாகமமுடியுமொத்துப்
பொருமறமில்லாமன்முற்றுப்பொருளினைவிளங்கக்காட்டித்
தருமுறையதனால்வீரசைவமேதலைமைத்தாமிவ்
விருமறுவற்றநன்னூலுமிதிற்பிரமாணமாகும். (கங)

ஒன்றொருவிடயந்தனையுருசுவைநிறைவென்றாக்கி
யென்றுமெம்முகத்தளித்திட்டெம்பிரசாதங்கொண்டு
துன்றுறுகருமமுன்னாத்தூய்மையிவ்வீரசைவத்
தன்றிவேறொருமார்க்கத்தினடுக்குமோவடுக்கண்மாதே. (கச)

ஆதலால்வீரசைவத்தறிவினையறியச்செய்தான்
மாதர்மாதேவியாமுன்வண்கலைமாதினுக்கும்
மேதையாம்வசவனாதிமெய்யடியவர்க்குஞான
போதகாசிரியனென்னும்பொருவிலல்லமன்வேற்கண்ணாய். ()

பருவபேதத்தாற்பேதப்படும்பொருள்பருவங்கண்டு
திருவின்மாமுனிவர்யோகர்சித்தர்கண்முதலானோர்க்குப்
பொருவிலாவல்லமப்பேர்புண்ணியன்புகன்றாட்கொண்டான்
குரவவார்குழன்மடந்தாயென்றனன்குன்றவில்லி. (கசு)

(அம்பிகை அல்லமன்பெருமையைச்சிவபிரானாற்கூறக்கேட்டு
வணங்கினமை.)

அம்மையுண்மகிழ்வுபொங்கவல்லமன்பெருமைகேளா
மமமர்செய்துளங்கலக்குமாயையைக்கடந்தானென்றன்
மெய்மையானின்பவளராமால்விளம்பநானறிந்தேனென்று
மும்மதில்வலிதொலைத்தமுக்கணையகனைத்தாழ்ந்தாள். (கஎ)

(நூலாசிரியர்.)

அங்குமைமாதினோடுமல்லமன்பெருமைகூறித்
திங்கள்வெண்முகிழ்புனைந்தசெஞ்சடைப்பரமன்மேவ
விங்கருண்மேகமென்னுமிணையிலெங்குருகுகேசன்
மங்கலமுத்தியின்பமவழங்குமத்தொழிலினின்றான். (கஅ)

மூத்தவரிளைஞர்நோயர்முகிழ்முலைமாதர்நல்ல
சீர்த்தொழிலாளர்பொல்லாத்தீத்தொழிலாளரொன்றும்
பார்த்திலன்யாவர்மாட்டும்பரிந்தருண்மாரிபெய்து
காத்தனனமலஞானகாரணன்குருகுகேசன். (ககூ)

இன்னவாறருளினானேயிவருறவிவர்வேறென்னா
தன்னைபோலுயிர்கட்கெல்லாமாருளொருங்குசெய்தே
யென்னையாளெனக்கொண்டாளுமிணையடிக்குருகுகேசன்
மன்னுமாதவர்கணெஞ்சமலர்தொறும்வாழாநின்றான். (உ௰)
எல்லொளியிரவிபோலவிருண்மலமிரிததிலங்கு
மல்லமன்சரிதமோதிலறமபொருளின்பமவீடாம
நல்லனபயனோர்நான்குநண்ணுவனிதனைக்கேட்க
வல்லநல்வினையினானுமற்றவைமருவிவாழ்வன. (உக)
மதியிலார்மதிஞராவர்மகவிலார்மகவுயிர்ப்பர்
நிதியிலார்நிதிபடைப்பர்நிலையிலார்நிலைத்துவாழ்வர்
பதியிலார்பதிகிடைப்பர்பழுதிலிவ்விருபத்தைந்து
கதியினானிரமபுகாதைகற்றவர்கூறக்கேட்பின். (உஉ)
மாசறுமல்லமப்பேர்வள்ளறன்சரிதந்தன்னி
னாசறுஞ்செய்யுளெல்லாமன்புடன்படிப்பார்தம்மை
யேசறுமனிதவொன்னவிசைப்படோகரித்தோல்போர்த்த
வீசனென்பதுவேயன்றியேதுமற்றேதுவம்மா. (உ௩)

நூல்செய்தகாலம்.

பார்கெழுசகாத்தமூனைஞ்ஞூற்றெழுபானான்காவ
தாகியகரநாமங்கொளாண்டுறுவிடைஞாயிற்றிற்
சீர்கெழுமல்லமன்றன்றிருவிளையாடற்காதை
கார்கெழுமிடற்றெங்கோமான்கருணைகொண்டியம்பினானே. ( )

வாழ்த்து.

புண்ணியருலகில்வாழ்கபுலஞ்செறுநோன்புவாழ்க
பெண்ணொருபாகன்பூசைபேணிவாழடியார்வாழ்க
கண்ணுதலொருவற்சார்ந்தகற்புடைச்சைவம்வாழ்க
வண்ணலல்லமன்சீர்கேட்குமாதரவாளர்வாழ்க. (உ௫)
பொருவரும்பூதிவாழ்கபூதியையணிவோர்வாழ்க
திருவளர்கண்டிவாழ்கசிறந்தவஞ்செழுத்தும்வாழ்க
குருவருள்வாழ்கமெய்யைக்கூறுநாவோர்கள்வாழ்க
வெருவரும்பிறவிதீர்க்கும்வித்தகர்வாழ்கவாழ்க. (உ௬)
அல்லமன்சரிதச்செய்யுளதனிலோர்செய்யுள்கற்க
வல்லவாருததமோதவல்லவர்வாயவல்லோர்
செல்வமீதென்னவன்பாற்செவிப்புலனிறைக்கவல்லோ
ரொல்லுவரும்பூமிதிலென்றும்வாழ்ந்திடுகவன்றே. (உஎ)

இருபத்தைந்தாவது-மான்மியகதி-முற்றிற்று.

ஆக - திருவிருத்தம் -ககருஅ.

பிரபுலிங்கலீலை-முற்றிற்று.

## சிவப்பிரகாசசுவாமிகள் துதி

### கருணைப்பிரகாசசுவாமிகளியற்றியது.

புனையெழில்வடிவினுளோர்பொதுமகட்கண்டமைந்தர்
மனமெனப்புலவர்நெஞ்சமருளுமின்றமிழ்ப்பாமாலை
சினவிடையவற்கேசாற்றுஞ்சிவப்பிரகாசனென்னு
முனைவனெம்மடிகள்பாதமுளரிகள்சென்னிசேர்ப்பாம். (க)

எவனொருநொடியிலெண்ணுதிசைத்ததோர்செய்யுண்மற்றைக்
கவிகள்பன்னுணினைந்தகாப்பியங்கட்குமேலா
மொவனிறைமுதனுமத்தோடியைதருவிளக்கப்பேரோ
னவனெடுபிறப்பெமக்கீண்டளித்தபால்வாழ்கமன்னே. (உ)

---

சிவப்பிரகாசதேசிகர்திருவடிவாழ்க.

சாலிவாகன சகாப்தம் ௲௫௱௭௪-ல் கர௵ வைகாசிமீ ஆதிவாரத்தில் வேதாந்த சித்தாந்த வீரசைவ சமயாசாரியராகிய துறைமங்கலம் சிவப்பிரகாசசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய பிரபுதேவர் சரித்திரமாகிய இவ்வரிய நூலின் கவிகளின் கருத்தை எளிதிலறிதற்பொருட்டு உறையூரில் வசிக்கும் தொண்டைமண்டல வேளாளர் குலதிலகராகிய மதுரைநாயக முதலியாரவர்கள்குமாரர் சொக்கலிங்கமுதலியாரவர்கள் முன்னிலையில் திருப்பரங்குன்றம் அருணாசலசரணர் குமாரர் நாராயணசரணரால் எழுதப்பட்ட அவதாரிகையுடன் ஷை சகாப்தம் ௲௮௱௨௨ல் சார்வரி௵ சித்திரைமீ ௨௰௨ சுக்கிலபக்ஷம் புதன் வாரம் திரிதிகை-திதி மிருகசீரிட நக்ஷத்திரம் அமிர்தயோகம் இவைகூடியசுபதினத்தில் தஞ்சைமாநகரம் ஸ்ரீகிருஷ்ணவிலாச அச்சியந்திரசாலையில் பதிப்பிக்கப்பட்டது. இப்புத்தகத்தின் ஊதியம் ஷை திருப்பரங்குன்றம் சுப்பிரமணியசுவாமி கோவிலில் ஷையூர்இராமலிங்கசரணரவர்களால் நடத்திவரும் கமலபாத்திரக்கட்டளைக்கு உபயோகிக்கப்படும்.

வேணும், பெரியநாயகிதுணை.



# பிழைதிருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௪ | ௬ | ௧ | மெய்யாகிற் | மெய்யாக |
| ௫ | ௰௧ | ௨ | முங்கூது | முகந்து |
| ௩௧ | ௨௯ | ௩ | கவினீர் | கவினீர் |
| ௪௮ | ௭௫ | ௪ | க்ாசனி | காசனி |
| ஷ | ௭௬ | ௩ | தனயை | தனயையை [டு |
| ௮௰ | ௰௬ | ௩ | வண்டிணைகொடு | வண்டிணைக்கொ |
| ௮௭ | ௰௪ | ௩ | வாய்தலின்று | வாய்தலினின்று |
| ௮௯ | ௨௫ | ௨ | மன்ஞன் | மன்னஞன் |
| ௯௨ | | ௯ | மாதேயம்மை | மாதேவியம்மை |
| ஷ | ௪௮ | ௪ | னுவிடை | னுகைவிடை |
| ஷ | ௫௰ | ௨ | அடக்கி | அடங்கி |
| ௱௪ | ௨௰ | ௨ | மொரு | மொழி |
| ௱௮ | ௫௧ | ௪ | மாலமுண்ட | மாலமுண்ட |
| ௱௰௩ | ௭ | ௩ | இணங்குரு | யிணங்குரு |
| ௱௨௧ | ௰௫ | ௨ | பாதமும் | பாதகமும் |
| ௱௫௭ | ௬௨ | ௨ | யிணைவிரு | யிணைவிழி |
| ௱௬௩ | | ௰ | ளுள்ள | லுள்ள |

உ

சிவமயம்.

# திருக்காளத்திப்புராணம்.

கருணைப்பிரகாசசுவாமிகள்
சிவப்பிரகாசசுவாமிகள்
வேலையசுவாமிகள்
அருளிச்செய்தது.

இஃது

உறையூர்
தி.ம சொக்கலிங்க முதலியாரவர்களால்
பார்வையிடப்பட்டு

தஞ்சை
இரதநவியாபாரம்
சபாபதி பிள்ளை அவர்கள்
வேண்டுகோளால்

திருப்பரங்குன்றம்
அ. நாராயணசரணரால்

தஞ்சை
"ஸ்ரீ கிருஷ்ணவிலாச அச்சியந்திரசாலையில்"
பதிப்பிக்கப்பட்டது.
சோபகிருது-௵

உ

இப்புத்தகத்தின் ஊதியம் திருப்பரங்குன்றம் சுப்பிரமணியசுவாமி கமலபாதத்திர நிவேதனத்திற்கு உபயோகிக்கப்படும்.

சிவமயம்

# சிறப்புப்பாயிரம்.

இஃது

திருக்கைலாய பரம்பரைத்

திருவாவடுதுறை

ஆதீனத்து

அடியார்குழாத் தொருவராகிய

## ஆறுமுகச்சுவாமிகளால்

இயற்றப்பட்டது.

வீங்குகரையெறிந்துவருபுனலெதிருநெடுவாளைமீனம்வான்பாய்ந்
தாங்குநிகழ்மீனமினமென்றளவளாவலிதிலமையத்தோய்ந்தோர்
பாங்குபெறுமெம்போல்வான்படருவரென்றறிவுறுத்தும்பரிசுகா
ட்டுங். தேங்குபுகழ்ப்பாலினதிகோலிவளர்தொண்டைவளத்திரு
நாடோங்கும. (க)

அத்திருநாடதனினதிபொதிசடிலநம்மான்போலன்புவாய்ந்த
பத்திநெடிவாகியநங்கண்ணப்பாதிருப்பதந்தோய்பரிசுபெற்றோ
மெத்தியசீரநமபோலெககிரிபடைததெனச்செருக்குமேன்மை
போல்விண்,குத்தியெழுந்தப்பாற்செல்சிகரமுடைககாளத்திக்கு
ன்றொன்றுண்டால். (உ)

கைலைவரையுறுந்தொண்டர்வாகீசர்போல்வருதல்காணுமற்றெ
ன்,கைலையெனுமத்திருக்காளத்திவரையெளிதுறுவான்கருதிலை,
ஞமலைசிகரஞ்சாயல்ஞானப்பூங்கோதையொடுமருவியார்கு
மையிலையெனச்செய்தருள்நமபெருமானார்மனமகிழ்ந்துவடித்த
தேன்போல். (ங)

முன்னர்த்தித்திக்கப்பாடும்மூவருந்தமிழ்போலிம்மூவர்பாட்டு
பின்னர்த்திதிக்குமெனத்திருச்செவிகேட்டருள்வவவொழிற்பு
ரணங், கன்னலெனுந்தமிழின்மொழிபெயர்த்தணிகள்பலசெறி
த்துக்கணிப்பில்பன்னூற், பன்னலமுந்தெரிந்தோருநன்னலமெ
ன்றதிசயப்பப்பாடல்செய்தார். (ச)

அப்பெருஞ்சீருடையவனையானறையுந்தரமுள்ளதோவகிலமெல்லா,மெய்பொருளுமோராந்தவராலெடுத்துரையாநிரோட்டகத்தை வெளிதுசெய்தோன், துப்புறுசெஞ்சடைப்பெருமான்றிருவடிக்கேபாமாலைதுலககச்செய்தோன, ஒப்பறுநற்றுறவொழுககமோம்பிசிவப்பிரகாசனென்றுமொப்பில்லோன். (௫)

அன்னவன்பிற்றோன்றலெனுங்கலையன்கலைபுலவுமறிந்தோனன்றான், பின்னவனுமிளஙகருணைப்பிரகாசக்கலைவல்லோன்பிறங்கியமூவர், முன்னவனசெயயருளனைத்துமொருங்கடைந்தாரவர்பெருமைமொழிதற்பாற்றோ,சொன்னவப்புராணமதையச்சியற்றியெங்கெஙகுந்துலங்கச்செயதான். (௬)

மற்றவன்செவ்வேற்கரத்தெங்கொற்றவன்வாழ்பரங்கிரியின்வாழ்வான்பன்னூல்,கற்றவனல்வீரசைவமுற்றவன்பெற்றவன்செல்வங்கதிக்குஞ்சீர்தகி, முற்றவமபோலீட்டருணசலசரணனிரதயமெய்மொழியாற்செய்த, நற்றவம்போலுதித்தபெருஞ்சீர்நாராயணசரணநாமத்தோனே. (௭)



திருக்குருகூர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ

# ஞானசித்த சுவாமிகளால்

இயற்றப்பட்டது

சீர்கொண்டவுமைபூசைசெய்துகணவனைவளைசேர்செங்கையாரவார்கொண்டமுலைமாபினழுந்தக்கட்டித்தழுவவளரனபோடுமேர்கொண்டதவஞ்செயமுனைபேபெரியதவஞ்செய்ததெந்தநாடு சூர்கொண்டநாமன்றியெனநினைக்குந்தொறுமகிழுந்தொண்டைநாட்டில் (க)

திருந்தியபொன்றுமுதலெந்நாடுமிந்நகர்நந்திசையினந்தோவிருந்ததானற்றோணடைநாட்டுக்குத்தாழ்வோமோவெனர்தாநம்மை,வருநதவிழிந்தனவென்பாரெனக்கவலைப்படவளவில்வளஞ்சாலகீர்தகி, பொருந்தியதெனகைலயெனுங்காளத்தித்திருதலத்தின்புராணந்தனனை (உ)

உலகுண்டநாரணனுதியனையுணவெழும்விடத்தையுண்கொத்த லவிலாப்பெருங்கருணையாளனடியாரக்கமுதமனையானன்பு குலவியமெஞ்ஞானப்பூங்கோதையொருபாலுடையகோமான் செங்கைத்,தலமருவுமழுப்படையான்றந்தையுமாயெவ்வுயிர்க்கு ந்தாயுமானோன். (௩)

கனறுபசியோடிருந்தாய்யான்சகியேன்சகியெனனக்கண்ணப்ப னைறூன், அன்றுமதுரக்கனிவாயாற்சுவைபார்த்தூட்டியவனமுத மபோல, நனறுநமக்கிமமூவர்பாடலுந்தித்திக்கின்றனவென்று மேன்மை,யொன்றுபெருங்கருணையொடுமெயன்காணுச்சிறந்துளங் கியுவகைசெய்ய (௪)

லாய்ந்தபுகழிளங்கருணைப்பிரகாசனெவர்க்குங்கண்மணியேபோ லவான, ஆய்ந்தபுகழ்க்கல்வியினுல்நயகுணத்தான்பேரறிவோ னவனுமுற்றோன்றி, ஏய்ந்தபுகழ்ப்பெற்றசிவப்பிரகாசமாதவன் வானிரவிமெய்யிற், றோய்ந்தபொழில்சூழ்துறைமங்கலப்பதியி லமாந்தருளுந்தூயமேலோன். (௫)

திருமலியுமிலக்கியமுமிலக்கணமுங்கனாகண்டசேர்த்திமிக்கோ ன, ஒருநொடிக்குளெண்ணூறுகவிபாடுகனிவாயானெங்குமே ன்மை, கருகாதவீரசைவசித்தாந்தகுலதீபன்கருணைசான்றோன், பருகாதவிடநுகர்ந்தபரமனுக்குப்பாமாலைபலவுஞ்செய்தோன். ()

திரிந்தகைக்குமைவரெனுமைந்துகளிற்றையுமடக்கிச்செலுத்து ந்தீரன், விரிந்தகைக்குங்காமாதியாறுசிங்கேற்றையுங்கொன்ற வெற்றியாளன், புரிந்தபுகழ்நெடுமாலுமலர்த்தவிசுப்புத்தேளும் பொய்யாமியாங்கள், பரிநதவுடற்சுமையகற்றியாள்கவெனத்து திக்கவவர்பாற்செல்லாது. (எ)

அளவிலாப்பேரன்பினிட்டலிங்கப்பிரானமர்ந்தவகலத்தான்மெய் யுளமலியுந்துறவொழுக்கந்தவறாதுகாத்தோமபுமுரவோனீற்றி ன், வளமலிமெய்யோன்ஞானச்செல்வனவன்பிற்றோன்றுமாண் புமியாரும், விளம்பரியவிதைதயுஞ்சேர்வேலையசிகாமணிபன் மேன்மைபூண்டோன். (அ)

இன்னபெருந்தகையோர்மூவருஞ்சாலமகிழ்ந்தையோவெளியநா முன், என்னதவஞ்செய்தோமோவிதுவுநமபாக்கியந்தானென்றி னிமையாகச்,சொன்னயமும்பொருணயமுந்தோன்றவடமொழி நின்றுதூயகோற்றேன், அன்னசெழுஞ்செந்தமிழின்மொழிபெ யர்த்துப்பாடினர்தெள்ளமுதநாண. (௯)

அத்தகையபுராணத்தையறிவுடையோரகங்களிப்பவளவில்சேர்த்தி, மெத்தியசீருறைதலொடுதாக்கணங்குநாக்கணங்குமேன்மேலோங்கிப், பத்திபுரியடியவர்கள்சூழ்ந்துறையுமுறையூரிற்பண்பாய்வாழ்வோன், முத்தலமும்புகழ்படைத்தமதுரைநாயகக்குரிசில்முன்செய்பேற்றால். (௰)

வந்துதித்துமலைமகள்தன்மணவாளனடிமறவாவாய்மையோடுமுந்துதித்தவேதமொழிவழிநூலும்புடைநூலுமுற்றுமாய்ந்துஇந்துநுதற்றிருவொடுநன்னுமகளையிருவிழிபோலெண்ணிநாளும், வந்தவர்க்குப்பதங்கல்வியளித்துவளர்சொக்கலிங்கவள்ளல்நோக்கி. (௰௧)

மைப்படியும்விழியுடையநாமகள்தன்மாமியுடன்வளரன்போடுமெய்பொழுதூடம்புரிந்துவிலகுதனுசைநகர்வாழ்வோனெவர்க்குமேலா, யொப்பரியபுகழ்படைத்தசந்திரவள்ளல்செய்தவத்தாலுதித்தசீலன், தப்பறுநான்மறைமொழிபொய்த்தாலுந்தந்நாத்தவறாத்தகைமைபூண்டு. (௰௨)

பெருவுடையார்முடிமுதனல்லடிவரையுஞ்சந்தணிந்துபெருமைவாய்ந்து, திருவுடையநவமணியின்றரந்தெரிந்துபொருளீட்டுந்தொழிலிற்றேர்ந்து,பொருவறுநல்லடியவராட்கண்ணப்பன்றனைமறவாப்புகழ்பெற்றோங்கித், தருநிகருங்கரமுடையசபாபதிவேளிந்நூலைத்தயவின்வேண்ட. (௰௩)

பருப்பதத்தின்முகடண்டப்பருமுகட்டைத்தடவியெங்கும்பரவிநிற்குந்,திருப்பரங்கிரியினகரின்னுன்பரமகுருகருணைத்தீம்பாலுண்டோன், தருப்படியுந்தலத்தமரர்புகழருணசலசரணன்றந்தமைந்தன், விருப்பமெவரோதன்பாலவர்க்காயுள்பெருகவெனவிரதநோற்போன். (௰௪)

அன்னவன்றான்றமிழருமையறிந்தவர்க்குமடியவர்க்குமன்புமிக்கான்,நன்னலமார்பூதியொடுகண்டிகையும்பொருளெனவேநயந்துகொள்வோன், பன்னலமார்திருமுருகாற்றுப்படைபாராயணத்திற்பழகுநாவோன், மன்னுறுநல்லுலகிலுளார்மகிழ்ச்சியுறவச்சியற்றிவழங்கினுல் (௰௫)

முற்றிற்று.



உ

# திருக்காளத்திப்புராணம்.

## கருணைப்பிரகாசசுவாமிகள்

அருளிச்செய்தது.

## பாயிரம்

### விநாயகர் துதி.

தருமஞ்சந்திகழ்தாமரையோன்பதங்
கருமஞ்சந்திகடப்பவர்வாழ்பதந்
துருமஞ்சந்திரற்றோய்திருக்காளத்தி
வருமஞ்சந்திமழைமதயானையே.

### காளத்திநாதர்.

நீர்கொண்டபொலம்பூங்கொன்றைநெடுஞ்சடைவனத்துடுத்த
சீர்கொண்டபுலித்தோற்கஞ்சிசசென்றுபுக்கொளிப்பத்தாவு
மேர்கொண்டவுழையிளங்கன்றிலங்கியதிருக்கரத்துக்
கார்கொண்டபொழிற்காளத்திக்கடவுளைமனத்துள்வைப்பாம்.

### ஞானப்பூங்கோதையம்மை.

பூமகளிறைஞ்சநெற்றிப்புதுமணித்திலகந்தோய்ந்து
தாமரைநகுமுகதேர்தான்பெறப்பணிகளங்க
மாமதிபுரையுமங்கேழ்வயங்குகிமலர்த்தாட்குன்றக்
கோமகளருண்ஞானப்பூங்கோதையைவணக்கஞ்செய்வாம். (௨)

### விநாயகக்கடவுள்.

தாய்குறங்கேறித்தந்தைசடையிடைமதிகேதுப்பேர்க்
காய்சினவரவென்றஞ்சிக்கடுக்கையுட்புகக்கைநீட்டிப்
பாய்புனன்முகந்துநின்றுபழிச்சுநர்வாயிலீனறோர்
வாய்நகைதழைப்பவீசுமழைமதக்களிற்றைத்தாழ்வாம். (௩)

### சுப்பிரமணியக்கடவுள்.

பன்னிருகமலக்கையும்பற்பலதொழில்விளைப்பத்
தன்னமர்தாய்முலைப்பாலுண்கவானிருந்துணனுங்கான்
முன்னவனகலந்தாழ்ந்தமொய்த்தலைத்தொடைபுரட்டும்
பொன்னடியிணையசேயெம்புந்தியிலுலவுமன்றே. (௪)

வளர்செழுங்குருதிச்சூட்டுவாரணம்வலனுயர்த்த
வொளிகெழுபரிதிவைவேலொருபெருங்கருணைமூர்த்தி
களிமகிழ்சிறந்துதான்வாழ்கற்களிறொருகலனென்று
வெளியவென்மனத்தினுள்ளுமகன்றிலனிருக்குமன்றே (௫)

### வீரபத்திரக்கடவுள்.

அருவரைக்குலங்கள்பந்தினடிபெயர்ந்துருளவார்க்கும்
விரிதிரைக்கடல்புரண்டுவியனிலமுழுதுமபோர்ப்பக்
குருமலரண்ணலண்டங்குலுங்கிடச்சிறையடிகொள
சரபமாய்நரமடங்கற்றனையடர்த்தவனைத்தாழ்வாம். (௬)

### திருநந்திதேவர்.

செம்பொருளாகமத்திறந்தெரித்தரு
ணம்பவமறுத்தநன்னந்திவானவ
னும்பர்தமணிமுடியுரிஞ்சக்கன்றிய
வம்பவிழ்மலரடிமனத்திருத்துவாம். (௭)

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

மேவரும்பரமானந்தவீட்டினுட்
டாவினன்மணங்காணியசாந்தவர்
யாவரும்புகுவித்தருள்செந்தமிழ்ப்
பாவலன்மலர்த்தாண்முதல்பற்றுவாம். (௮)

### திருநாவுக்கரசுநாயனார்.

வேற்றுருக்கொள்விதியறியாவரன்
கீற்றுவெண்பிறைக்கேழ்கிளர்செஞ்சடை
யாற்றுணைச்சுமையேற்றுமருந்தமிழ்
மாற்றருந்தவத்தோனைவழுத்துவாம். (௯)

## சுந்தரமூர்த்திநாயனார்.

மாதரிற்கண் மழுவலத்தேந்திய
வாதியைததிருமாலுமறிகலாப்
பாதமுற்றுஞ்சிவந்திடப்பண்டோர்நா
ளோதுவிட்டபுலவற்சூழுவமால். (௧௦)

## மாணிக்கவாசகசுவாமிகள்.

வஞ்சி நுண்ணிடைமால்வரையங்கைபுண்
டுஞ்சுவெமமுலைத்தொய்யிலெழுதுகைக்
கஞ்சகோகைகடவுளெழுதுமச்
செஞ்சுவைத்தமிழோனடிசேர்குவாம். (௧௧)

## காரைக்காலம்மையார்.

தோற்றமில்பரஞ்சேர்திதன்வாய்திறந்
தாற்றவன்புடனம்மையேயென்னுமோர்
பேற்றைமுன்பெறபபேயுருவெய்திய
சாற்றருமபுகழ்த்தாயைவணஙகுவாம். (௧௨)

## சேரமான்பெருமாணாயனார், காடவர்கோனாயனார்.

வெள்ளியங்குன்றத்துச்சிவீற்றிருந்தருள்வோன்கேட்பத்
தெள்ளமுதனையதீஞ்சொற்றிருவுலாசசெய்யுள்செய்தோன்
றள்ளுடம்பிழித்துமுன்றோன்றலந்தொறும்புனைவெண்பாட்டு
வளளலென்றிவர்கள்செம்பொன்மலரடிவணக்கஞ்செய்வாம். ()

## தமிழ்த்தெய்வம்.

மறைமுதற்கிளந்தவாயான்மதிமுகிழ்முடித்தவேணி
யிறைவர்தமபெயரைநாட்டியிலக்கணஞ்செய்யப்பெற்றே
யறைகடல்வரைப்பிற்பாடையனைத்தும்வென்றாரியதொ
டுழறதருதமிழ்த்தெய்வத்தையுண்ணினைந்தேததல்செயவாம். )

## பொய்யடிமையில்லாதபுலவர்.

தடவரைமுனிவனீன்றதமிழ்க்கொழுங்குழவிதன்னைப்
படர்வெயிலுமிழுஞ்சங்கப்பலகையாந்தொட்டிலேற்றி
நடைவளவளர்ததுஞாலநனந்தலைமறுகில்விட்ட
மடனறுபுலமையோரைமனத்துயாநினைத்துமன்றே. (௧௫)

குருதேவர்.

புனிற்றிளந்திங்கள்வேய்ந்தபுரிவளர்சடையுநெற்றிக்
கனற்றிருவிழியுமானுங்கரந்துவந்தென்னைப்பாச
மனைத்தையுமறுத்தாட்கொண்டவருட்குருதேவனென்னுந்
தனிப்பெருங்கருணைவள்ளல்தன்னடிமனதுள்வைப்பாம். ()

சிவப்பிரகாசசுவாமிகள்.

புலையெழில்வடிவினாளோரபொதுமகட்கண்டமைந்தர்
மனமெனப்புலவர்நெஞ்சமருளுமின்றமிழ்ப்பாமாலை
சினவிடையவற்கேசாற்றுஞ்சிவப்பிரகாசனென்னு
முனைவனெம்மடிகள்பாதமுளரிகள்சென்னிசேர்ப்பாம். (கஎ)

எவனொருநொடியிலெண்ணெனிசைத்ததோர்செய்யுண்மற்றைக்
கவிகளபன்னணினைந்தேகாப்பியங்கட்குமேலா
மெவனிறைமுதநாமத்தோடிலியதருவிளக்கப்பேரோ
னவனெமிறப்பெமக்கீண்டளித்தபால்வாழ்கமன்றோ. (கஅ)

அவையடக்கம்.

நூற்றுறைபயின்றுபெற்றநுண்ணுணர்வுடையனல்லேன்
சாற்றுமிப்போலிச்செய்யுள்சானறவரிகழ்தல்செய்யார்
மேற்படுமுணர்வின்மூததோர்மென்னடைச்சிறுவர்செவ்வாய்ப்
பாற்கடிகமழுமின்சொற்பழிப்பவருலகிலுண்டோ. (கசு)

மூரிதிரைக்கங்கைநீத்தமுனையினஞ்சுமிழெயிற்று
மொருவருசினத்தபாமபைவெண்டலைமுழையிற்சேர்க்கும்
புரிசடைக்கடவுள்வாழும்பொருவிறென்கயிலாயத்தின்
பெருமையிற்சிறிதறிந்தபெற்றிசெந்தமிழாற்சொல்வேன். ()

பாயிரமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம். உக.

---

சிறப்புப்பாயிரம்.

பொன்றிகழ்சடிலப்புனிதனெம்பெருமான்புலமலர்க்கோதை யோடமர்ந்த, தென்றிருக்கயிலைப்புகழமுததனைத்தீங்கவித்தா ரைபெய்ததுவாற், குன்றலிலிசையார்சிவப்பிரகாசக்கோதிலாத் தமிழ்க்கடன்முகந்தே, யென்றுநின்றுறவேபொழிதருகருணை விளக்கமென்றியம்புமாமுகிலே.

## விடசங்கமச்சருக்கம்.

கடலுடைப்பெருமாநிலமடந்தைக்குக்கவின்ற
சுடர்விழிக்கருமணியினுட்பாவையாய்த்தோலா
விடையுயர்த்தவற்குட்புறமாகியவியன்சீ
ரொடிவில்காளத்திநகரணியறிந்தவாறுரைப்பாம். (௧)

இதுமுதல் ௩௨ செய்யுள். நகரச்சிறப்பு.

மகரமைக்கடனிலவலயத்திடைவளங்கூர்
துகளில்சீர்த்திருநாட்டினுட்டொண்டைநாடென்னத்
திகழ்மணிக்கணங்குயின்றொளிர்செமபொனீண்மாட
நகரெவற்றினுஞ்சிறந்ததுகாளத்திநகரம். (௨)

ஒருவில்போகமும்வீடுமென்றிரண்டையுமொருங்கு
தருபெரும்புகழ்க்காளத்திமாநகர்தனக்குப்
பொருவில்வீடொழித்துறழ்வுடைப்போகமொன்றுதவும்
விரிகடுஞ்சுடர்ப்பொனனகரொக்குமோவிளம்பில். ( ௩

அகழுமிஞ்சியுமண்டத்தினடிமுடிகாறும்
புகுதுமென்றுதம்மாற்றலான்முரணுபுபுகுதா
விகலுமவெஞ்சினச்சேடனேடிராகுவெனறுரைக்கு
நிகரில்பாமபுகள்செறியிடைக்காண்டலுநின்ற. (௪)

அரசவன்னங்கள்கமலநின்றஞ்சிறைப்பெடையோ
டரியவெந்திறற்கராம்பகுவாயின்வந்தெய்தப்
புரிசையுள்ளினின்றெழுமுடததாழைமுப்புடைக்காய்
கனைபெரும்புனறுளுமபவீழ்கம்பலைததகழி. (௫)

இருநிலத்தவர்கவர்ந்தனநம்பொருளெல்லா
மொருமதிற்சிறையகத்துவந்துற்றனயாம்போய்த்
தருதுமற்றுமென்றறைகடல்வந்துவிண்டடவும்
புரிசைமுற்றியதொக்குமாற்பொருதிரையகழி. (௬)

வெங்களிக்களிறுழக்கலின்விரிதிரையகழிப்
பங்கயத்தமரோதிமம்வெரீஇமிசைப்பறந்து
மங்குலிற்புகுமணிமதின்ஞாயின்மேல்வதிவ
பொங்கொளித்தரளக்குடைநிரைத்தனபோலும். (௭)

தவழ்திரைப்புனலகழியிற்சிலதியர்தம்ம
குவிமுலைததடந்தாமரைமுகிழொடுகுலுங்க
வலிரொளிப்பொலங்குடங்களினலைததுநீர்முகவாச்
சுவன்மிசைக்கொளக்கழன்றுவீழ்பொலங்குழைசுடரும் (அ)

புலவர்மன்னவன்வச்சிரப்படைவெரீஇப்பொருப்பின்
குலமடங்கலுமாரெயில்புகுந்தெனகுளிரவெண
கலைநிரம்பியமதிமுகக்கொடிகளாற்கவின்ற
நிலையபொன்னெடுமாடங்களெண்ணிலநிலவும். (கூ)

மாதர்மேனிலைக்கலவியின்வருந்தியவருத்த
மோதுவெண்டிரையகல்விசும்பியாற்றபொன்முளரித்
தாதளைந்துநுண்டுளியொடுசௌரநுழையுஞ
சீதமென்னடைத்தென்றல்வாண்முகததுலாய்த்தீர்க்கும். (க0)

பரவைவெண்டிரைக்கருங்கடல்குறைபடப்பருகி
யிருவிசும்பெழுந்தெங்கணும்பரந்துநின்றெழிலி
சொரிதரும்பெயற்பருவததினமுளையின்வான்றோயும்
பொருவில்செம்பொனீண்மாடததின்மேனிலைபுகுவார். (கக)

முட்டிவிண்ணுயர்மாடமேற்புலவியின்முனிந்த
மட்டுநின்றிழிகோதையர்மகிழ்நர்மேற்புழுகால்
விட்டெறிந்திடப்பிழைத்ததுவிரிகதிர்மதிமேற்
பட்டதன்றுகொல்களங்கமென்றுரைப்பதுபகரின். (கஉ)

மைந்தர்யாவருமறைமினென்றினையவாவாய்விட்
டேந்துகாழினோடமுன்றொடர்கலினெனவான்
றோய்ந்தநித்திலத்தோரணந்துளைக்கையாற்பரிந்து
காந்துவெஞ்சினக்களிறுலாய்த்தெருமதங்கமழும். (கங)

மறையவர்வீதி.

புலனடர்ந்தறநூல்வழியொழுகுமுப்புரிநூ
லலைதருந்திருமார்பினருமறைமுதனூற்
பலவுநின்றகலாதவெண்மாளிகைப்பரப்பு
கலைமழுங்கதவெண்டாமரைமலரெனக்கவினும். (கச)

வரையறுமறைநிரப்பிமந்திரவேள்விமுற்றிப்
பசுவுடலறித்துமுகக்கட்பதியுடலாகின்ற
விசைபடுமந்தணாளரொழுங்கிலமாடமெல்லா
மிசைநிலையுலகினுள்ளோர்விருந்துணும்மிடங்களாமால், (௧௬)

நறைவிரிகமலத்தோனிந்நகர்மறையவர்போலன்று
மறைகளுநவிலலுற்றோன்வானமுறைதவறிலவிலா
லுறைபகலவனைமுறைமுறையென்னமோராந்துணைநதொருங்குநான்குங்
குறையறநவிற்றறப்பனரேகொண்டனனுனைச்செவ்வாய், (௧௭)

மன்னவர்வீதி.

ஐங்கணைக்கிழவற்கன்றியருவனைபகவெறிந்த
பொங்கொளிவேலினுற்குமபுறக்கொடைபெறுதலாகா
வெங்கொலைமடங்கலாற்றலவேந்தர்தமவீதியன்றோ
தங்கிழலொலியின்முந்நீர்த்தடங்கடனிகர்க்குமன்றே. (௧௮)

முழவுறழ்தோளிராமன்முதலியசிலைவலாரிம்
மழைதவழெயிலுடுத்தவளநகர்மன்னராக்கண்டு
குழைசிலைகற்கநன்றாட்கொண்டுகற்றாலுனாட்பில்
விழுமியமையாதமிக்கவீரமெவ்வாறுகற்பார். (௧௯)

வணிகர்வீதி.

பிறவுந்தம்பொருளேபோலப்பேணிவாணிகஞ்செய்நாய்க
ரறனெறமனையின்முற்றத்தாமமேபேதையாகொழிக்கு
மறுவினறிவிளக்குமுத்தமவடதிசைக்கிறைவனகாத
வியறைகொண்டமகளிர்கொம்மையெழின்முலைத்தடத்துமின்றே

வேளாளர்வீதி.

அநலிருவிசும்பியங்குமலகிறாகையுங்கோளு
முகுதலையடையாவண்ணமொருபெருந்துருவன்றாங்குந்
தகையெனவுலகில்வாழ்நர்த்தாங்குநலலுழவர்மாடம்
வகைபடுபல்லுணவும்வருநர்க்குவழங்குமன்றே. (௨௧)

பரத்தையர்வீதி.

படுகடலுலகமேத்தும்பைங்கிளிப்பெயரினுனுங்
கடைதயிர்போலநெஞ்சநகலக்குபுதொடருநோக்கின்
வடுவகிரனையவுண்கணவருமுலைபகர்நர்சேரி
யடுசுறவுயரியோனறணிநகரனையதன்றே. (௨௨)

இந்நகரின்மடந்தையர்

முற்றுபொன்மதிலிம்மூதூர்முழுமடந்தையராம்வாட்கட்
சிற்றிடைமகளிர்ச்சுட்டிதெரிந்தனைமகளிரென்று
சொற்றனர்பெயரறிந்தோர்சுடர்செய்விண்மாதராக்கு
மற்றதுமரீஇயதன்றேவழங்கரமகளிரென்பேர். (௨௩)

யானைகள்.

அடலயிராவதப்பேரடுகளிறுதியெட்டுக்
கடவுள்வாரணமுமிவ்வூர்க்கண்ணதோர்பிடியினேடற்
றுடைதலினோடித்திக்கிற்றொளித்துநின்றனவற்றைத்
தொடுகடலுலகிலுள்ளோர்சொல்பதிக்கயங்களென்றே. (௨௪)

குதிரைகள்.

கொண்டறோய்மணிசெய்மாடக்கோநகரிதனிடத்த
வெண்டமாறுகச்செல்வவருவிலைப்பரிகடம்பாற்
கண்டவேகத்திற்காற்கூறுடைமையைக்கருதியன்றே
பண்டையோர்காற்றினுக்குப்பகர்ந்தனர்காலெனும்பேர் (௨௫)

இதுமுதல் ௬ செய்யுள் ஆவணவீதி.

வேறு.

மலையினுள்ளனவார்கடலுள்ளன
நிலவுநால்வகைநீணிலத்துள்ளன
பலவுநன்குவிளக்கலிற்பார்புகழ்
புலவர்காப்பியம்போலுமவ்வாவணம். (௨௬)

வேறு.

ஒலிதிரைக்கடலினேழுமாவணங்
கொலைமதக்களிறுகந்தடர்த்துக்கூற்றென
மலையெனப்பிளிறுபுவரினுமன்பதை
நிலைபெயர்ந்தடியிடாநெருக்கிற்றென்பவே. (௨௭)

தரளமிங்கிதன்விலைசாற்றுமின்களென்
றரிவையர்விளியவர்க்கவெயிற்றெழின்
மருள்படமனத்தினையயக்கவாணிகர்
வரிவளைமணியெனமருண்டிருப்பரால். (௨௮)

வேறு,

அரவுரியனைய நுண்ணூலந் துகின்மறைத்திருந்த
விரைவிரிகமலச்செங்கேழ்மென்முகிழ்விலைவரைந்து
தருதிறொன்றனைத்தனைந்தாதமக்கலர்தொடுக்குநல்லார்
பொருவிலவிளைஞாயவிண்மேற்பூத்தனவிலையிலென்பார். ()

தேந்தருசெய்யவாம்பற்றிருமலரொன்றமீண்டி
யாந்தருமவிலைகொண்டொல்லையெமக்களித்திடுமினென்ன
வேக்கெழிலுடையதோர்மெல்லீர்ங்கமலத்தோடல்லா
ஞாந்தனிபகரோமென்றுநன்னுதன்மகளிர்சொல்வார். (௯0)

இனையனபலதிறத்தாலெறுழ்வலித்தடந்தோண்மைந்தர்
புனைநறுமலர்மெல்லவைத்துப்புகதருமுன்னற்கேற்பக்
கனைகடலமுதமன்னகட்டுரையெதிர்கொடுக்கும்
வனைகுழன்மகளிர்கூடறகிற்குவிளக்கமாவார். (௯௧)

இது முதல் ௨ செய்யுள் கொடிகள்.

மழைகிடந்துகண்படுநெடுஞ்சுடர்செய்பொன்மாடத்
தெழில்செய்பூங்கொடி நுடங்குதலிருநிலங்குளிரப்
பொழிதரும்பனிநிலாமதிமண்டலமபுகுதாக்
கழிபெருங்குளிர்கொண்டுடனடுக்குதல்கடுக்கும். (௯௨)

திங்கள்வாணுதற்றிருவனார்பயிறலிற்சிறந்த
வங்கண்மாடத்தினெடுங்கொடிவான்முகட்டசைதல்
செங்கையாணிலமடந்தைசெவ்வாய்ப்பெயர்ச்சிறுவன்
பொங்குமாரழலுடம்பினைத்தைவரல்போலும். (௯௩)

கதை

இனையபல்வளங்கெழுதிருக்காளத்தியென்னும்
வினையிருண்ணகருமையொடுவீற்றிருந்தருளி
முனிவில்பேரருட்டிறத்திஞன்முத்தொழிலியற்றும்
புனையிளமபிறைக்கண்ணியஞ்சடைமுடிப்புத்தேள். (௯௪)

முன்னோர்ஞான்றறைகடற்படைமுழுமதிக்கவிகை
மன்னுமாபுகழ்யாதவனெனுமபெயர்மன்னன்
றன்னையாட்கொளத்திருவுளங்கொண்டுமென்றடந்தோட்
பொன்னவாஞ்சுணங்கிளமுலைப்பூங்கொடிபுலமப. (௯௫)

நீற்றுவெண்டிரிபுண்டரங்கரில்கண்மணிகண்
மாற்றரும்பாசிவலிங்கந்தன்னுருவெய்ங்கச்
சாற்றரும்விடசயகமனுகியசதடந்தோ
ளாற்றன்மன்னனூாயண னைகரடைந்தான். (௩௬)

அடைந்தபேரருட்குன்றனைகலிருவிசும்பு
தொடர்ந்தமாமணிமாடத்ததோரணத்தெருவி
னுடங்குநுண்ணிடைமகளிர்காணருங்கடிநூறி
மடங்கலேறெனச்சென்றனன்கண்டவர்மருள (௩௭)

இலங்குபன்மணிமேகலைவளையுடனிழந்து
பொலஞ்சுணங்கலர்கொம்மையம்புணர்முலைபசந்த
கலங்கொள்கொம்பனூரஞ்சனக்கண்மலர்பரப்பிச்
சிலம்பினெண்மணிபொருதுகக்கடைதொறுஞ்செறிந்தார். ( )

வேறு.

தன்றிருவுருவந்திரிந்துமாநிலத்திற்றனிவிளையாடியகுன்றங்,
கொன்றவைந்நுதிவேற்பூதலைச் சேவற்கொடிவலனுயர்த்தசெ
வ்வேளோ, வன்றினல்லன்பர்க்கருளியகடல்சூழகனிலததடைந்
தசிற்றிளமான், கன்றுகெணிச்சிக்கூர்மபடையெடுத்தகண்ணு
தற்கடவுளோவென்பார். (௩௯)

விரிசுடர்ச்செக்கர்வானிறஞ்சமழ்ப்பவிளங்குகற்றோய்த்தபூந்
துகிலே, சுரிவளைததடக்கைதிருமறுமார்பன்றகிலினைக்கடற்கு
மாலென்பார், பொருமதக்களிற்றின்பிறைமருப்பீர்ந்துபுனைந்த
செந்துகிர்த்திரள்குமிழின், றிருவடிநிலைதொட்டுறைகழலார்ப்
பச்செல்லுதனமர்க்கரிதென்பார். (௪௰)

வினையடர்நீறுபூத்தவொண்ணுதலும் விரிசடைக்கடவுள்கண்
டந்த, புனைமணிதாளமிடையிடுபேஉக்கோத்துப்பொலிவடந்துயல்
வருமார்புஞ், சினைமலரதொடுத்தகண்ணிசூழ்ந்தியாத்துச்செவி
மிசைதாழ்ந்தகுஞ்சியுநம் கனவினுளேனுமின்னுமோர்நாளிற்
காண்டரப்பெறுவமோவென்பார். (௪௧)

மெல்லிளம்பிணையின செவியெழில்கடந்த வெள்ளிலையடுக்கி
டக்கையும, வில்லுமிழ்பசும்பொற்றகடுகொண்டியாத்துவிளங்
குபொற்கொடிப்பிரம்பேனை, யல்லியங்கமலக்கையினிற்பிடித்த
வழகுமீத்துகில்கிடந்தசையும், கல்லுறழ்தடந்தோளழகுநங்கண்
கள்கருத்தொடுகவர்ந்தனவென்பார். (௪௨)

ஊரலரெடுப்பக்கலையொடுபொலஞ்செய்யாவிவனைக்கவர்ந்துமா
முலைக்கட், பீரலர்விக்தாமணிநெடுந்தெருவிற்பெயர்ந்தெமதுளத்
தொடுஞ்செல்லுமீரமின்மனத்திம்மாயசங்கமனையெதிர்ப்படினெ
றிபெருந்திரைய, வாகலியுலகமீதனைத்தையுமயக்குமனநகனுமய
நகுமறறென்பார். (௬௩)

வேறு.

இன்னனகிளர்ந்துகாமத்தெரியகமகளிர்நிற்ப
முன்னவன்செல்லுமாநகண்முழவுதகோள்யாதவற்குப்
பொன்னியல்கலந்திருத்தும்பொற்கொடியிறைவன்றனின்
மன்னுமன்புருவமாயமடவரலெதிர்ப்பட்டாளால். (௬௪)

எதிர்தருமடந்தைதனையணிணையடிக்கமலப்போதின்
மதியிளம்பிளவினுக்குவண்ணத்திறனுமொப்பப்
புதையிருண்மலரகற்றும்பொடியணிநகலுரிஞ்சத்
தனைதமலர்க்கொடிநிலத்திற்றாழ்ந்தெனவிறைஞ்சிநின்றாள். ()

எரிபடுமிழுதின்றன்மைபெய்தியமனத்தினோடு
திருமுகமினிதலர்ந்துசெறிதொடிக்காந்தள்கூப்பி
யருவினைத்தொடரறுத்தவடிகளும்மடிகள்கண்டு
பெரிதுமிவ்வுடம்பெடுத்துப்பெறுபயன்பெற்றேனென்றாள். ()

ஐயநின்கருணைதன்னாலடிச்சியேன்பொருட்டிரங்கிச்
செய்யதாமரைமருட்டுந்திருவடித்தலங்களைப்
பையவென்மனைக்கட்போந்துபரிகலச்சேடமீந்தென்
வெய்யவல்வினையறுத்துவிடுகெனமறித்துந்தாழ்ந்தாள். (௬௭)

அண்ணலுமருளினோக்கியன்பொருவடிவெடுத்து
நண்ணியதென்னநின்றநாமவேற்றடங்கணல்லாய்
கண்ணுதலடியார்க்கன்பர்க்காண்டிடினின்னொப்பாரின்
றெண்ணுதனினக்குவைப்பதொன்றுளதென்றுசொன்னான். ()

மற்றதையையசெவ்வாய்மலர்ந்தருள்செய்கவென்னப்
பொற்றொடிமயிலேகாமன்போரினுக்குடைந்தயானின்
சிற்றிடைமெலியவீங்குந்திரண்முலையாணஞ்சீர்ந்து
சற்றுமஞ்சாதிருப்பத்தருதியேல்வருவலென்றான். (௬௯)

என்றலுமுவகைமீதூர்ந்திளகிலாவெறிப்பாக்குப்
பொன்றுதலியல்பிற்றாகிப்பொள்ளல்யாக்கையினைத்தோய்தற்
குன்றிருவுளத்திற்கொண்டதுகம்பலகழியயான்செய்
குன்றலிறவப்பேறன்றோகுறித்தவாறாகவென்றான். (ரு௦)

இசைந்தவன்முனைவன்றன்னையில்வயிற்கொணடுபுக்குப்
பசும்பொனின்கரகநீரிற்பாதபங்கயம்விளக்கி
யொசிந்தநுண்ணிடைமடந்தையுயர்தவிசிருத்திநெஞ்சங்
கசிந்துநல்லமுதுபொன்னங்கலத்தினுளருத்தினால். (ருக)

அருத்தியபின்செஞ்சாந்தமாகமுற்றணிந்துபாகுங்
கருப்புரச்சுண்ணந்தீற்றுகாமர்வெள்ளிலையுஞ்செந்தா
மரைத்திருமுகத்தினல்கமாசிலான்கவுளடுத்து
விருப்புடனிருந்துகாமம்வெளிப்படுகுறிகள்செய்தான். (ருஉ)

பெண்ணமுதினுக்குக்காமம்பெருகியகுறிப்புநோக்கிக்
கண்ணுதல்கரந்தகள்வன்கதித்திறமாந்துவிம்மி
மண்ணியமணிப்பூண்டாங்குவனமுலைஞெமுங்கப்புல்லி
யெண்ணருங்காமவெள்ளத்திடையவட்படிவித்தானால் (ருங)

மாதர்மென்கொம்பரன்னாண்மாயசங்கமன்வலைப்பட்
டியாதவன்கடிநகர்க்குற்றேவலைமறந்திருப்பத்
தீதில்செங்கோனடாத்துந்திங்கள்வெண்கவிகைவேந்தன்
கோதிலின்னமுதமுண்ணக்குளிர்புனலாடிப்புக்கான். (ருச)

புனிதவெண்ணீறுசாத்திப்புரந்தரன்றிக்குநோக்கி
மனனமர்ந்திருந்துதாலம்வைப்பவளின்மைகேட்டுக்
கனல்படக்கண்சிவந்துகைபிணைத்தருகுநின்றோர்க்
கனையவட்டருகிரென்றானழற்கடவுளொத்தான். (ருரு)

வெந்திறற்சியமன்னான்வெருவருமாற்றங்கேட்டோர்
சிந்தையிற்கடிதுசென்றுசினத்தொடுகழறிக்கூவக்
கொந்தழலுருமுவீழ்ந்தகுருமணிச்சுடிகைப்பாம்பிற்
பைந்தொடிமனந்துண்ணென்றுபனித்துடலுடனெழுந்தாள் ()

வானிறக்கலிங்கமற்றவரைக்குமாத்திரையுடுத்து
நீனிறப்புயன்மென்கூந்தனேரோவெனச்செருகிச்செவ்வாய்
தானையிற்றுடைத்திட்டையதணத்தலென்றிறைக்குரைத்து
மீனெனப்பிறழுங்கண்ணாள்விரைவினிற்புறத்துப்போந்து (ருஎ)

வெளிப்படுவெளிப்படென்றுவெருவரமுடுகிநின்று
விளிப்பவர்தாழ்த்தற்கொத்தமென்மொழிபலவுங்கூறிக்
களத்திருண்மறைத்துவந்தகள்வன்மாட்டெழுந்தவன்பு
ளளப்பருஞ்செல்வன்றன்மாட்டச்சமுமனத்தையீர்ப்ப. (௫௭)

சேபலையந்தளிர்க்கேற்றுஞ்சிறடிச்சிலம்பரற்ற
வுயவுநுண்ணிடைநடுங்கவொளியுமிழொருகாழ்முத்தந்
துயல்வருகுவவுக்கொங்கைதுளும்பவாணுதல்வியர்ப்பக்
கயல்பொருகண்டுளிப்பக்கடிதடிபெயர்த்துச்சென்றாள். (௫௮)

யாமினிதிருந்துவாழுமிருங்குழல்களையப்பட்டுப்
போமினியென்றுநெஞ்சமபுழுங்குபுகலுழ்தல்போலக்
காமரம்பயில்சுரும்புகதுப்பெழுந்தார்ப்பப்போகிப்
பூமகணிலையியகோயிற்புக்குமன்னவன்முன்னின்றாள். (௬0)

நிற்றலுமரசர்கோமானெருப்பெழவிழித்துநோக்கிச்
செற்றிவடன்னையின்னேசீதமலரொடுமுடித்த
கற்றையங்குழலைநீவிர்களைவித்துவிடுகென்றேவ
மற்றருதடங்கைத்தாண்மைந்தர்வார்குழல்களைவித்தாரால். (௬௧)

கடைகுழைந்திருண்டுநெய்த்துக்கார்க்கரும்புயலைநீலச்
சுடர்கெழுமணியைத்தேன்வாய்த்தும்பியைச்சைவலத்தை
மடிதிரையறலைவென்றுமலரொடுபழகிநீண்டு
மிடைகுழலிழந்துபீலிவீழ்த்தியமஞ்ஞையொத்தாள். (௬௨).

வேறு.

கண்ணீரொழுக்கிக்கதிர்மாமுலைமலைக்குத்
தெண்ணீரருவியாகச்செவ்வாய்மலர்திறந்து
பெண்ணாரமுதமபெரிதழுதுகோறறகிற்
பண்ணார்மொழிபார்பலரிரங்கச்சென்றனளால். (௬௩)

கண்டார்களந்தோகலந்திருத்தாத்தப்பினுக்கே
யொண்டாதவிழ்மலர்த்தாரோதிமழிப்பித்தான்
விண்டார்மருங்கறுத்தவேல்வேந்தன்சேறமிகை
யுண்டாயினெவ்வாறொறுக்குமோவெனபாரும். (௬௪)

பூந்துகிலாற்பொன்னாற்பொதியின்மலைப்பிறந்த
சாந்தத்தாற்பண்மணியாற்சாலப்புனைந்தாலு
மேந்திழையார்தங்களெழிலெலாநெய்த்திருண்ட
கூந்தறானின்றேற்குறையுங்காணென்பாரும். (௬௫)

உலகமெல்லாமுடையாய்க்கிருப்பவோ
ரிலகுகோயிலெடுப்பவரில்லையோ
தலைவனென்றவன்றன்முதலேந்தியிந்
நிலைமைநின்பாணிசுழ்த்தியவந்தனம். (அஉ)

நீயலாமணிமிர்சடையெம்பிரான்
கோயில்செய்பவரில்லெனக்கூறினான்
தீயபாம்பணியுஞ்சிறுதிங்களுந்
தூயநீர்ச்சடையுந்துறந்தெய்தினான். (அங)

சொன்னவாசகங்கேட்டுச்சுடர்செய்வேன்
மன்னர்கோமகன்வார்குழல்பெற்றவப்
பொன்னுலாவும்புணாமுலைப்பூங்கொடி
யென்னமாமகிழ்வெய்தினன்கூறுவான். (அச)

தீயனேனைத்திருவுளத்தெண்ணிநீ
வாய்மலர்ந்ததென்மாதவமாதலாற்
றூயநின்னருட்சொல்வழிநிற்பதே
நாயினேற்குநலமெனக்கூறியே. (அரு)

கொன்றையஞ்சடைக்கூத்தப்பிரானயர்
தென்றிசைககயிலாயச்சிறப்பெலா
மின்றெனக்குணங்கொளவெமபிரான்
மன்றநனறுவகுததனையென்றனன். (அசா)

என்றசொல்லினைக்கேட்டலுமீறிலான்
பொன்றவில்கயிலாயப்புராணத்தை
வென்றிவேலவகேட்டனையாயிடி
னன்றுசொல்லுதுநாமெனச்சொல்லுவான். (அஎ)

மாசில்காட்சிவசிட்டனகத்தியன்
வாசமாமலர்வந்தோன்சிலந்திபாம்
பாசில்யானைபுளிந்தனருட்சிவ
கோசங்கீரனகுவளைக்கருங்கணார். (அஅ)

ஆதியாகவளவிலருண்டவண்
டீதுதீர்த்தவரவ்வத்திருக்கதை
யோதவேண்டிலுகம்பலசெல்லுமங்
காதையுட்சிலநாவலகூறுவேம். (அகூ)

என்றுசங்கமவேடத்தினெம்பிரா
னன்றுகூறினனன்னவனசொற்படி
யின்றியானுமிசைக்கலுற்றேன்வினை
கொன்றநல்லவர்கொள்பவென்றெண்ணியே (௯௰)

விடசங்கமச்சருக்க முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௧௧.

---

# தென்கைலாயச்சருக்கம்.

---

இதுமுதல்-௰௧-செய்யுள் தலவிசேடம்.

திங்களங்கண்ணிவேய்ந்தசெஞ்சடைக்கருமிடற்றுச்
சங்கரன்றேவர்தம்முட்டலைவனாயூறுபோல
வங்கண்மாஞாலத்தண்ணலருயபெறல்வீடளிப்பத்
தங்கியதலங்கடம்முட்காளத்திதலைமைத்தாமல். (௧)

கருமிடற்றிறைவன்வாழுங்காளத்திபிறவியென்னும்
பெருமதக்களிற்றினுக்குப்பிறையெயிற்றரிமானேறு
பொருவறுமுத்தியென்னுமபுணர்முலைத்திருமகட்கு
[illegible]ரவிரிகமலச்செங்கேழ்வெனயலாகக்கோயிலாமால். (௨)

மதிதவழ்நீலக்குன்றும்வான்மேருதுர்க்கைவெற்பும்
கதிர்முலையாங்கவின்றகாளத்தியணங்கைச்செயபொற்
றிதலையங்குவவுக்கொங்கைச்சேயிழைபுமையிற்சலப்
புதுமதிமிலைந்தசென்னிப்புங்கவன்வேட்குமன்றே. (௩)

அருமறைநவின்றநாவினந்தணரிளைஞர்மூததோரா
திருநுதன்மகளிர்தீம்பாற்செருந்தசலான்படிமததோர்க
ளிருமுதுகுரவர்நீத்தோரெனறிவாமுதலினோரை
வெருவரக்கொன்றவர்கரும்வீட்டுலகளிக்குமம்மா. (௪)

தழைவனைடப்பநிற்பதத்துவபறப்பநீர்வாழ்
விவையெலாமங்கண்முகக்கணிறைஞாருருவமாகு
யவலுறுபுனல்களெல்லாமகவிருவிசும்பிற்றீர்த்தஞ்
சிவபுரமுலகின்மற்றத்திருத்தலமாகுமாதோ. (௫)

பிறந்தவர்க்காரூர்காணப்பெற்றவர்தமக்குத்தில்லை
யிறந்தவர்தமக்குக்காசியெவ்விடத்தேனுநின்று
மறந்திலர்நினைத்தவர்க்குவான்றருமருணையாகுஞ்
சிறந்திறைவீற்றிருக்குந்தெனாதுபொற்கயிலைகுன்றே. (௬)

ஏனையதலங்கடோறுமிருபிறப்பாளர்கொள்ள
வானுயர்பசும்பொற்குப்பைவழங்கலுந்திருக்காளத்தி
மீனுயிர்கவருந்தூண்டில்வேடனென்றனக்கோருசி
தானுதவுதலுமொப்பாச்சாற்றுவாரிந்தநல்லோர். (௭)

கருமிடற்றிறைவன்வாழுங்காளத்தியின்போகொண்ட
வொருவனைவிளிக்குங்காலவ்வொப்பிலபேர்செப்புவோரும்
பரிதிவெங்கதிர்கடோய்நுண்பனியெனப்பாவகோடி
யிரிதரத்துரப்பரென்றாலெத்தலமதற்கொப்பாமயா.

வேறு.

யாவனொருவன்விளையாட்டினிடத்தாயினுந்தென்கயிலைக்குப்
போவனெனவோரடியிடுவானவனறன்கழற்காற்பூங்கமலந்
தேவாமகுடநிரையுரிஞ்சத்திகழ்வனென்றான்மனமொத்துத்
தாவில்கயிலைக்கேகுவார்தம்பேறியாவாசாற்றுவார் (௯)

வேறு.

மற்றொருதலத்திற்பன்னாண்மரபுளிநோற்றுநெஞ்சஞ்
செற்றுறைதலுங்காளத்தித்திருநகரத்துளோர்நாட்
பொற்றொடிமகளிர்மென்றோள்புணர்ந்துறைதலுமொப்பென்ப
கற்றவரிதுபட்டாங்குகட்டுரையன்றுவேந்தே. (௧௰)

கடவுண்மாதிருக்காளத்திகயாரணியப்பேர்க்காடாய்
நெடுநிலவரைப்பின்மிக்கநேமியங்கடறித்தி
யொடுபெயரியகாடாதியொப்புமைக்குடையவோங்கு
மடலரிமானோடொப்பாயாரதனசிறப்புச்சொல்வார்.

இதுமுதல்-௧௭-செய்யுள் மலைச்சிறப்பு.

ஒளிர்மலரசோகந்தேமாவுயர்சினைத்தமாலங்கோளி
சுளையகமுட்புறக்காய்தூங்குகோட்டுயர்வருக்கை
வளரகில்சண்பகம்யாமணங்கமழாரந்தேக்கு
கிளைமுதலியதுவன்றிக்கெடலருங்குளிர்கொண்டன்றே. (௧௨)

முடங்குளையரிமானெண்கான் முழுவலிச்சரபமாமான்
கடம்படுகவுட்கூர்ங்கோட்டுக் களிறுவல்லுளியங்கேழல்
கொடுஞ்சினப்பிறையுகிர்த்தாட் கொடுவரிவேங்கையாதி
மிடைந்துவில்லுழந்துணவாழ்க்கைவேட்டுவக்குடியுடைத்தே.

பூநின்றுபுவனமாக்குமபுங்கவன்புகழிக்காட்டிற்
றீநின்றுசுடவெடித்தசேண்டொடுநெடியவேயின்
வாய்நின்றுதெறித்தமுத்தமவான்பதிந்தவறறையன்றோ
மீனினறுவிளங்குமீனென்றுலகெலாமவிளம்புமன்றே. (கச)

திங்கடன்னருகுமீக்கட்சென்றிடப்பிறையெயிற்று
மங்குலினிறத்தப்பன்றியண்கிளைத்தடியினிற்பப்
பொங்கொளிவிரிக்குஞ்சோதிப்புதுமணிற்றன்மாலும்
[illegible]பத்தவனுந்தேடப்படுதழற்பிழம்பையொக்கும். (கரு)

வேறு.

மழைசூழ்சோதிமரந்தனதுமருங்கின்விலகியிடைவிட்ட,
தழைசூழ்கொம்பொன்றனையபுனைத்தடங்கொம்பொன்றன்மி
சைககிடப்பக்,கழைசூழ்பொதும்பரிலடங்கிற்றல்களிற்றினுரிபோ
ர்த்தவன்றிருமா, விழைசூழ்கையின்மிசைத்தன்கையேற்றிநின்
றாற்போலுமால். (கசு)

வேறு.

இருள்படத்தழைந்தவேயினிடைப்படர்சோதிவல்லி
பொருவளிக்கசைந்துமெல்லென்புநுந்தழைபெயருந்தோறும்
விரிகதிர்பரப்பித்தோன்றிமிடைதருமழைமறையுந்தோற்றம்
பெருகொளிமினனுமின்னிப்பெயன்மழைமறைதல்போலும். ()

கோணின்றநிலையைமுட்டிக்குனிந்தொருபசியவேய்தன்
னுணின்றநிலையைத்தொட்டுத்தலையிற்றேனொழுகநிற்றல்
சேணின்றவில்லெடுத்துத்தேவர்கோனரிதுபெற்ற
நாணொன்றுகொளீஇநிலத்தினட்டுவைத்தனையதம்மா. (கஅ)

வேறு.

முருகுவிரிமலர்க்கொடிகண்மூங்கின்மிசைப்படர்ந்துபோய்ப்
பொருவரியதுறக்கத்துப்புகுந்துவளர்கற்பகமா
மரமுழுதும்படர்ந்தலவும்வளர்மதியின்பேலாய
பெரியவளையடைந்தொழுகப்பெறிற்றுறக்கப்புகலரிதோ. (ககூ)

மரகதநன்மணிக்கதிரின்வளர்பசும்புற்கொடிமேய்ந்து
திரைபொருநீர்க்கான்யாற்றுத்தீம்புனலுண்டாமாக்க
ளரிமணல்பாயிளம்புன்னைநிழற்கீழ்வாய்குதட்டிப்
பொரியனையபூவுதிர்ந்துபுறம்புதையக்கிடக்குமால். (௨௰)

மணிமலர்கொள்பலகாயாமருங்குடுத்துச்சினைமுழுது
மணிமலர்கொடுணர்சுமந்தவசோகமொன்றுநடுநிற்றல்
பிணியவிழுநறியசெச்சைப்பிணையருழ்தோண்முருகன்
பணியடருநெடுந்தோகைப்பறவைமிசையிருந்தற்றே. (௨௧)

அறுபதவண்டினங்குறுகியறியாதசண்பகங்க
ணறவொழுகவிதழ்விரியுநறுமலர்பூத்துறுதோற்றங்
குறைபெறுநரடைந்தறியாக்குறையிவறன்மாலையான்
பெறலரியபெருஞ்செல்வம்பெற்றிருத்தல்போலுமால். (௨௨)

வேறு.

பற்பலவகிலழல்படவெழுந்தவிப்
பொற்பமைவனத்திடைப்புகையுண்டன்றுகொல்
கற்பகப்பொலமலர்கமழ்வதன்றெனி
லெற்படுபொன்னிடத்தியாதுநாற்றமே. (௨௩)

வேறு.

தொக்கநன்மரச்சூழலுணிற்குமாற்
றக்கமேலவர்தம்முளெவற்றினு
மிக்ககல்விவெறுக்கையுளொன்றுமின்
மக்கள்போன்மெனவற்றன்மரங்களே. (௨௪)

வேறு.

வளர்கரிநெடுங்கையால்வானந்தோய்சினை
தளர்வொடுள்வளைந்திடுந்தகைமென்கொம்புகள்
களிதருகரிகரலீலையாற்கடி
தெளிதினுட்குழைந்திடலியற்கையன்றுகொல்.

விரிசிறைப்புட்குலவிருந்துசெய்கலா
துருள்பழங்கரிபொரவுதிர்க்கும்வெள்ளில்க
ளிரவலர்க்கீந்திடாவீகைகொண்டுகொல்
லரசர்கள்பெறச்சொரியறிவிலார்கள்போல்,

மக்வுடலொடுக்கியவயிற்றுமந்திக
ளுயண்மலர்க்கொம்பினின்றொழுகுந்தேறல்வான்
றிகழ்தருகங்கையுட்டெய்வத்தாமரை
நிகரறுபொலங்கலநிறைக்குமென்பவே. (உஎ)

வேய்த்தலைவானரம்வேழம்பக்குலக்
கூத்தரிளுடியகூத்தரம்பையர்
பார்த்தனைவற்றின்மேற்பரிசின்வீசிய
துாத்திரண்மணிவடஞ்சுடருமெங்குமே. (உஅ)

வேறு. கதை.

இன்னவாரணவனத்திடையெம்பிரார்க்கண்டு
முன்னமைந்தடர்வசிட்டமாமுனிவினையறுத்து
மன்னுநன்கதியடைந்தமைவகுப்பலென்றெறிநீர்ச்
சென்னியந்தணன்வேந்தனுக்கொருகதைதெரிப்பான். (உக)

மூந்துமாமறைமுழுதுணர்வசிட்டமாமுனிதான்
றந்தமைந்தர்களுாற்றுவர்தாவில்சீர்க்காதி
மைந்தனுலுயிர்துறத்தலின்மனத்தைதீயுள்ளழுத்தி
யுந்துவெந்துயர்க்கடலகத்துணர்வெலாமுகுத்தே. (கo)

மருளுநெஞ்சமுந்தானுமோர்வான்றொடுகுடுமி
வரையிலேறிநின்றொய்யெனவிழுந்தனன்மண்ணி
லரிதுபெற்றதம்முடம்பின்மேல்வெறுப்புடையவரு
மொருவகல்லரோமக்கண்மேலுற்றதோர்வேட்கை. (கக)

வீழும்வேலையின்மணிகொழித்தெறிதிரைவேலை
சூழுமாநிலமடந்தைதன்றனைக்கையாலேந்தி
யாழுமாரஞர்க்கடலினின்றகற்றுகற்கேள்வித்
தாழுமவார்சடைமுனிவரனினக்கிதுதகவோ. (கஉ)

மலையிலேறிமண்வீழ்தரின்மாளுமோதுன்பங்
கலைகுறைந்தவெண்மதிமுடிக்கங்கையங்கண்ணித்
தலைவனுாருள்பெறுதியேற்றுன்பமுந்தணப்பை •
தொலைவின்முத்தியும்பெறுகுவையாதலாற்றுாயோய் (கங)

அடியர்வேண்டியவேண்டியாங்கருளிருண்மிடற்றுக்
கடிகொள்கொன்றையஞ்செஞ்சடைக்கடவுளைநோக்கி
யொடிவின்மாதவஞ்செய்தியென்றுரைத்தனண்முனிவ
னெடியவெந்துயரளக்கரினீந்திநன்றென்றான். (கச)

கண்ணகன்கடலுடைப்பெருநிலத்திடைக்கவின்ற
புண்ணியத்திருவனத்தினுண்மேலெனப்புகன்றே
தண்ணென்மென்புனல்வேட்டெழுகலையெனத்தரியா
னெண்ணலங்களிற்றடவியையடைந்தனனன்றே. (௩௫)

அடைந்தமாமுனிசிறந்துழியகனமர்ந்திருந்து
கடுபுலப்பகையைந்தையுங்கொன்றுபூங்கடுக்கை
மிடைந்தசெஞ்சடையந்தணன்றிருவடிவிடாது
தொடர்ந்தநெஞ்சினனாகியூண்யாவதுந்துறந்து. (௩௬)

கனலிவெங்கதிர்பெருமழைகுளிர்பனிகடுங்கால்
சினவிலங்கெனவிவற்றினால்வருந்துயர்சிறிது
நினைதலின்றியுச்சலித்தசைவகன்றுபன்னெடுநாள்
வினைகெடுந்தவமுழந்தனன்யாவருமவியப்ப. (௩௭)

வேறு.

சொன்னவிவ்வகையினோற்குந்தூயவற்கருள்வேண்டி
முன்னவன்பணைப்பருந்தானைமுத்துறழ்முறுவற்செவ்வா
யன்னமுமைகுடவயிற்றினைங்கைக்களிறறுகன்றும
பன்னிருதடந்தோட்சேயும்பரிசனகணமுமின்றி (௩௮)

அருமணிச்சுடிகையைவாயாடராவுருவத்தோடு
பரசிவலிங்கமாகிப்படுபுனலிறைவனறிக்குத
திருமுகமாயகத்துத்திமிரமுங்கெடவிளங்கி
விரிசுடர்க்கனலிதன்முன்மின்மினியாகநின்றான். (௩௯)

கண்ணுதலண்ணனிற்பக்காண்டாலோடுநெஞ்சந்
துண்ணெனநடுநடுங்கித்தொகுமயிர்சிலிர்த்தெழுந்து
மண்ணிடைவளிபெயர்த்தமரமெனத்தாழ்ந்துமுக்கட்
பண்ணவனெழுகவென்னப்பயமொரீஇயெழுந்துநின்று. (௪௰)

கையிணையுச்சிகூப்பிக்கண்களினருவிபாய
வெய்யசெந்தழலிற்பட்டமெழுகெனவுருகநெஞ்சம்
பொய்யில்வாய்குழறக்கொன்றைப்பொலமலர்க்கண்ணிவேய்ந்த
செய்யவார்சடிலமுக்கட்செல்வனைப்பழிச்சலுற்றான். (௪௧)

### பாம்பு தனது பகைவனைக்காணச் சிவலிங்கத்தின் முடியில் ஒளிந்திருந்தமை.

இன்னணமச்செஞ்ஞாயிறெழுவதன்முன்னமெய்தித்
தன்னமர்கடவுட்பூசைதனக்கிகல்செய்வார்க்காண
வுன்னியோர்சிற்றருங்கொண்டுமோபதிமுடிமேலிட்ட
மென்னறுந்துணரிற்புக்குவெவ்வரவொளித்ததன்றே. (௬௨)

### யானை தான் பூசித்த நிர்மாலியம் அவ்வாறிருக்கக்களிப்படைந்து பூசைக்கு ஆரம்பித்தமை.

ஒருத்தலுமவ்வாறெண்ணியொய்யெனவெய்தியண்ண
றிருத்தகுமுடிமேலிட்டதேமலர்தளிர்களிட்டாங்
கிருத்தல்கண்டுள்ளந்தண்ணென்னனறெம்பிரானெனப்பூசைக்குக்
கருத்துவந்தானகொலென்றகளையிலாப்பெருவகைமூழ்கி. (௬௩)

### இதுமுதல்-௭-செய்யுள் பாம்புமியானையும் முத்தியடைந்தமை.

பின்னருச்சனைசெய்வான்போய்ப்பிறங்குபொன்முகரியென்னு
நன்னதிப்புனன்முழுக்குந்தனிவிரைந்தெய்தியையன்
றன்னெழின்முடியிற்போதுந்தளிருந்தன்கையாற்றள்ளப்
பன்னகமேந்துசீறிப்பனைக்கையின்புழைபுக்கன்றே. (௬௪)

விடமொடுங்கெயிற்றுவெய்யவியாளமத்தகம்புகுந்து
குடையுமம்மதத்தநால்வாய்க்குஞ்சரமூழிநாளி
லிடியெனப்பிளிறியோடியின்புனன்மொண்டுமொண்டு
கடிவிசைவீசிவீசிக்கையயர்ந்ததன்பின்மாதோ. (௬௫)

நிலத்திடைக்கையடித்துத்திண்மைசெழுங்குருதிசோர
வுலத்தென மத்தகத்தையுரிஞ்சியுமனன்றாய்க்கோட்டுப்
பிலத்துறுவேர்மரங்களபெயர்த்திடத்தலையிற்பாய்ந்துங்
குலக்கடுவெகுளிநாகந்துடைத்தறீராமதன்றால். (௬௬)

நம்முடைப்பகையுங்கொன்றநாமுமிங்கிறந்துமென்று
மும்மதக்களிநல்யானைமுனைறுபுவெகுளிபொங்கிக்
கொம்மெனப்பின்பெயர்ந்துகுழனெடுங்கைமுடக்கி
யம்மலைபோற்படுஞாலமதிர்தரப்பாய்ந்ததன்றே. (௬௭)

பாய்தருமுழக்கங்கேட்டுப்பண்ணவர்மனந்துண்ணென்றார்
தாதுறுபூவுங்காயுமுகுத்தனதருக்களெல்லாஞ்
சீதநீர்நதியெல்லாஞ்சிதறினபறவையீட்ட
மீதெழுந்தும்பர்தாருவியன்சினைபுக்கவன்றே. (௬௮)

முழையிடையிருந்துநோற்குமுனிவருநனிமருண்டார்
குழன்மொழிமடவாரஞ்சிக்கொண்டதம்புலவிநீங்கி
யிழைபுணர்நுசுப்புவாட்டுமிளமுலைமுகடழுந்தத்
தழுவுநல்விஞ்சைவேந்தர்தணிப்பருமகிழ்ச்சிகொண்டார். (௩௯)

தாளவொண்மணிகள்சிந்தத்தலைபிளந்தும்பல்வீழ்ந்த
தாவுமெய்நுறுங்கிற்றங்கணழறிரித்தன்னவேணிப்
பெரியவன்றேவியோடும்பெருந்திறல்விடைமேற்றோன்றிப்
பொருவிறன்னுருவநல்கிப்புரிந்ததுடன்கொண்டுசென்றான். (௪௰)

இத்தலத்திற்கு ஸ்ரீகாளத்தியென்னும் பேர்பெற்ற காரணம்.

பாயலைநெடுநீர்வேணிப்பண்ணவன்கயிலாயக்குச
ஸ்ரீயொடுகாளமத்தியெனும்பெயர்ச்சிலந்திபாம்பு
மாயிருங்களிறிம்மூன்றும்பரகதிபெற்றவாற்று
லாயதுஸ்ரீகாளத்தியெனும்பெயரன்றுதொட்டே. (௪௧)

வேறு.

என்னமதியங்குலவுமீர்ஞ்சடைமறைத்தோன்
சொன்னவகைகேட்டுமகிழ்தூங்கியடல்வெள்வேன்
மன்னவனருட்கடலின்மாணடிபணிந்தா
னின்னுமொருநற்கதையிசைத்தருள்கவென்றே. (௪௨)

வேறு

ஓதினஞ்சிலந்திபாம்பொருத்தலின்கதை
காதுவிலாவிட்டுவன்கதைவிளம்புதும்
யாதவமனமமர்ந்தினிதுகேளென
மாதவமுடையருள்வள்ளல்கூறுவான். (௪௩)

இச்சருக்கம் ௯-ம் கருணைப்பிரகாசசுவாமிகள் அருளிச்செய்தது.

ஸ்ரீகாளத்திச்சருக்கமுற்றிற்று.

ஆகச்சருக்கம் ௯-க்கு கூடிய திருவிருத்தம் -௪௭௭.

௨
சிவசண்முகன்றுணை.

# சிவப்பிரகாசசுவாமிகள்

அருளிச்செய்தது.

## கண்ணப்பச்சருக்கம்.

நாட்டுச்சிறப்பு.

மதியின்மானிளங்கன்றினைவரிசிலைக்குறவர்க்
குதலைமென்மொழிப்பேதையர்பச்சிளங்கொடிப்புல்
பதுமமென்கையானீட்டுபுபரிவுடனழைக்கும
புதுமைகொண்டவெற்புடைத்ததுபோத்தப்பிநாடு. (௧)

இதுமுதல் ௫-செய்யுள் நகரச்சிறப்பு.

நாவலத்திருநாட்டசீறூர்களிற்றலைமை
மேவிநீணறுஞ்சந்தனநிரைத்துவெண்கவரி
மாவின்மென்மயிர்கற்றைவேய்சிற்றில்கள்வயங்கி
யோவில்சீருடுப்பூரெனக்குறிச்சியொன்றுண்டால். (௨)

வேடர்மங்கையர்முன்றிலினின்றபூவேங்கை
யாடுகொம்பரிற்றொடுத்தபூந்தொட்டிலினமர்ந்த
தேடரும்பசுங்குழவிதாலாட்டுசெவ்வழியின்
பாடல்கேட்டுமாமயிலுறங்குவயலைப்பக்கம். (௩)

இரும்பிற்செய்தனதிண்புயத்திறவுளர்மைந்தர்
விரும்பப்பின்றிரிந்திளம்புலிகற்குமால்வீரம்
பெருங்கைச்செம்புகர்முகத்திளம்பிடியினம்பிணைபோற்
கருங்கட்செய்யவாய்க்குறத்தியரணிநடைகற்கும். (௪)

வென்றிக்குஞ்சரமத்தகமுத்தமும்வேயிற்
பன்றிக்கோட்டிடைவருமொளிமுத்தமும்பரப்பி
முன்றிற்பற்பலசிற்றில்கள்செய்யுமாண்முனியாக்
குன்றிச்செம்மணியணியுடைப்பேதையர்குலமே. (௫)

நெடியசந்தனக்காற்கரிமருப்பிதணின்று
கடிகொள்பைந்தினைகவர்பசுங்கிளியினங்கடியு
மடநல்லாரிசைகேட்டலுமாடகநல்யாழ்
தடவல்விட்டுவிச்சாதரர்செவித்துணைதாழ்ப்பார். (௬)

இது முதல் ௬-செய்யுள்-நாகனுந் தத்தையும் மகவின்மையால் வருந்துதல்.

இனையபற்பலபெருவளமெய்துமவ்வூரிற்
குனியுநோன்சிலைக்குறவர்தங்குஞ்சிதோய்கழற்கால்
வனசராதிபனாகனென்பானிகல்வாட்கண்
மனைவிதத்தையென்பாளொடுவாழ்ந்தினிதிருந்தான். (௭)

வாழுநாளின்மென்மழலையஞ்சொன்மகவின்மைத்
தாழ்வினானனிமனங்கவன்றிறவுளர்தலைவன்
வீழிவாய்க்கயலரிமதர்நெடுங்கணேய்மென்றோ
ளேழைநுண்ணிடைமனைவியோடின்னணமெண்ணும். (௮)

கண்ணில்யாக்கையுந்திங்களில்கங்குலுங்கண்போ
லண்ணன்மந்திரியில்லரசாட்சியுமருளி
றிண்ணெனெஞ்சமும்புலவரிலவையுமொண்டீம்பால்
வண்ணவாயிளமக்களில்வாழ்வுமொப்பாமால். (௯)

சேறளைந்தமென்சீறடித்தளிரோடுதீம்பாற்
சோறளைந்தகைத்தாமரையோடுசெந்துகிர்வா
யூறுநீர்நனைமார்பினோடிளமகாருந்தி
யேறுமின்பமுள்ளதனையேயுடம்பெனவிசைப்பார். (௧௦

அரிகொள்பொன்புனைகிண்கிணிதண்டையோடணிந்த
தருணமென்றளிரச்சீறடித்தளர்நடைச்சிறுவர்
மருவுறுதசெவ்வாம்பல்வாய்மழலையாரமுதம்
பருகிலாச்செவிபாவையின்செவியெனப்படுமால். (௧௧)

இம்மையின்பேறுமறுமையினின்பமென்றிரண்டு
மம்மென்மைந்தரையில்லவர்க்கில்லைமற்றதனு
லெம்மையாளுடைமுருகவேளடிமலரிறைஞ்சிச்
செம்மைநன்மகற்பெறுகுவமெனச்சிந்தைசெய்தான். (௧௨)

இது முதல் ௪-செய்யுள் முருகக்கடவுளுக்குச் சிறப்புச்செய்து குழந்தைக்கு வரம்பெற்றமை.

சிந்தைசெய்தவன்வளைபகவெறிசுடர்ச்செவ்வே
லெந்தைவாழ்வதற்கேற்றதோர்சினகரமியற்றி
நந்துபூசனைநடத்துபுநடிக்குமாமயிலும்
வெந்திறற்கொழுஞ்சூட்டுவாரணங்களும்விடுத்தான். (௧௩)

இரலைதொண்டகந்துடிமுதற்பறையொலியீண்டத்
திருவிழாவயர்ந்திலங்குசெங்காந்தளர்ந்தெரிய
லுருவவேலனைக்கூயகன்களனணியுறுத்து
வெருவருந்தகைவெறியயர்வித்தனன்விழைவாள். (௧௪)

கடிகொளவ்வெறியாட்டிடையாவருங்காணச்
சுடர்செய்வேற்படைக்குரிசிலவ்வேலன்மேற்றோன்றி
யொடிவிலன்பொடுசெய்தவிச்சிறப்பினுக்குவந்தேம
படியெலாம்புகழ்மகற்றருகுவமெனப்பகர்ந்தான். (௧௫)

பகர்ந்தசொல்லமுதந்துணைச்செவிகளாற்பருகி
யுகந்தமாமகிழ்வெய்தியதத்தையுமுவகை
மிகுந்தநாகனுந்திருவடிமலர்மிசைவீழ்ந்து
புகழ்ந்துநின்றனர்மறைந்தனனருட்கடற்புனிதன். (௧௬)

தத்தை-கருப்பமடைந்தமை.

பின்னரவ்வெறியாட்டாளன்பெறப்பெருஞ்சிறப்புச்செய்து
துன்னிநின்றகலாச்சுற்றத்தொகைக்கெலாமகிழ்ச்சிசெய்து
தன்னமர்மனையுந்தானுந்தளிர்த்துளமினிதிருந்தா
ளன்னமன்னவள்சின்னாளிலருட்பெறற்கருப்பமுற்றாள். (௧௭)

இது முதல் ௨-செய்யுள் கருப்பக்குறி.

உண்டுகொலென்னுமையமொழிந்ததுமருங்குல்கோங்கின்
வண்டுறுமுகுளமென்னவணமுலைமுகங்கறுத்த
பண்டுவமைக்குடைந்தபசியவேய்க்குலமுவப்பத்
துண்டவெண்மதிநுதற்குத்தோட்டுணைமெலிந்தவன்றே. (௧௮)

மகவுடன்வயிற்றிருந்துவளர்புகழ்பரந்ததென்ன
மிகவுடல்விளர்த்ததுண்டிவெறுப்புவந்ததுபுளிங்கூ
ழனமர்ந்துண்ணும்வேட்கையடைந்ததுநடையோய்ந்தன்று
தகைமலர்மென்பூங்கோதைதானபெருஞ்சுமையாயிற்றால் (௧௯)

புதல்வன் பிறந்தமை.

இன்னவாறுவயாநலிவெய்திய
கன்னலின்மொழிக்காரிகைபெற்றனள்
மன்னுதங்குலமாசுதுடைத்திடும்
பொன்னினன்னபுதல்வனையென்பவே. (௨௰)

### நூலாசிரியர்.

பெறலருஞ்சேய்பிறந்தெனக்கானவ
ரிறைமகிழ்ச்சியிருங்கடன்மூழ்கினன்
பொறையுயிர்த்தவப்பொற்றொடியெய்திய
வுறுமகிழ்ச்சியுரைப்பவர்யாவரோ. (உக)

### நாகன் முருகக்கடவுளுக்கு சிறப்புசெய்து எண்ணெய்விழா நடாத்துதல்.

நண்ணுமோகையினாகன்பெருஞ்சிறப்
பண்ணல்வேற்படையையனுக்காற்றினன்
பெண்ணுமாணும்பெருமகிழ்வெய்தலா
னெண்ணெயாட்டணிவியவங்குநிகழ்ந்ததே. (உஉ)

### குழந்தையை நீராட்டித் தொட்டிலேற்றுதல்.

மணியினைமண்ணுறுத்தாங்குவாசவான்புனலாட்டிப்
பணிகொள்குவிமுலையிலிற்றூம்பால்பெய்துநிலந்தேய்த்த
வணிதிலகஞ்சிறுநுதலிலணிந்துமுலைப்பாலூட்டி
மணியில்காப்பருப்பினியவெழிற்றொட்டிலேற்றினர். (உ௩)

### நாகன் குழந்தைக்கு நாமகரணஞ்செய்தமை.

பூங்குழல்வேனெடுங்கண்ணாள்புனலாட்டிப்புனைந்துதர
வாங்குசிலைமறவர்கோன்மணிமகனைத்தடக்கையாற்
றாங்குபுதிண்ணென்றிருந்ததன்மையாற்றிண்ணனெனத்
தேங்கியபேருவகையொடுந்திருநாமஞ்சாத்தினான். (உ௪)

### திண்ணனார் வளர்ச்சிகூறல்.

திண்வளருங்கரிமருப்பாற்செய்தசைபூந்தொட்டிலின்மேல்
விண்வளரும்புனிற்றுநிலாவெண்மதியின்வளர்மைந்தன்
றண்வளரும்பாலாழித்தரங்கமிசைநாகணையிற்
கண்வளருந்துழாயலங்கற்கதிர்மணிவண்ணனைப்போலும். ()

### இதுமுதல் ரு-செய்யுள் திண்ணனார் விளையாட்டயர்தல்.

மலர்மாருதம்புகுந்தமடுக்கமலமெனநீரிற்
கலைகெழுமாமதியமெனக்கவின்கொடிருமுகமசைய
விலவிதழ்வாயமுதொழுகவெழின்மார்பமிசையெடுத்துச்
சிலைமறவர்குலதிலகஞ்செங்கீரையாடிற்றே. (உ௬)

தருணமதிநிலத்தினிடைத்தவழ்வதெனத்தவழ்ந்து
பொருதிரைவார்கடலாடைப்புவிமகள்செய்புண்ணியத்தாற்
றிருவடிமாமலர்சுமப்பச்சேர்த்திளமென்னடைபயின்றான்
குருதிவடியிலங்கிலைவேற்குகனருளாற்பெறுமைந்தன். (௨௭)

குன்றிவடமணிதயங்கக்கொடுவரிவள்ளுகிர்க்கோவை
நன்றுகழுத்தினிலிலங்கநனந்தலைச்சிறாருழுழுது
மொன்றுசிறாரொடுசிறுதேருருட்டியும்பேதையரிழைத்த
துன்றுமணிச்சிற்றில்லந்துடைததும்விளையாட்டயர்ந்தான். ()

ஆரநாரின்றிண்கயிற்றாலமைச்சிறுகோல்வளைத்தவில்லுங்
கூர்வாய்முண்ணுனிபதித்தகோற்கோலுங்கைக்கொண்டு
கார்மேனிமைந்தரொடுகான்புகுந்துகொடுவிலங்கி
னேர்வாய்மென்குருளைபலவெய்தல்செய்தான்விளையாட்டால்.

வாமிளமான்கன்றுகளும்வள்ளுகிர்நோன்றாட்புலியின்
கோமளநற்குருளைகளுங்குடாவடியின்குட்டிகளுந்
தாமிழைத்தமுற்றவததாற்சவரர்குலதிபன்பயந்த
மாமகனார்கைப்பட்டுவளர்ந்தவற்றிற்களவில்லை. (௩௦)

இதுமுதல்-௨-செய்யுள் பிதாதிண்ணனாருக்கு வில்வித்தை பழக்குதல்

இவ்வகையவிளையாட்டோடிளமைந்தனொருநாட்
கைவவலியசிலைவிஞ்சைகற்பிக்கும்பருவம்வரத்
தெவ்வடுதோட்குன்றவர்கோன்றேயத்துமறவரெலா
மவ்வழிவந்துறக்கூட்டியடர்சிலையின்விழாநடத்தி. (௩௧)

பின்புசிலையாசாற்குப்பெருஞ்சிறப்புச்செய்தடிக
ளன்பழையகுடிநிறுத்திவ்விளையோற்குச்சிலைக்கல்வி
யன்பினொடுகொடுக்கவென்றனதற்கிசைதொல்லாசிரிய
னன்பகலில்வரன்முறையேகற்சிலைகைப்பிடிப்பித்தான். (௩௨)

இதுமுதல் ௨-செய்யுள் திண்ணனை அர்ச்சுனனென்று பொருள்கொள்க.

முற்பிறப்பிற்பல்பெரும்போர்முடித்தசிலைவிஞ்சையெலா
மற்பழுத்தகுலவுத்தோள்வனசரர்தம்பெருமாற்கு
விற்பிடித்தகாலத்தேவிளங்கியதஞ்சனம்விழியிற்
பொற்பவிட்டபொழுதேகீழ்ப்பொருள்வைப்புக்காண்பதும்போல.

கொள்வலிச்சிலையின்விஞ்சைகுறைவறநிரம்பிக்காளை
முள்ளெயிற்றரவுயர்த்தோன்முரட்படைமுழுதுங்கொன்ற
வெள்வயப்புரவித்திண்டேர்விசயனைவேட்டெக்குலத்தி
னுள்ளவதரித்தான்கொல்லென்றுரைதரவொழுகுநாளில். (௩௪)

நாகன் குறிப்பறிந்து திண்ணனார் வேடர்களோடு
வேட்டைக்குச் செல்லல்.

சேட்டிளஞ்சிங்கமன்னசெம்மலைத்தந்தைகன்னி
வேட்டமாடுவித்தலாற்றவிழைந்தனனதனைநன்கு
கூட்டிடவனதெய்வங்கள்கொள்பலிகொடுப்பவுன்னிக்
கோட்டுறுவரிவில்வேடர்குழுவொடுவனத்திற்புக்கான். (௩௫)

இதுமுதல் ௯-செய்யுள் புனலாடல்.

புக்கவன்குழைசிலைப்புளிஞர்யாரையு
மைக்கருங்கயல்புரைவரட்கண்ணாரொடு
தொக்கிருஞ்சுனைப்புனறோய்ந்துவம்மெனா
வக்கணந்தானுநீராடப்போயினான். (௩௬)

குரைகடலினுமக்குறியமாதவன்
பருகினும்பருகுமென்றஞ்சிப்பாழிமால்
வரையரண்புகுந்தெனவயங்குபூஞ்சுனை
தெரிவையரொடுமறச்செல்வனெய்தினான். (௩௭)

ஒலிவளைக்கையினாருற்றபோதிரி
பலவிதப்பறவையின்பறையின்காற்றினான்
மலிசுனைக்குவளைகளசைதன்மாதர்கண்
ணலிபகைக்குடனனிநடுங்கல்போலுமே. (௩௮)

மற்றவர்புகுதலின்மணங்கொள்பூவினுட்
டுற்றவண்டிரிதராறாயநீர்ச்சுனை
யற்றைநாள்வரையும்புக்காடுவார்ப்பெரு
துற்றநீர்பழிவிடுத்தோடல்போலுமே. (௩௯)

வேறு.

செய்யதாமரைத்தேமலரன்னலா
ணையவாண்முகத்தோடுறவாடின
மொய்யரும்புகண்மூத்தந்துயலவரும்
வெய்யகொங்கைவிருந்தெதிர்கொண்டவே. (௪௰)

வேறு.

தாமரைமுகத்தர்குவளையங்கண்ணர்சைவலக்கூந்தலர்வள்ளைக்
காமருகுழையரன்னமென்னடையர்கமலநீள்வளையமென்றோளர்
னேமியம்பறவைக்குவிமுலைத்தடத்தர்நிறையிதழாம்பலம்வாய
ராமடமகளிர்நீரைவிட்டகலாதகனமர்ந்தாடினாரன்றே. (௪௧)

இவ்வுழிமூழ்கிவேறிடத்தெழூஉலென்னைநீர்காண்கெனமூழ்கி,
யவ்வைகையெழுந்தசிற்றிடைப்பெருந்தோளணியிழையளகவாண
முகத்தைச், சைவலத்தருகுமலர்ந்தசெங்கமலத்தனியலரென
மனத்தெண்ணிக், கொவ்வைவாய்மகளிரெழுந்திலளென்றகுளிர்
புனற்பரப்பெலாம்பார்ப்பார். (௪௨

வேறு.

முரிதிரைப்புனன்மூழ்கியெழுதரு
மரிமதர்க்கணுளங்கலுழ்வாண்முக
மினாதிரைக்கடலின்கண்ணெழுதல்செய்
விரிகதிர்க்கலைவெண்மதியொத்ததே. (௪௩

அன்னமென்னவந்தீம்புனலாடிய
பொன்னினன்னபொறிசுணங்கம்முலைக்
கன்னலின்மொழியார்கரையேறினார்
துன்னுபைந்தழைத்தூசுடுத்தாரரோ. (௪௪)

இதுமுதல் அ-செய்யுள் பூக்கொய்தல்.

அங்குநின்றகலங்கயற்கண்ணினார்
பங்குல்கண்படுமாமலர்ச்சோலைபுட்
பொங்குமோகையிற்போய்க்கடவுட்கலர்
கொங்குநாண்மலர்கொய்யத்தொடங்கினார். (௪௫)

தம்மைமஞ்ஞைதழைசிறைமென்குயி
லம்மென்பூவைகிளியென்றறைந்திடன்
மெய்ம்மையாகவிளங்கிழைபார்வினா
விம்முபூந்தருமீமிசையேறினார். (௪௬)

கொங்குதங்கியகோங்கலர்கொய்புமோர்
மங்கைகொம்பின்மறைந்துநின்றாளெழில்
பொங்குகொம்முலைபூமுகிழாமென
வங்கைகொண்டுதொட்டன்மையின்வெள்கினாள். (௪௭)

கிராதர்தங்குலக்கிஞ்சுகவாய்மலர்
விராயவோதியாவேங்கைமேனின்றனர்
குராவலாமற்குடைந்தளிபாடுபூம்
பராரைவேங்கையும்பாவைகளபூதெதன. (௪௮)

மையகண்ணியோர்மங்கையொராடவன்
கையடிக்கவின்காணியமாதுநீ
செய்யவிச்சினைத்தேமலரொட்டுபு
கொய்யவல்லைகொலென்றலுங்கூசினாள். (௪௯)

வீவிலாற்றலோர்மீளியொருநடை
யோவமன்னானுயர்சினைப்பூப்பெறத்
தாவல்கண்டதைத்தாழ்வித்தனனவ
ளாவியன்னவளாய்மலர்சிந்தினாள். (௫௰)

மாதர்தம்மடிவைத்தலிற்பற்பல
வீததைந்தவிதமறிந்தாரல
ரீதசோகநாமேறியபின்மிகப்
போதுகொண்டபுதுமையென்னென்றனர். (௫௧)

வடுவகிர்க்கணாற்றம்மொடுமாறுகொள்
படியினுவிடம்பார்த்துவளைந்தெனக்
கடிகொள்வண்டினங்கண்மணங்கமழ
துடிகொணுண்ணிடைதோகையர்ச்சூழ்ந்தவே. (௫௨)

இதுமுதல் ரு-செய்யுள் திண்ணன் தெய்வத்திற்கு
பூசை நடாத்துதல்.

தாதளைந்தளிதாழிசைபாடுதண்
போதுகொய்தபுதுத்தளிர்மேனியார்
காதலன்பிற்கணவரொடெய்தினார்
தீதுதீர்க்குமத்தெய்வநிலயமே. (௫௩)

கந்தமாருக்கடிமலர்ப்பைஞ்சுனை
யந்தணீர்படிந்தவ்வுழியெய்தினான்
மந்தராசலமென்னவளர்ந்ததோ
ணந்துபேரிசைநாகன்கிராதர்கோன். (௫௪)

விரிமலர்த்தொடைகளானும்விளங்குவெண்கவரியானும்
வெருவருதெய்வம்வாழுமவீழுடைவிலங்குநீள்கோட்
டிருள்படத்தழைந்தகோளியெழில்பெறவணிந்துபூசை
புரிபவற்கூவிப்பூசைபுரிவித்தான்வரிவினாகன். (௫௫)

கானகமுழுதும்வாசங்கமழ்தரக்குக்குலத்தி
னீனறுமபுகையெழுப்பிநெடுநிலங்குருதிபாய
நானெடுஞ்செவியகோட்டநண்ணியதிரிமருப்பி
னூனமொன்றுறுமில்லாவுயர்விடைபலபடுத்தான். (௫௬)

தேன்பழங்கிழங்குதொப்பிசெறியமையரிசியட்ட
வான்பதந்தினையின்மாவைவனைதகின்வாலரிசிநன்மா
வான்பயம்பெய்தமைத்தால்சிதேக்கிலையிறபெய்து
கான்பயில்கடவுட்கேற்றிக்களித்தனன்றேவராளன். (௫௭)

இதுமுதல் ௭-செய்யுள் கள்ளுண்டல்.

மறவமெல்லணங்கனுநம்வனதெய்வுப்பராய்வணங்கி
முறையறிதேவராளனமுழுவிடைக்குருதிதோய்செந
நிறமுறுசேடைசாதநெறறியர்தெய்வமுண்ட
வுறுசுவையுண்டியெலலாமுண்டுளங்களித்தாரன்றே. (௫௮)

வெடிகுரற்சிலைகைச்செங்கண்வேடரும்பவளச்செவ்வாய்த
தடமலர்க்கருங்கணுருந்தசுமப்னுணிறைத்துவைதத
வடிகொளகட்டேறலங்கைமடகருபுநிறையவுணடா
ருடைநடைசொற்கள்சோரவொருவர்மேலொருவர்வீழ்ந்தார் (௫௯)

சிற்றிடையொருத்திதைத்தநுங்கிலைத்தேறலேந்தி
மற்றதனகந்தோனறுந்தனமதிமுகநோக்கியுண்டாள
கற்றையங்கதிரவெண்டிங்கள்களவொடென்வயிறுபுக்கின்
றிற்றதுநிலவுநம்மூரகினியிலையுணமையென்றாள். (௬௰)

களிதருதேறலுண்டுகளித்தியேற்பரிதிச்செல்வ
விளிவினின்வெம்மையாறிவெண்ணிலாத்திங்கள்போலக்
குளிர்கதிர்பெறுவையீவல்கொள்கெனப்பிழியலேந்தி
யிளிமொழியொருத்திவானத்தியல்சுடரழைத்துநின்றாள் (௬௧)

செறிதொடியொருததியுண்டதேம்பிழிமயக்கந்தன்னாற்
பிறனொருவனைத்தன்காதற்பிரியருங்கொழுநனென்றே
யிறுகிளமுலையழுந்தவிறுகுறத்தழுவினாளக்
கறைகெழுவேலினானக்கள்ளினைப்பலபுகழ்ந்தான். (௬௨)

கருங்கணாளொருத்திதன்வாய்க்கடைவழிநுரைவேட்டெய்துஞ்
சுரும்பினைவளைகளார்ப்பத்தோன்றியங்கையாலோச்சி
விரும்புநின்பெண்டிர்பாற்போய்விம்மவாய்பருகென்றாடி
வருந்தலைமகனோடிவைதல்போல்வைதுநின்றாள். (௬௩)

மணங்கமழ்மலர்துதைந்தவஞ்சியங்கொடியினைத்தன்
வணங்கிடையவளென்றுன்பூவாயைத்தேனொழுகலஞ்சி
யணங்குநீதிறந்திடாயேலளியனேனுய்வனோவென
றுணங்கியமனத்தாற்றூழாவொருமகன்களிப்புமிக்கான். (௬௪)

ஊசலாடல்

உண்கடுங்கண்மயக்கமொழிந்தபிற்கணவராட்டப்
பண்படுகிளவிநல்லார்படாமுலைவடம்பிணங்கக்
கண்கொளலருநுசுப்புக்கவன்றழநுதல்வியர்ப்ப
விண்பொருசினையவாலினவீழூசலாடினாரால். (௬௫)

மறவர்கள் மறத்தியரிடத்தில் இன்பநுகர்தல்

பொரிமலரனையபுன்கம்புதுநிழற்புளினந்தோறும்
விரிகதிர்ச்செஞ்ஞாயிற்றின்வெயில்புகாப்பொதும்பர்தோறும்
தருமிடையடுக்கந்தோறுமதமாலநீளரங்கந்தோறும்
வரிசிலைமறவர்செவ்வாய்மறத்தியர்போகமுண்டார். (௬௬)

சிரமபரிகாரஞ் செய்தல்.

மீமிசைநின்றசைந்துவிழுமணியருவிபார்த்துங்
காமருமணிக்கலாபக்களிமயிலாடல்கண்டுந்
தேமலர்வனத்துலாயுஞ்சிலம்பெதிர்கூயழைத்து
மாமதிமுகத்தினார்தமமகிழ்நரோடாடினாரே. (௬௭)

திண்ணனார் தன்னூருக்கு வந்தமை.

இன்னணமெங்குமாடியெய்தியசிலைவல்லாரு
யின்னிடையழுதிரங்கவீங்கியகுவவுக்கொங்கைப்
பொன்னனார்தாமுஞ்சூழ்ந்துபோதரவனத்தினீங்கித்
தன்னமருடுப்பூர்புக்கானடைக்கையால்யானையன்னான். (௬௮)

இதுமுதல் ௨-செய்யுள் நாகன் திண்ணனை ஆசீர்வதித்து வேட்டையாட அனுமதி கொடுத்தல்.

மற்றைநான்றருகழைத்துமைந்தனையையகேட்டி
யிற்றைநாண்முதலாநீயேயிறவுளர்க்கிறைவனாகிப்
பற்றலர்முனைமுருக்கிப்பகைப்புலங்கவர்ந்துகொற்றம்
பெற்றுமாவேட்டையாடிப்பெரிதுவாழ்ந்திருத்தியென்றே. (௬௯

வழிவழிவந்தவெற்றிவரிசிலைகொடுத்துக்
கழிபெருங்காதறன்னாற்கன்னவிறோணொழுங்கத்
தழுவிநங்கடவுட்செவ்வேடன்னருடுணையாச்சென்று
மழவிடைகன்னிவேட்டம்வாய்த்துடன்வருகவென்றான். (௭௰)

திண்ணனூர் பிதாவையும் தாயையும் வணங்க தாய் மகிழ்ச்சியடைந்தமை.

என்றதன்றாதைபொற்றாளிறைஞ்சுபுவிடைகொண்டன்னை
தன்றிருவடிபணிந்தான்றாவெனைப்பெற்றதாயே
மன்றலங்களிறேயிங்குவருகெனவெடுத்துப்புல்லிக்
குன்றுறழ்முலைப்பால்சோரக்குழைந்துநெஞ்சுச்சிமோந்தாள்.()

தாய் திண்ணனை ஆசிர்வதித்து விபூதிசாத்தி வேட்டைக்கு அனுப்புதல்.

போகுகானெறிகளெல்லாம்புதுமலர்த்தண்ணென்சோலை
யாகவேபுகுந்துவேட்டமாடிமுட்கிழியுமின்றிச்
சேகுநோன்சிலையாரோடுந்திரும்புககண்ணேறின்றி
மேகமேயனையாயென்றுவெண்பொடிசாத்தினாள். (எஉ)

இதுமுதல்-உ-செய்யுள் வேட்டைக்குரியவடிவுகொள்ளல்.

தாயடிமறித்துந்தாழ்ந்துதரும்விடைகொண்டுநீங்கி
மேயநீணிறங்கொள்கச்சைவிசித்துடைவாளும்யாத்திட்
டாயிளந்தளிர்தொடுத்தவலங்கலங்கண்ணிவேய்ந்து
மாயவன்றொடுதோறொட்டுவரிசிலையெடுத்துக்கொண்டான்.

மலர்தலைபுலகில்யார்க்கும்வணங்கிலாக்கொடுமரத்தைக்
குலவரையனையதோளான்குணங்கொளீஇவணங்குவித்தான்
வலிகெழுசிலைகுழைக்கும்வன்மைவான்குடிப்பிறந்தோர்
சிலர்கொடுமரமவணக்கஞ்செயலிறும்பூதுகொல்லோ. (எச)

இதுமுதல் ௰௪-செய்யுள் வேட்டைச்சிறப்பு.

இருமதுகுரவர்கேளாவீண்டியமயிர்பொடிப்பத்
தருமிசைப்பறவையெல்லாந்தனித்தனிவெருவியோட
வெருள்கொடுவிலங்குநீட்டம்வேறுவேறிரிதல்செய்ய
வரைபொருதோளினானறைவந்துகானொலிசெய்தானால். (எரு)

வில்லினரம்பினார்வெவ்வெடிபடுகுரலர்காலிற்
செல்பவர்மின்னுவாளர்செறிமழைமேகமன்னார்
கொல்லடிபிடிதுரத்துகுத்துவெட்டெறியெய்யென்னுஞ்
சொல்லினர்தணியாச்சீற்றத்துப்பினர்சூழச்சென்றான். (எசு)

கணைபிறகொழியவோடுங்கதிப்பினகொடுங்கூர்ம்பல்ல
தணிவருசினத்தவேட்டந்தனித்தனியாடவல்ல
வணியெயிற்றழவெஞ்சீற்றத்தரியின்மேல்விடினுஞ்செல்வ
பிணிதொடர்பாசத்தோடுபெருவலிநாய்கள்சென்ற. (எஎ)

வலத்தினுமிடத்துமுன்னும்பின்னருமாறிமாறிக்
கொலைத்தொழிற்சுருள்வாணிணைக்கொடுஞ்செவிஞமலிசெல்ல
வுலப்பில்போராற்றல்வேடரொடுவினைதுவலைக்கணணி
யிலைச்சியவேடர்வேந்தன்வேட்டயங்காடுபுக்கான். (எஅ)

பலபலவிலங்கினீட்டம்பயிலிடமறிந்துசுற்றும்
வலிவலைசூழ்ந்துசேணில்வழியொதுக்கியபின்வேடர்
கலிகெழுதுடிகள்பம்பைகங்குரலிரலையாதி
யொலியெழுவித்துமாக்களுறுவலைபுகத்துரந்தார். (எ௯)

புக்கபிற்றும்புக்குப்புகுவழியொடியெறிந்து
மிக்கவல்லுழுவைகேழன்மிடைமயிர்க்கரடிமுன்னாத்
தொக்கபல்விலங்கின்பார்வைசூழ்வலைப்பரப்புள்விட்டார்
மைக்கருஞ்சிலைக்கைவேடர்வயின்வயின்மறைந்துநின்றார். ()

விட்டபார்வையின்விளிவினாலவண்
கிட்டிவந்தமான்கிளையெலாமுடன்
பட்டுவீழ்தரப்பகழிதூவினார்
மட்டிலாவலிவல்வில்வேடரோ. (அக)

காலிற்செல்லுநாய்க்கணந்தடுத்தலாற்
சாலச்சீறுபுதடையுட்பட்டமா
நீலக்குன்றெனுங்கார்களிற்றினம்
வேலிற்குத்தினார்சிலவர்வேடரோ. (அஉ)

மிடைசெடியிடைமறைமறவர்கள்விடுகணையுடலுருவப்
படுதலுமயலுறுகொடுவரிபாய்தந்ததென்றதனைச்
சுடுதழலடுவெகுளியினொடுதொடாகுடர்சரிதரவெண்
டடமுனைவளர்பிறையெயிறுறத்தாக்கியதொருகருமா. (அங)

பரியனைமரங்ளைமறைவரிபடுசிலைமுரணுரவோர்
பொருவினைசரமுருவியவுடல்பொருவருமொருகருமா
வெரிபுனைதருபெருவெகுளியொடெய்கணைவழிபோயவ்
விருடருமரமுரிதரவுருமெனத்தாக்கியதன்றே. (அச)

எழுவுடனெழின்முழவிழிவுசெய்தெழுபெருவலிகெழுதோண்
முழுமறவரினெழுகியகணைமுழுகியவுடலுழுவை
வழைகுழைகழைவிழைநிழலிடுமழைதவழ்மலையதிரத்
தழைசெவிமழவழுவைகள்விழத்தாக்கியதுறுவிசையால். (அரு)

வெய்யவர்குலமுய்யவைகவருமெய்யருள்பெறுதிண்ண
னையமிறுணைமொய்வலிசெழுமையவில்லவசில்லர்
மையொடுநிகர்மெய்யுருவியலையுறுமுனைமுள்ளை
யெய்புதறினவொய்யெனவெதிரெய்யடுகணையென்ன. (௮௬)

கனைமாமழையிடிபோலதிரகுவாய்மணையாமா
வினையாவலியுடைமாகளிறெழுவாய்வனம்வாழ்மா
வனைவார்கழன்மதயானைகண்மலைவார்விடுவார்கோன்
முனைவாளிகளுடன்மூழ்கலின்முளவாயினமாதோ. (௮௭)

திண்ணனார்வேடர்களோடுதனதூருக்குவந்தமை.

இவ்வகைபலவிலங்கினீட்டமுநூழிலாட்டித்
தெவ்வடுவரிசிலைக்கைத்திண்ணனமாவேட்டமுற்றிக்
கௌவைகொள்கானநீங்கிக்கடுந்திறன்மறவரோடு
மெவ்வமிறனதூர்புக்கானின்றவாகுவகைபொங்க. (௮௮)

இதுமுதல்(௫௮)செய்யுள்கதை.

பின்னரும்பலகால்வேட்டம்பெருவழிக்கானையாடி
யன்னையுமத்தனுங்கண்டகமகிழ்பூப்பவைகிக்
கொன்னுனைப்பகழிவேடர்குலததொடும்வாழ்த்தவோர்நாட்
டன்னுளம்வேட்டமூக்கச்சரமபுகாவனம்புகுந்தான். (௮௯)

புகுந்தவன்கானமெங்கும்புக்குலாய்மிகவிளைத்து
மிகுந்தழைமிடைமரத்தில்மென்னிழறனிதுயின்றான்
முகுந்தனைவாளியாக்கிமுரணினரரணம்வேவ
நகுந்தனிமுதல்வனன்னான்கனவிடைநண்ணினானே. (௯0)

பூசியதிருவெண்ணீறும்புலியதளுடையுஞ்செக்கர்
கூசுபொன்சடையுங்கொண்டகோலத்தோடெதிர்நின்றான்று
மேசுதவிலாதமைந்தவிவ்வளாவடமூலத்திற்
காசில்பொன்முகரியாற்றங்கரையிலோரிலிங்கமுண்டால். (௯௧)

அதுதுயரனைத்தும்வீட்டியரும்பெறலின்பநல்கு
மதவலியவைதநீசென்றுவணங்குதியென்றுரைத்துக்
கதுமெனமறைந்தானங்கேகண்விழித்திறும்பூதெய்தி
யெதிரில்பேராற்றலான்றிக்கெங்கணுநோக்கிநின்றான். (௯௨)

ஆயகாலையில்வில்வேடரார்ப்பினாலெழுந்துகான்சூழ்
போயவல்வலைபரிந்துபொருகடுங்காலிற்பொங்கி
மாயிருங்கேழலொன்றுமலைபுகப்போதல்கண்டான்
காயழல்வெகுளியான்பின்கையில்வில்லொடுதுரந்தான். (௯௩)

துரந்துபின்செல்லச்செல்லத் துணைவிற்போயெறுழியாற்கீ
ழிருந்தருளிலிங்கத்தின்பாலெய்தலுமறைந்ததண்ணல்
வரம்பில்விம்மிதத்தனாகிமற்றிதுமறைந்ததென்னோ
தெரிந்திலமென்றுநினைந்தான்சிவலிங்கமிருத்தல்கண்டான். (௯௪)

காண்டலுங்கடவுளார்தங்கருணைநோக்கினிதுபெற்று
மாண்டகுமிரதந்தோய்ந்தவல்லிரும்புருவமாறி
யீண்டொளிகெழுபொன்னாவதென்னமுற்குணங்கண்மாறி
யாண்டகையிறைவன்றன்பாலன்பொருவடிவமானான். (௯௫)

நாள்பலபிரிந்திருந்துநண்ணியசிறுசதங்கைத்
தாளிளமகனைக்கண்டதாயெனத்தாழாதோடி
நீளெழுவனையதோள்கணெருங்குறத்தழுவிமோந்து
வாளழலரக்கினன்னமனத்தினான்முத்தங்கொண்டான். (௯௬)

செய்யகண்ணீரரும்பச்செறிமயிர்பொடிப்பவாதன்
கையகப்பட்டதெய்வக்கதிர்விடுமணியினாயேற்
கையன்வந்தகப்பட்டானென்றணியெயிறிலங்கநக்கு
மெய்யெலாமெய்யன்பாயவிடலைமற்றின்னசொல்வான் (௯௭)

யானையும்புலியுமெண்குமாளியுமுளவுங்கூர்ங்கோட்
டேனமுந்திரியுங்காட்டுளெந்தைநீதுணையுமின்றிக்
கூனல்விற்றடக்கைவேடர்குலமெனவிருப்பதென்னே
யூணுணவுனக்கியாவருண்கெனத்தருவாரந்தோ. (௯௮)

தேனொடுதினையின்பிண்டிதீம்பழங்காய்கிழங்கு
மானொடுமுயலெய்கேழல்வல்லுடும்பழுங்கிவற்றி
னூணுணவென்றிவ்வெல்லாமுதவுவல்யானேநல்ல
கானவர்துணையுண்டெம்மூர்க்காண்டிவாவென்றுநின்றான். ()

சாமிநீதனியேயீண்டுத்தங்குதறரித்தலாற்றே
னேமகல்லுடுப்பூர்க்கின்னேயென்னொடுவருதல்வேண்டும்
நீமனமிரங்காயெந்தாயெனப்பலநிகழ்த்தினானக்
கார்மழையனையானற்புக்கடலினுக்கெல்லையுண்டோ. (௧௦௦)

மறுமொழியிறைவனொன்றும்வழங்கலனிருப்பமீளி
யிறைதிருவுளத்தினெண்ணமிவ்வயினிருத்தல்போலுஞ்
சிறியனேனினியித்தெய்வசிகாமணிதன்னைநீங்கி
லுறுவனோவுயிரினோடென்றுரைத்தனனின்றானங்கே. (௧௦௧)

அண்ணறன்முடியிற்றாய்நீராட்டுபுமுருகுவிம்மூத்
தண்ணுறுமலர்மாலாரத்தளிர்சூட்டியிருத்தல்காணூஉப்
பண்ணவன்றனக்கீதேற்றபணியெனத்தேறியுள்ள
மண்ணெழுவனையதோளான்மற்றதுகடைப்பிடித்தான். (௧௦௨)

பின்புவேட்டுவர்தங்கோமான்பெரும்பகலாயிற்றன்றோ
வென்பெருந்துணையாய்நின்றவிறைவனூர்மிகப்பசித்தா
ரின்சுவையூன்கொணர்ந்திங்கிடல்வேண்டுமென்னநீங்கிற்
றொன்சினவிலங்கினீட்டங்குறுகியென்செயுமோகெட்டேன். ()

என்றுசாலவுமிரங்கியெரிபசிமிகாதமுன்னஞ்
சென்றொருகணத்துட்கொண்டுதிரும்புவலெனத்துணிந்து
குன்றிடையெனக்குவாய்த்தகுலமணிவிளக்கேயெந்தா
யுன்றழற்பசிதணிப்பவுறுசுவையிறைச்சிகோண்டே. (௧௦௪)

உழுந்துருள்பொழுதின்மீள்வேனொருகணமேனுந்தாழேன்
வழங்குறுகொடுவிலங்குவருமெனவஞ்சேலைய
வெழுந்துமேல்வந்ததாயினென்னைஓயாய்யெனக்கூவென்று
குழைந்தவிற்றடக்கைகூப்பிக்குறவர்கோனரிதினீங்கி. (௧௦௫)

கடிக்கடிமனையுணின்றகன்றகல்புனிற்றாப்போல
வடிக்கடிதிரும்பிநின்றேயையர்தந்தனிமைக்கேங்கி
வடிக்கடியம்புபட்டுமழைமுகிலெனக்கிடக்குங்
கொடிக்கடிவேட்டைக்கானங்கிளர்கடுங்காலிற்சென்றான். (௧௦௬)

கொழுந்தசைமோழலொன்றுகுறவர்கோன்றனேயேந்தி
முழங்கலையெறியுநன்னீர்முகரியின்றீரஞ்சார்ந்தோர்
செழுந்தருநிழலின்வைத்துத்தீயரணியினாலாக்கி
யெழுந்துறுமயிர்கடிந்தவ்வெறழியையவாளினீர்ந்தான். (௧௦௭)

ஈர்ந்துசெந்தசையுட்சாலவின்சுவையுடையவெல்லாந்
தேர்ந்துவேறெடுத்தெடுத்துத்தேக்கிலையதனுட்பெய்து
கூர்ந்தவாயம்பிற்கோத்துக்கொந்தழல்பதத்திற்காய்ச்சி
யார்ந்தபேரன்பன்வாய்ப்பெய்தருஞ்சுவைபார்க்கலுற்றான். ()

பல்லினான்மெல்லமெல்லப்பன்முறையதுக்கிப்பார்த்து
நல்லனவிறைச்சியெல்லாங்கலையிறேக்கிலையிற்றைத்த
கல்லையுள்வாங்கிவைத்துக்கழிசுவையிலாதவெல்லாம்
வல்லைவெள்ளிடையுமிழ்ந்தான்வருபவக்கடலுமிழ்ந்தான். ()

பூந்தளிரோடுகொய்தபுதுமலர்தலையிற்பெய்து
தாந்திரவிதியின்றூட்டுந்தண்புனல்வாய்முகந்து
தீந்தசையமுதுபெய்ததேக்கிலைத்தளிகையோர்கை [ன்.
யேந்தியம்பொடுவில்லோர்கையெடுத்துவல்விரைவிற்போந்தா

என்னுருயிர்க்குத்துணையாவாளொரிவெம்பசியாலிளைத்தாரோ
வென்றேகொடியவிலங்கினத்தாலச்சுற்றாரோவெனப்பதைத்துத்
தன்னுதாவிற்பார்ப்பருந்தத்தாழாதோடும்பறவையென
முன்னுமனமும்பின்னாகமுதல்வன்றன்பாலோடினான். (௧௧௧)

சென்றுகுறுகியெம்பெருமான்றீயோன்வரவுதாழ்த்தலினாற்
கன்றுபசியால்வருந்தினையேயென்றுகரைந்துதிருமுடிமேற்
றன்றுதளிருஞ்செழுமபோதுந்தொடுதோலடியான்மாற்றிவா
யொன்றுநீராற்பிரானுடலோடுளங்குளிரவாட்டினான். (௧௧௨)

ஆட்டித்தலையிலிருந்தகம்ழலருந்தளிருமெடுத்திறைஞ்சிச் [த
சூட்டித்திருமுன்னிலைக்கலத்திற்றூயவிறைச்சிப்போனகம்வை
தீட்டற்கரியபெரும்பொருளேயெந்தாயுண்கென்றினியசொலி
யூட்டிப்பிரியாதருகுநின்றானுவகைக்கடற்குக்கரைகாணான். ( )

காலமங்கதில்வேடர்தந்தலைவனைக்காணார்
சாலவச்சுறீஇக்காடெலாந்தேடியத்தடங்கோட்
டாலமூலத்தினிருந்தருளண்ணறன்னருகு
நீலமால்வரைநின்றெனநிற்பவற்கண்டார். (௧௧௪)

அருகுசென்றடைந்தையநீயெங்களையகன்றிப்
பெரியமால்வரையடைந்ததென்பிழைத்தனங்கொல்லோ
பரிதிவானவனண்பகல்கடந்தனன்பசித்தாய்
முருகவிவ்வுழிநிற்பதென்வருகெனமொழிந்தார். (௧௧௫)

கரைந்தசொற்கெலாமெதிர்மொழிகொடாமையிற்கவன்று
பெருந்தகாயுனக்கெங்கண்மேன்முனிவென்கொல்பேசாய்
வருந்திநீயிவண்வந்தமையறிந்திலம்வள்ளா
லிரங்குவார்கழனின்னடியறியவென்றிசைத்தார். (௧௧௬)

மற்றதற்குமொன்றுரைத்திலனிற்பவம்மறவர்
கொற்றவில்லுடைக்குரிசினீயுளத்திலென்கொண்டாய்
சற்றுமெம்மிடத்தன்பிலையாயினைதலைவ
குற்றமெவ்வயிற்கண்டதுண்டேற்பிறகூறாய். (௧௧௭)

என்றுபற்பலதிறத்தினாலுரைக்கவுமிளையோ
னொன்றும்வாய்திறந்தானலனோவியம்போலக்
குணறவில்லியைநோக்கிநின்றானவர்குறித்து
மன்றவெஞ்சினமன்றிதுவெனவெனமருண்டார். (௧௧௮)

இங்குநின்றவிதெய்வதமிவணிடத்தேறித
தங்கிநின்றதோவெனகொலோவறிகிலந்தமியே
மஙகுநமமொடுவருபவனலனிவனந்தோ
நவகடொல்குலததலைவனாகற்கென்னுரைப்போம் (௧௧௯)

தத்தையாகியதத்தையந்தேமொழிதனையன்
மதயானைபோலென்மகனெங்கெனின்மறுசொ
லெத்திறத்தினாற்சொல்லுதுமெனப்பலவிரங்கி
யெய்ததுநின்றனாவசிககவோருபாயமுமில்லார். (௧௨௦)

குழைகருநோன்சிலைநாகனோடிசமெயல்கூறி
யழைத்துவநதனமெனிலவனெத்திறததானும்
பிழைக்குமாறியற்றுவனெனத்துணிந்தனர்பெயர்ந்தார்
தழைத்தலைப்புலானாறும்வாய்ச்செய்யகட்சவரா (௧௨௧)

இதுமுதல்(உ)செய்யுள்இரவுக்குறி.

அன்னகாலையிலாயிரங்கதிர்ச்சுடரரசன்
மன்னுதிண்ணனன்பப்புறத்துலகெலாம்வழங்கப்
பன்னுவேமெனப்போதல்போற்குடதிசைப்பராரைச
செனனிவான்றொடுமலைமறைந்தானிருள்செறிய. (௧௨௨)

அரவுமிழ்ந்தசெம்மணிக்கணமிமைத்தலினலரி
யிரைதிரைக்கடன்மூழ்கியுங்கங்குலங்கில்லை
யிருள்கெடச்சுடர்விரிதருவிலைவரம்பில்லா
வுருவமாமணிபலவுளவிடத்திரவுணடோ. (௧௨௩)

அண்ணலைக்கொடுவிலங்கினங்குறுகுதலஞ்சி
வெண்ணுதிக்கணைதொடுத்தகூன்வில்லொடுமறந்தும்
கண்ணிமைத்திலனாகியேவைகறைகாறு
மண்ணெழுப்புரைதோளனின்றானிறைமருங்கு. (௧௨௪)

அன்பரன்பினுக்ககப்படுபேரருளாழிக்
கின்பமூன்றிருவமுதமாக்கியவுளதெண்ணி
வன்பெருஞ்சிலைத்தடக்கையான்வைகறைப்போது
பொன்பரந்தொளிர்மால்வரைச்சாரலிற்போந்தான, (௧௨௫)

## சூரியனுதித்தல்.

வீட்டவாவுடையார்க்கருடருமொருவிமல
னட்டமாகியதான்கொளபுண்ணூற்றிடுநம்பி
மேவட்டமாடுதல்காணியவிரும்பிவந்தென்னக்
கோட்டவார்திரைக்கடலெழுந்தான்சுடர்க்கோமான் (௧௨௬)

இதுமுதல்(௫)செய்யுள்சிவகோசாரியார்மகிமைகூறல்.

பொங்குவெஞ்சினப்புண்கமழ்வாளுகிர்ச
சிங்கமன்னனசெயனிற்கமற்றினிக
கங்கைவாரசடைக்கண்ணுதருண்முத
றங்குநெஞ்சத்தவன்செயல்சாற்றுவாம். (௧௨௭)

அருளுமானுப்பொறையுமறிவொடு
தெருளுநோனபுஞ்சிவனிடத்தன்பினோ
டிருளிற்றீரவாவின்மைபுங்கல்வியு
மருளின்மெய்ம்மையுமாணுருவாயினான். (௧௨௮)

வெறுப்பில்சந்தனமெய்யெலாம்பூசினின்
றிறப்பவின்பமியற்றுநர்தங்களுங்
கறுதமெழுந்தெதிராயழற்பெயதுதன்
புறுத்துவார்களுமொதவுளத்தினன். (௧௨௯)

நீடுமகார்க்குழனீளறிவாள்விழி
வாடுஞ்சிற்றிடைமாதர்கள்புல்லினு
நாடுந்தன்னுளந்தாயெனநணணுவா
னோடும்பொன்னுமொருங்காநோக்குவான். (௧௩௦)

ஈசனார்தம்மிணையடித்தாமரைப்
பூசைசெய்தொழிலாப்பூண்டுசெய்திடு
மாசைமேல்கொண்டருமனத்தான்சிவ
கோசனென்னுங்குணப்பெருங்குன்றனான். (௧௩௧)

இதுமுதல்(௨)செய்யுள்சிவகோசாரியார்பூசைக்குச்செல்லல்,

இரவிவந்தெழுமுன்னமெழுந்துபோய்
முரிதிரைப்புனன்மூழ்கிவிதிமுறை
வினைசெய்போதொடுமென்புனலுங்கொடு
புரிசடைப்பிராற்பூசிப்பமெய்தினான். (௧௩௨)

தலைமிசைத்திருமஞ்சனந்தாங்குபு
மலர்பெய்கூடையுமேந்துபுவலக்கினை
விலகுமணணறனைஞுமமவிளமபுபு
புலவனையன்றிருமுனபுபோயினான். (௧௯௩)

இதுமுதல்(௩)செய்யுள்சிவபெருமானுக்குமுன்சிந்தியவைக
ளைக்கண்டுசிவகோசாரியாரமனநொந்துவருந்துதல்.

தேன்குலதொடுசெவ்வழிவண்டுளர்
கான்கடுக்கையங்கண்ணியன்முன்பெலா
மூன்கிடத்தல்கண்டுளநடுங்கியே
தான்குறித்தயலோடினன்றாழ்விலான். (௧௯௪)

மேவார்வந்தடிபணியும்விண்ணோர்கண்முடிமணிக
ளோவாதுகிடந்தொளிருமுடையபிரான்றிருமுன்ன
ராவாவிக்கொடும்பாவமார்செய்தாரிதுசெய்யத
தேவாதிதேவனார்திருவுள்ளமிசைந்தாரோ. (௧௯௫)

கொல்லாமையறியாமைக்குணமாகக்கொண்டொழுகும்
பொல்லாதசிலைவேடப்புலைஞரோயிதுசெய்வா
ரொல்லாதசெயலிதையன்புடையோர்கள்கண்டக்கா
னில்லாமலிறந்திடுவர்நிற்கின்றேன்கொடுவினையேன். (௧௯௬)

இதுமுதல்(௪)செய்யுள்ஆலயத்தைக்கோமயத்தால்சுத்தி
செய்துபூசைமுடித்தல்.

என்றுபலபலகூறியிணையிலானழுதிரங்கிக்
கன்றுமிடற்றிறைபூசாகாலமிகத்தாழ்க்கநா
னின்றதனாற்பயனென்னேயெனநினைந்துபுலவெல்லாந்
துன்றுமலகாலகலத்துடைத்தாப்பிரோதெளித்தான். (௧௯௭)

பின்னரடைந்தலைபுரட்டும்பெருந்தீர்த்தம்படிந்தாடிச்
சொன்னமறைமந்திரத்தாற்றூய்தன்மைகடிந்ததற்பின்
மன்னுமுருத்திரசமகநமகத்தால்வானவர்கோன்
சென்னிமிசைப்புனலாட்டித்திருமலர்கொண்டருச்சித்தான். ()

முன்னர்நின்றுகைதலைமேன்முகிழ்த்திருகண்ணீர்பாயத்
துன்னியமெய்ம்மயிர்பொடிப்பச்சுடுதழல்வாய்ப்பட்டவரக்
கென்னமனநனியுருகியிளகமிகநாத்தழும்ப
மன்னுமனனெடுசோமமறைக்கீதம்பாடினான். (௧௯௯)

பற்பலகால்வலஞ்செய்துபணிந்தரிதுநீங்கிப்போய்ச்
சிற்பரனடிமறவாச்சிந்தையன்றன்னிடத்தடைந்தான்
முற்பகலவேடர்கணோற்றமுழுதுணபாலவதரித்த
விறபுகொர்மழையனனவிடலைசெயல்விளம்புவாம். (௧௪௰)

இதுமுதல்(௨)செய்யுள்திண்ணனார்வேட்டையாடிச்
சிவபெருமானைமுன்போற்பூசித்ததுநீங்காதுநின்றமை.

எழுவினங்கவற்றதோளானேறுகாற்பன்றிசெல்லும்
வழியறிந்தொளிநின்றெய்துமான்றுயிலிடனறிந்து
குழைநெடுஞ்சிலையிற்பூட்டுகோலுடலுருவவெய்து
முழுவலன்புடையானமுன்போலுறுசுவையமுதமைத்தான்.

பின்புகோற்றேனிரம்பப்பெய்துகொண்டிறைபசிக்கு
மென்பதாற்றான்றொடுத்தவேவெனவிரைவினோடி
முன்புபோற்பூசைமுற்றிமுனிவிலின்னமுதருத்தி
பன்பினாற்கடலினன்னானருகுநீங்காதுநின்றான். (௧௪௨)

திண்ணனார்செய்தியைநாகனுந்தந்தையுந்தெரிந்துவசப்படுத்
தற்குமுடியாதுநீங்கினமை.

அந்தவேலையில்வில்லோராலருமபெறற்புதல்வன்செய்தி
தந்தையுந்தாயுங்கேட்டுத்தணிப்பருங்கலுழ்ச்சிகொண்டு
வந்துபற்பலதிறத்தால்வசிப்பவுமவசமாகானைச்
சிந்தைநொந்தினியென்னென்றுசென்றனாமகனிற்றீர்ந்தே.

திண்ணனார்தாய்தந்தையர்வந்தமையறியாதுசிவபெருமா
னிடத்தில்அன்புசெலுத்தியிருந்தமை.

அன்னவரடைந்தவாறுமகன்றதுமறியாதண்ண
றன்னொடுபிணித்தநெஞ்சிற்சவரர்கோன்பகற்போதெல்லாங்
கொன்னவில்விலங்கினீட்டங்கொன்றிறைக்கமுதருத்தித்
துன்னிருட்காலந்துஞ்சான்றொண்டுசெய்தொழுகாநிற்ப ()

சிவகோசாரியார்முன்போலூனைக்கண்டஞ்சிசுத்திசெய்து
பூசித்துத்துன்பத்திலாழ்ந்தமை

வழுவறுமுனியும்வந்துவைகலுந்திருமுனூன்கண்
டழுதழுதிரங்கியேங்கியகற்றுபுபுனிதஞ்செய்து
பழுதிடையவற்பூசித்துமனந்துயர்க்கடலினாழ்த்தி
யொழுகிடமற்றவன்பாலுறுதுயரொழித்தல்வேண்டி. (௧௪௫)

இதுமுதல்(அ)செய்யுள்சிவபெருமான்ஐந்தாநாளிரவில்
சிவகோசாரியார்க்குத்திண்ணனார்பெருமைகூறல.

கங்குலைந்தாவதன்கண்கனவிடைத்திருக்காளத்திச்
சங்கரனவந்துசொல்லுந்தவத்துறைபயின்றமேலோ
யிங்குநீநம்முன்கண்டவிறைச்சியென்றினையல்வாழி
யங்கதுநாமருந்துமரும்பெறலமுதங்கண்டாய். (கசகூ)

அதுநமக்கிடுவோன்செய்தியறைகுதுமம்மதெய்வ
நதிபலபடிந்துநோற்றநவையிலறங்களசெய்தும்
விதிபுறங்கண்டுபெற்றமெல்லெழின்மகன்மேற்றாய்க்குப்
புதியவன்பெனைத்தனைத்தப்புண்ணியற்கென்மேலன்பு. (கசஎ)

மற்றவன்செருப்புக்காலான்மணங்கமழ்நமதுசென்னி
யுற்றபூமாற்றுங்காலத்துடம்பெலாமயிர்பொடிப்பச
சிற்றிளமகன்பூங்கையாற்றிருமுலைவருடப்பெற்ற
பெற்றதாயென்னநெஞ்சமபெரிதுருகுமாலன்ப. (கசஅ)

ஐந்தடர்முனிவநம்மேலவனுமிழ்கின்றதியாற்றுட்
டந்தநீராயினன்றேதாழ்சடைமுனிவராட்டு
நந்துமந்திரநன்னீரினனியினிதெனலாமுண்ணின்
றுந்திமேலெழுந்துபொங்கியொழுகியபேரன்பாமால். (கசகூ

வெள்ளுகிருழுவைநோன்றாண்மாதவக்கிழவன்முன்னோ
ரொள்ளியவாழ்த்துநாமமோராயிரமுரைத்துச்சாத்தும
கள்ளவிழ்மலரினன்னான்கழுத்துறவலைந்துசூட்டு
மென்றாறுமயிர்கள்சூழ்ந்தவீர்ம்மலரெமக்குநல்ல. (கருO)

இந்திரன்முதலோர்செம்பொனெரிமணிக்கலத்திலேந்து
மந்தரவரையினாழிமதித்தவாரமுதமெல்லா
முந்துதன்வாய்ப்பெய்தாய்ந்தமுழுச்சுவைச்சூட்டிறைச்சி
வெந்திறற்றந்தபின்னர்வேம்பொடுகவுமான. (கருக)

ஏசுதலிலாவறத்தோயெமக்கவனெம்முனின்று
மாசில்பேரன்பினோடுவாய்திறந்துரைக்குஞ்சொற்போ
லாசகலறிவின்மிக்கவைம்புலப்பகைவர்பாடுங்
காசறுசாமவேதகானமுமினியதன்றே. (கருஉ)

அவன்மனநமக்குக்கோயிலவனுரைபலவுமோத்தா
மவன்முயற்றொழில்களெல்லாமறத்தொழிலையமில்லை
யவனியிற்காட்டுகின்றுமன்பனீநாளையேவந்
தவனறியாதவண்ணமயலொளித்திருத்தியென்றான். (கருங)

இது முதல்(௧௧)செய்யுள் ஆறுநாள் சிவபூசையின் கதை.

இன்னணபலவுங்கூறி யினித்துயரொழிதியென்று
பொன்னிறம்பழுத்தகொன்றைப் புதுநறுங்கண்ணிவேய்ந்த
சென்னியந்தணன்மறைந்தான் சிவகோசமுனியெழுந்து
முன்னவன்கருணையாற்சொன் மொழிநினைந்ததிசயித்தே. ()

ஞாயிறுகுணதுகுன்றநண்ணுதன் முன்னமேபோய்ப்
பாயலைமுகரிநன்னீர்ப் படிந்துநித்தியமரப்பி
யாயிரம்பெயரினான்றனருச்சனை முடித்துமற்றத்
தூயநல்லிலிங்கத்தின்பின் றோன்றிடாதொளித்திருந்தான். ()

முனிவருமுன்னம்வேட்ட முன்னுபுசென்றவென்றிக்
குனிசிலைமறவர்த்தாங்குங் கோமகன்வேட்டமாடிப்
புனிதனுக்கமுதங்கொண்டு பொருகெனமீண்டானங்கட்
பனிதருதுன்பங்காட்டுமயற் பலநிமித்தங்கண்டான். (௧௫௬)

வழியிடைநிமித்தமென்ன மற்றியான்கண்டவெல்லாம்
பழிபடுநிமித்தமென்னைப் பாங்குஞ்சோர்குருதிகாட்டும்
கழிசுவையமுதமுதங் கண்மணியுயிரெனக்கா
மழகனெம்பெருமானென்னுற் றனன்கொலோவறிதறேற்றேன்.

எனமனங்கலங்கியொய்யென் றெறுழ்வலிக்காளைசெல்லச்
சினவிடைவலனுயர்த்த செக்கரீர்ஞ்சடைநுதற்கட்
புனிதன்மற்றவனன்பெல்லாம் புண்ணியமுனிக்குக்காட்ட
நினைபுதன்வலக்கண்செம்புண் ணீருறநின்றான்கண்டான். ()

காண்டலும்வாய்நீர்சிந்தக் கையிலூன்சிதறவம்புங்
கோண்டருசிலையும்வீழக் குஞ்சிப்பூவிறையவாட்ட
நாண்டொடரற்றகாலை நாடகப்பாவைபோலத்
தூண்டருதடந்தோட்காளை துண்ணெனநிலத்துவீழ்ந்தான். ()

நெடும்பொழுதுள்ளுயிர்ப்புநின் றுயிருலந்தாரென்னக்
கிடந்துபின்னையாறெய்தக் கெடுநினைவடைந்தெழுந்தே
யொடுங்கலிறுயரானெஞ்ச முண்ணப்பட்டுருமேறுண்ட
மடங்கலேறென்னநம்பி வாய்விட்டான்கண்ணீர்வார. (௧௬௰)

முழுவலித்தடக்கையாற்றன் முகமெலாங்குருதிபொங்கி
யொழுகியவடித்துக்கொண்டா னுறுகண்ணீரவெள்ளம்போர்த்த
வெழில்கனிமார்பும்வீங்க வெற்றினான்றலைவிளக்கக்
கழிதுயர்க்கடலினாழ்ந்தான் கல்லோடுமோதினானால். (௧௬௧)

இன்னணமுகமைவெள்ளத்திடையவனுலாவும்வேலை
முன்னவன்பின்னுமன்னோன்முதிர்ந்தபேரன்புகாட்டச்
செந்நிறக்குருதிமற்றைத்திருவிழியிலுஞ்சோரவித்தா
னன்னதுமைந்தனார்வவாகலிகுடித்ததன்றே. (கஎ௦)

எரிகிரியத்துணின்றுமேறுபுதுறக்கம்புக்கா
னொருவன்மற்றதனுட்பின்னுமவீழ்ந்தெனவுவகைமாறிக்
கரையிலாத்துன்பவெள்ளக்கடலினுளழுந்தியேங்கி
வரைபுரைதோளான்பின்னுமருந்துடைமையிறநெளிந்தான். ()

இன்னுமோர்கண்ணெனக்குண்டாதலினிதற்கஞ்சேனென்
றன்னதுகளைந்தகாலையயாகண்ணறிதற்காகத்
தன்னொருசெருப்புக்காலைத்தம்பிரான்கண்ணிலூன்றிப்
பின்னம்பகணைகண்வைத்தானபிரானதுபொருக்கலாற்றான். ()

திண்ணனார்க்குக்கண்ணப்பனென்னுநாமகரணம்பெற்றமை.

மறைமொழிபிறந்ததம்வாய்மலர்திறந்தருட்பேராழி
யிறைவர்கண்ணப்பநிற்கவென்னுநாமொழிந்துகொண்டே
கறையணற்கங்கணத்தகையினாற்பிடித்தாசெங்கை
யுறுநறைப்பொலம்பூமாரியும்பாமண்புதையப்பெய்தார். (கஎரு)

கண்ணப்பனையனாசிவபெருமானைவணங்கசிவகோசாரியா
ருமவணங்கினமை.

குன்றவர்பெருமான்கையிற்கூர்ங்கணைவிட்டெறிந்து
கன்றிளமடமானேந்துங்கணனுதலடிப்பூங்கஞ்சந
தன்றலைமிசைபுனைந்தானசைவவைதிகனிறுமபூ
தொன்றியவுளத்தனாகியொருதனிமுதல்வைறருழ்ந்தான். (கஎ௪)

சிவபெருமான்அவ்விருவரையுந்திருவுருவிற்
கலந்துகொணடமை

மைதிகழ்மணிமிடற்றுவார்சடையெம்பிரானக்
கைதவமிலாமிக்ககருணைபங்கண்ணனேகி
மெய்த்தழனவெணின்றுவிரிவறமனமொடுக்கிச்
செய்தவர்தமக்குங்கிட்டாத்திருவுருக்கலந்துகொண்டான் ()

நூலாசிரியர்.

அற்றைநாண்முதலாவையமண்ணல்கண்ணப்பனென்று
சொற்றதேபெயராச்சொல்லுஞ்சுடர்மதிக்காந்தம்வேடர்
சிற்றிடைநலார்முகத்தைத்திங்களெனவெருழக்குந்தெண்ணீ
ருற்றருவிகளாய்த்தாழுமுயர்மலைகாவலற்கே. (கஎசு)

ஏன்னத்திங்கள்வேணிமறைத்தவிறைவான்றேய்
சென்னிக்குணறுவாழ்நர்களசோமான்செயல்கூற
மன்னுட்களிகொண்டையவடித்தாமலாசூடிப்
பணைறகினியதோரகதையினுமபகர்கென்றுன். (௧௭௭)

தீதறவுணாத்தனருசிலைவல்கண்ணப்பன்
காதைநகக்ரனர்கதைவிளம்புதும்
யாதவமனையாந்தினிதுகேளென
மாதவவடிவருள்வள்ளல்கூறுவான். (௧௭அ)

கண்ணப்பச்சருக்க முற்றிற்று.
ஆகதிருவிருத்தம்-௯௫௫.

# நக்கீரச்சருக்கம்.



இது முதல்(உ0) செய்யுள் பாண்டிநாட்டுச்சிறப்பு.

அமுதுறழ்தமிழொண்முத்தமைமசந்தனமெல்வாசங்
கமழ்தளிர்தென்றலென்றுகளையருமபொருள்படாம [த்
விமிழ்கடல்வைப்பெலாந்தோணதெண்பொருள்படுநாடெள்ளி
தமிழ்முதல்பிறக்குநாடாய்த்தயங்குமாற்பாண்டிநாடு. (௧)

மலை

தன்கால்சுமக்குமுறுப்பிலான்றனேவலராணிலைகலங்கிப்
பொன்காறிதலைமுலைமடவார்ப்பொருத்துதுணையாமாநிலத்து
வன்காறரியாதுழல்வானைதலையாற்சுமக்குமலையைநகு
மின்கார்மழைதோய்முடிமலயவிலங்கலுடைத்தத்திருநாடு.

(இ-ள்) தன்காலினுற்சுமக்கப்பட்ட அனங்கனுகிய மன்மதனது-பாணமாகியமலாகளாற்றமதுநிலைகலங்கியசுந்தரமூர்த்திநாயனை - பொன்னொளியைவீசுகின்றதேமல்படர்ந்ததனங்களையுடைய பரவைநாச்சியார் சங்கிலிநாச்சியாரொன்னு மிருவரிடத்தும்-சேர்க்குந்தூதாக-பெரியபூமியின்கண்வலியகால்தங்காமலுழன்றவராகியசிவபெருமானை - முடியினுற்சுமக்கின்றகைலைமலையைப்பழிக்கும்-மின்னலையுடையகரியமேகங்கள்புடிகின்றசிகரத்தையுடையபொதியமலையைஅப்பாண்டிநாடுடையது-எ-று. (உ)

நதி.

வானோர்முதஞ்சாபத்தான்மண்ணிற்புனலாயொழுகியது
தானோநிலத்தினியல்பாற்றன்றன்மைதிரியாவரயபெற்ற
மானீரோமற்றிதுவென்னமதுரங்குடிகொண்டெஞ்ஞான்று
மானுதொழுகும்பொருநையாற்றரசுமுடைத்தத்திருநாடு. (௩)

குறிஞ்சிநிலச்சிறப்பு.

கறங்குபன்மணியருவிகையததுளியொடுகலந்து
நிறங்கொண்மாமணிசேணிடைச்சிதறிடநெடுங்கைப்
பிறங்குவெண்பிறைகளேகோட்டியானைகண்மதப்பெருநீ
ரிறங்குமாமுகத்தேதற்பனகுறிஞ்சியினிடங்கள். (௪)

இதுமுதல் (௩) செய்யுள் முல்லைநிலச்சிறப்பு.

கொன்றைபூத்ததுழைதன்னிடங்கொண்டுகூர்ங்கோட்டு
வென்றியேறுபெற்றண்டைத்தாங்குபுவியா
தென்றும்யாறுதன்றலைக்கொடுமுககணைம்மிறைபோற்
றுன்றுபல்பசுச்சேரிடமாய்முல்லைதோன்றும். (௫)

குழலினோசையுந்தயிர்கடையொலியுங்கொல்லேறு
தழுவுமாரப்புமணிமாமணியரவமுந்தண்ணென்
செழுமலர்கொன்றைபடுசுரும்பிசையுமவெஞ்சினத்த
மழவிடைக்குலம்வாய்விடுமுழக்கமுமாரு. (௬)

போர்விடைக்குலமுயர்ந்தெழுபுற்றுமண்சிதறக்
கூர்மருப்பினாற்குத்துபுதுகளேழக்குளம்பா
லாழறசினததொடுநிலநதொட்டிமிலசைய
ழரிவாய்விடுமுழக்கம்விண்ணேற்றொடுமுரணும். (௭)

இதுமுதல் (௫) செய்யுள் மருதநிலச்சிறப்பு.

தாமரைகுவளையாம்பல்சங்குசைவலமீனன்ன
மாமைவண்டாமனைபகன்றல்கமுகமென்றவைநிறைந்து
காமருமருதமாதாகவினுறப்பமைப்போனவ்வத்
தோமினமாதிரிகையெல்லாந்தொகுத்தோரிடத்தையொக்கும்.

அன்னமங்கலாரணிநடைகற்கவேட்டனையர்
பின்னுமுன்றுழன்றடிசிவந்தும்பெருமையினான்
மன்னுமெய்விளர்ததுபெறவனத்தினுட்பதும
மென்னுமாதனத்திடையிருந்திருந்தவமியற்றும். (௯)

கழனியுட்புகுந்துறுவலிப்பகட்டினேர்கடவி
யுழுநரோதையால்வெரீஇயெழுந்தும்பரிற்பறக்கு
மழகின்மென்சிறையோதிமத்தணிசிறையடித்த
லொழுகுவான்கங்கைவெண்டிரையெறிந்திடலொக்கும். (௧௦)

சேல்களுண்டகடார்த்தியமென்சிறைச்செய்ய
காலவோதிமஞ்சிறுதிரையசைக்குமென்கமலக்
கோலநாண்மலர்ச்சேக்கையிற்பெடைதழீஇக்கொண்டு
சாலும்வண்டிசைகேட்டுறங்குவமலர்த்தடங்கள். (௧௧)

மாமலர்க்கணையோன்சிலையாயுயிர்வருத்து
தீமையின்பயனுறலெனமள்ளரறசெய்ய
காமர்தீங்கருமபாலையாடப்பங்கவ்வை
தாமயற்கணெற்போர்கடாவிடுமொலிதாழ்க்கும். (௧௨)

யாமுழத்தியர்காற்கிணையாயிழிபெய்தத்
தாமுலைததடமிடறவெருங்கிகாததுயர்தருசுகுச்
சாமுருக்குதுமெனத்தெங்கினகாய்விழததாகஙிக்
காமாநாகிளய்கழுகொடிப்பனவராற்கணங்கள். (௧௩)

வரைகளொப்பனபோரொழுக்கியபுரிவளாயி
னருவியொப்பனசுற்றுபாகம்புனைநயனைசூழ்
கருமுகிற்குலமொப்பனதீங்கழைகருமபின
றிளைவற்றினைச்சூழ்ந்தகாடொப்பனசெறிந்து. (௧௪)

நிரந்தமஞ்சள்கள்வாழையின்குலைதொடுநெடிய
வரம்பைபாளைவாய்கமுகெழிற்குலையினையடுக்கு
முரிஞ்சுமற்றவைசெய்ஞ்ஞெறகுலையையவ்வுயாநத
குருமலைபநெட்டிலைததாழைதலைகுழுகிற்குலத்தை. (௧௫)

கருந்திண்கோட்டனகுவிமுலைசசெய்யகட்காரா
னிருந்தண்பன்மலரிலஞ்சிபுண்பேய்ததிடுமிளைஞர்
பெருந்தண்மாம்பழமெறிகருடபின்குணில்பிறங்கு
சுருப்புணடாமனாததடததுவிழ்ந்தனக்குழாந்துரக்கும். (௧௬)

நெய்தனிலச்சிறப்பு.

குளிர்கொண்முத்தொடுமுகையிறசெய்சிற்றிலிற்குழிசி
வளையுமிப்பியுங்கொண்டனத்தாவிமேல்வயங்கு
மொளிகொள்செந்துகிர்ப்பாவையையிருத்திமற்றுள்ளங்
களிகொள்பேதையராடுவபுன்னையங்கானல். (௧௭)

இதுமுதல்(௩)செய்யுளதிணைமயக்கம்.

ஒழுகுதீம்புனற்கொழுங்கயலொடுவரால்கொடுத்துக்
கழியுநுண்ணிடைக்கொடிச்சியர்கொடிச்சியர்கையிற்
பழுதிலின்சுவைக்குறிஞ்சித்தேன்சுடர்கெழுபசும்பொற்
குழைகடந்தகட்கடைச்சியர்கடைச்சியர்கொள்வார். (௧௮)

முருங்கெயிற்றியரெயிற்றியர்கருங்குழன்முல்லை
யரும்புவிழ்ந்தபூமுடிப்பர்களணிமுலைபாகும்
பெருங்குடத்தியர்குடத்தியர்பிறங்குகோங்கரும்பு
விரிந்தபூவினுட்பொற்றுகள்பூசுவர்மெய்யில். (௧௯)

கொம்பரொத்தசிற்றிடையுழத்தியர்கள்கட்கொண்டு
பம்பரத்தியலாடவர்மனம்படப்பரந்த
சம்பரத்தியமுலைப்பரத்தியர்தளர்மருங்கு
லம்பரத்தியர்பரத்தியர்விலைமுத்தமளப்பார். (௨௰)

இதுமுதல் (௭)செய்யுள்மதுரைமாநகரின்சிறப்பு.

இன்னதன்மையவளங்கெழுபாண்டிநாடென்னு
மன்னமன்னவடிருமுகமண்டலமாகி
மன்னும்விண்ணவர்பொன்னகரத்தினைமறக்கும்
பொன்னினன்மணிமாமதின்மதுரையம்புரமே. (௨௧)

தேடிநான்முகன்செங்கண்மால்காண்கிலான்றிங்கள்
சூடினனடியார்மனத்தான்மறைத்தொகுதி
பாடினனருளாலறுபத்துநாலாட
லாடினனதிலெனினதன்பெருமையாரறைவார். (௨௨)

வைகைநதியும்-கிருதமாலைநதியும்.

மொய்வம்பார்மலர்மிகநனிபோர்த்திசைமுழுதுஞ்
செய்வண்டார்த்திடவொழுகுறும்வைகைவிண்செல்லு
மைவந்தாடொளிர்மணிசெய்பொன்மாடமாமதுரை
தெய்வஞ்சாத்தியபன்மலர்மாலையிற்றிகழும். (௨௩)

நிலைபெயர்ந்தயல்செல்கலாத்தாரகைநிரையி
னிலகிவம்பல்ரிவையியங்காவகையென்னென்
றலகில்விம்மிதமுறச்செயுமந்தரத்தகடு
தலையுரிஞ்சுயர்கோபுரத்துறுசுடர்ச்சாலம். (௨௪)

அங்கண்மாடத்தின்மேற்பயின்மடந்தையரனம்வான்
கங்கையங்கமலத்திரள்வளையவூண்கருதிப்
பொங்குமாசையிற்புகவதிலுறுமனமிலைக
டங்கடொல்குலமன்மையிற்றனித்தனியிரியும். (௨௫)

மெலிநுசுப்பினர்களிமயின்மாடத்தின்மேற்றந்
நலிபகைப்பெரும்பாம்புகள்வைகலுநடுங்க
வுலவலாலிருசுடர்களுநனியுளமுவந்து
மலிபொன்மாடத்திற்றமகதிர்வேறுருவழங்கும். (௨௬)

விண்டொடர்ந்தவேரங்கடம்மேற்புறத்தாடும்
பண்டருங்குதலைப்பசுங்கிளிகடம்பணைததோட்
டொண்டைவாயினர்விழைதலிற்பிடித்திடத்தொடரும்
வண்டுடில்பூங்கண்ணிவிஞ்சையர்சூழ்தரவயங்கும். (௨௭)

விண்ணகட்டினைத்தொடுமுடியேறுதல்வேட்ட
வெண்ணிறப்புருப்பறந்தருகேசெலவிளங்கு
மண்ணுறாதநியசெம்மமணிவேரமாமலரி
னெண்ணிறத்தனங்கேதடழற்றுனுவையொக்கும். (உஅ)

நெடியவெண்சுதைமாடத்தின்விரிந்தவெண்ணிலவுங்
கடவுள்வான்கங்கைவெள்ளமும்வேற்றுமைகாணப்
படுகலாமையிற்கங்கைவேட்டெய்தியபரிதி
வடிவமென்சிறைப்புட்களோடன்னங்கண்மருளும். (உ௯)

இருவிசும்புதோய்மாடமேற்சுருங்கையிலிருந்து
திருவிளங்குமாநகரணிபார்த்திடுஞ்செய்ய
வரிநெடுங்கணார்தோட்கிளிகொததலின்வளர்ந்த
வுருவிளங்கமுகின்குலைசெழும்பழமுதிர்க்கும். (௩0)

இதுமுதல்(௰உ)செய்யுள்வங்கியசூடாமணியென்னும்
பாண்டியராசன்சிறப்பு.

இனையவாம்பெருவளம்பலசிறந்தவவ்விணையி
லனகமாநகர்வெண்குடைச்செய்யகோலரசன்
புனிதவானவன்றலைக்கொளத்திங்களம்புத்தே
டனதுதொல்குலவிளக்கமோர்வழுதியைந்தாரான். (௩௧)

நடுக்குஞ்சரதனமாமுடிநாகத்திறைவனவாழ்
வெடுக்குஞ்சரவணமைந்தனொடிணைவான்முகப்புகர
மூடுக்குஞ்சரமலையான்மலையுறழ்தேர்பலவுடையான்
றொடுக்குஞ்சரமழையாற்பகைசுடுதீப்பலவவித்தான்.

(இ-ள்) கூட்டமாகிய அரதனங்களைப்பதித்தபெரியமுடியை யுடையவிண்ணுலகத்திற்கிறைவனாகிய இந்திரனுடையவாழ்வுக ளனைத்தையுங்காத்தருளியமுருகக்கடவுளோடொப்பவன்-முகத் திலே புள்ளிகளாகிய நக்ஷத்திரங்களைப்பெற்ற யானைமலையையு டையவன்-மலைகளையொத்தபற்பலவாகியதேர்களையுடையவன்- பிரயோகிக்கப்படுகின்ற பாணங்களாகிய மழையினால் பலபகைக ளாகியசுடுகின்றநெருப்பைத்தணித்தவன், எ-று (௩௨)

வளையாகத்தான்வளர்தோளான்செவ்
வளையாகத்தான்மதிபோல்குடையா
னரிமானனையாரணியேந்தல்பெரு
வரிமானனையாரலர்மாலையினான்.

(இ-ள்) மலையைப்போலும்வளராநின்றபுயங்களையுடையவன் - உத்தமவிலக்கணமாகியசிவந்தமூன்றுவரியையுடையமார்பையுடையவன் - சிங்கவேறுபோன்ற அரசர்களுக்கு அழகியதலைவன் - வண்டுகள்மயக்கத்தை விளைக்குமதேனைப்பெற்றுஉண்கின்றமலர்களாற்றொடுக்கப்பட்டமாலையையுடையவன.எ-று. (கங)

மாமாலைவண்டுபண்ணின்வகைபாடுந்துழாய்மாலை
மாமாலைவணங்கநிமதில்களொருமூன்றுமெய்த
காமாரியீகைப்பூங்கழனமறவாக்கருத்தினனீங
காமாரியீகைப்பூங்கரதலத்தான்கடற்படையான்.

(இ-ள்) கரியவண்டுகள்ஒழுங்குபெறநின்றுபண்ணின்விகற்பங்களைப்பாடுகின்றதுளசிமாலையையணிந்தபெருமைபொருந்தியவிட்டுணுமூர்த்தியை அம்பாகச்செய்துஒருமும்மதில்களையுமழித்தசிவபெருமானது பொன்மயமாகியமலர்போலுந்திருவடிகளைமறவாதஉள்ளத்தையுடையவன் - (கைமாறுகருதாது)நீக்கமின்றிப்பொழிகின்றமேகத்தையொத்த கொடையையுடையபொலிவாகியகைத்தலத்தையுடையவன்-சமுத்திரம்போலுமசேனைகளையுடையவன்-எ-று. (கச)

புயவலி-நாவு-மார்பு.

ஆடலந்திருவொடுநிலமகள்விளையாடு
நீடுசெய்குன்றமாந்தடந்தோளினனிலவும்
பாடனங்கையாடரங்கமாநாவினன்பதும
வீடுநண்ணிடமடந்தையத்தாணியாமார்பன். (கரு)

மறையவர்க்குத்தானம.

கலசயோனியாமுனிவரன்குடித்தவக்கார்கோ
ளலைபெரும்புனன்மறிந்தும்விட்டானென்பரதுபொய்
புலமையந்தணர்பெறத்தருபொருளொடப்பொன்மா
மலையனான்பொழிதானநீர்நிறைந்தன்றுமன்றே. (கசு)

பொய்புகல்தல்-ஒருபொருளை ஏற்றல்

திரைநெடுங்கடற்றானையவ்விரசர்கோனசெந்நா
வரிநெடுங்கணார்புலவியாற்பொய்ம்மையுமறியும்
பெரியவந்தணர்மந்திரசேடையாற்பிறங்கு
மெரிமணிப்பொலந்தொடிக்கைகளேற்றலுமறியும். (கஎ)

கீர்த்தி

உலவிலண்டமாம்புதாருநூற்றிருந்தொழுகு
மலரிஞோன்வனைபொற்குடநிறைந்துமேல்வழியப்
புலவராமெகினக்குழாநனிதவப்புரியு
நிலவுதன்பெருப்புகழெனும்பாலினைநிறைத்தான். (கஅ)

பிரதாபம்ஆஞ்ஞாவும்பிரகாசம்

திசையகன்கடலிடத்தறந்துகிர்க்கொடிசேண்டோய்
வரைகளுக்கொளிர்செந்நிறத்தாதுமாதிரத்தெண்
கரிகளுக்கெழிற்சிந்தூரமாகுமக்கழற்கா
லரசாதயபிராணனைதடறன்றென்றெளியன்றே (௩௯)

கொலை

வெற்றிவேற்படையவன்பிரதாபமாம்வெய்யோ
னுற்றவார்திரைப்பெரும்புனற்குவலயமுவப்ப
மற்றவன்றரியாரவசையிருளொடுவெயங்கும்
பற்றுநீக்கதிர்ச்சுடரொடுமெறுதலைப்பட்டு (௪0)

தனதுஆளுகையின்எல்லை.

இத்தகைப்பெரும்பெயர்முடிவேந்தர்கோனிலங்கு
சித்திலத்தனிகைவிசையானிலமெலாநிழற்றி
மெய்த்தசெய்யகோறடையறநடாய்த்திசைமேவு
மத்தவாரணமுகங்களிற்கயற்பொறிவரைந்து. (௪௧)

வேற்றரசர்திறையளித்தல்.

குருமணிக்குவால்பொற்குவைவிலையிலபூண்குவவு
முரணமணிப்பொலந்தோத்திரணபனதீனுமுந்தும்
பரியணிக்குழாம்பிறைமருப்பீரங்கவுட்பரூஉததா,
ளருவரைக்களிற்றினததிறையரசர்களளக்க. (௪௨)

இதுமுதல்(௯)செய்யுள்மந்திரிகள்-சங்கப்புலவர்கள்சிறப்பு.

வெளிறினுண்புலமந்திரிக்கிளையொடுமேவி
யளவில்போகந்துய்த்தினிதுவீற்றிருந்தனனந்நா
ளணிதிரைக்கடலுலகெலாந்தமபுகழ்நிறீஇய
தளர்வில்கேள்விநக்கீரனார்முதலியசான்றோர். (௪௩)

அன்பொண்ணியவெண்ணியாங்கநிலையளிக்கும்
பின்புதாழ்சடைப்பெருந்தகையருளினாற்பெற்ற
பொன்பிறங்கியதெய்வதப்பலகைதாம்புலமை
வன்பறிந்திடந்தரவதிலிருந்துளமகிழ்ந்து. (௪௪)

யாக்கைபெற்றவர்க்குறுதியாமறம்பொருளின்பம்
போக்கினுண்பொருளரிலறப்புதுமொழிபுணர்த்துத்
தாக்கினம்பலபலபுனைந்தெறிகிரைசருட்டு
மாக்கருங்கடலுலகிடைத்தமிழினைவளர்த்தே. (௪௫)

### சிவபெருமான்சங்கப்புலவருள் ஒருவராயமர்ந்தமை.

வெள்ளைத்தாமரைச்செல்வி தன்பெண்மையைவிடுத்திட்
டெள்ளற்பாடிலாவுருவெடுத்தெனமுடியேந்துமப்
பிள்ளைப்பான்மதியானறமிழொருவனாப்பெருஞ்சீர்
வள்ளற்பாண்டியற்காருயிர்த்துணைவராய்வாழ்ந்தார். (௪௬)

### இதுமுதல்(௪)செய்யுள்கதை.

இன்னவாறவர்வாழுநாளோர்பகலெரிகான்
மின்னுவாட்படைச்சேல்வலனுயர்த்ததார்வேந்தன்
பொன்னின்மாடத்தின்மேனிலைக்குழையடர்பூங்க
ணன்னமன்னவளோடினிதேறினனமர்ந்தான். (௪௭)

ஆயகாலையின்மந்தமாருதத்தொடுமெரிக்கண்
வேயைவென்றதோளணங்கின்வார்குழன்மணம்வீசச்
சேயனன்குவிமுகிழ்முலைச்செய்யவாய்த்தேவி
மாயிருங்குழலின்மணமாமெனமதித்தான். (௪௮)

மதித்தகாவலனதுமனங்கொண்டுதன்மனத்திற்
றதைத்தநுண்பொருடரவொருசெய்யுள்செய்புலவ
ரிதைக்கொள்கென்றுபொன்னாயிரமொருகிழியியற்றி
யதைப்பொற்சங்கமண்டபத்தின்முற்றூக்கினனன்றே. (௪௯)

புலவர்யாவருந்தாங்கண்டவாறுபாப்புனைந்து
தலைவன்முன்புபோய்ச்சாற்றியவனைத்தையுந்தண்டார்
மலைகொடோளினன்மறுத்தலின்வறிதகன்றனரவ்
விலகுபொற்கிழியிருந்ததங்கறுப்பவரின்றி. (௫௰)

### இதுமுதல்(௭)செய்யுள்பஞ்சகாலச்சிறப்பு.

காலமங்கதிலுரோணியிற்கரியவன்புகுத
வாலவெவ்வரவெடுத்தவிருவாவினுமழன்று
கோலவெஞ்சுடர்தண்சுடரிரண்டுமவாய்க்கொள்ள
ஞாலமைந்தனும்வெள்ளியுமிகல்படநடந்தார். (௫௧)

காலைதண்பனிசொரிதலுநண்பகற்கால
னீலவான்புதைமுகிலனமபெய்வபோனின்று
மாலைதோன்றுமுன்மலர்தலைவான்கழுவியது
போலுநீங்கலுநிகழ்ந்தனமழைவளம்போன்ற. (௫௨)

பெயல்வறந்தபைங்கூழெலாம்பீளொடுகரிந்த
பயம்வறந்தனமரங்களுமலைகளும்பனிநீர்க்
கயம்வறந்தனகள்ளியுமவெண்ணையுங்கதிரின்
வெயிலின்வெந்துதம்பசுமைபோயுலர்ந்தனமிகவும். (௫௩)

உண்பதின்பனநனிமிகக்குறைந்தனவொருங்கு
வெண்கலங்களுமவெள்ளியுஞ்செம்பொனும்விளங்கு
மண்கொளொனபதுவகையநன்மணிகளுமலிந்த
வெண்பதம்பெறலரியதாயிற்றுமன்யார்க்கும். (௫௪)

நீடுந்தீப்பசியாற்குடர்கொளுந்தியநிலத்தோ
ராடுந்தின்கலாவடகுதின்றனர்நிலனகழ்ந்து
வாடும்பல்வகைக்கந்தமுந்தின்றனர்மக்கள்
காடுந்துன்றமுநிரம்பினர்தினபனகருதி. (௫௫)

சிறுவர்கையுணாதாயர்தாம்பறித்தனர்தின்றார்
முறுகுதீப்பசிபொறுக்கலாற்மக்களுண்முதலா
வுறுபசுந்தசையாவையுந்தின்றனருலந்த
தறைபழஞ்சொலைப்புதுக்கினர்மானமாண்பற்றார். (௫௬)

வழியெங்கும்பிணமிடறுமிவ்வார்கடற்கப்பாற்
பொழிலினகணனுமுற்றுலாயதுநாற்றநீள்போழ்வாய்
முழையெங்கூறறுயிருண்டறவெறுத்ததுமுள்வாய்க்
கழுதுங்காக்கையும்பலியுநரிகளுங்களித்த. (௫௭)

இதுமுதல்(௩)செய்யுள்கதை.

சிலர்பிழைத்தவவ்வற்கடத்திறையையர்ச்சிக்குந்
தலைமைபெற்றவன்றருமியென்பவனுடறளர்ந்திங்
கிலையுயிராககரணினிநடந்தெதத்திசையேனு
மலிவிலைத்துநாடெய்துவனெனமனம்வலித்தான். (௫௮)

கோயில்சென்றடைந்தருட்பெருங்கடலினைக்குறுகித்
தாயிலன்புடையாயிஙனுறிலினிச்சாவேன்
றேயமுய்வதற்கேற்றதுபுகுந்துநீஇச்செழுமை
யாயபின்பிவணடைகுவலெனத்தொழுதழுதான். (௫௯)

குழவியந்திங்கள்வேணிக்குரிசின்மற்றதனைக்கேளா
வழுதகந்துழையல்வாழியன்பவொன்றறைவல்கேட்டி
வழுதிதூக்கினனேர்பாத்தன்மனங்கொளவுரைத்தோர்க்கென்று
[illegible]யதாயிரம்பொன்சங்கக்கிளர்மணிமண்டபத்தே. (௬௰)

# நக்கீரச்சருக்கம்.

முழுமெய்ம்பனித்திரங்கிமுருகலர்கமலம்வென்ற
கழலடிவீழ்ந்திறைஞ்சிக்கருணையங்கடலேயெந்தா
யிழிபுடைநாயினனேனிலங்கறிவிலாதுசெய்த
பிழைபொறுத்தருளிச்சாபப்பிணிகெடவருளவாயென்றான். ()

என்றலுங்கருணைவள்ளலெரிசினந்தணிந்துகீர
னென்றநீகயிலைகாணிற்றீருமிக்கொடுநோயென்று
குன்றுறழ்புரிசைவிண்டோய்கோயிலிற்புகுந்தொளித்தான்
றென்றலம்பொதியவெற்பிறென்னனர்கோனதிசயித்தான ()

இதுமுதல் (௰ரு) செய்யுள்பஞ்சகாலத்தெளிவும்
நக்கீரர்சங்கத்தினின்றுநீங்கிக்கைலைக்கேகுதல்.

பொற்குவைதருமியேற்றுப்பொலிந்தினிதிருந்தானவெய்ய
வறங்கடந்தீரநெடுமழைவளஞ்சுரந்ததப்பாற
சிற்குணநக்கீரசாபத்தீப்பிணியுடலம்போர்ப்ப
நற்கவினிகந்துகீரநாவலன்சிந்தைசெய்வான். (௭௧)

விரணிரையழுகினைந்துவீழ்ந்துகால்குறையாமுன்ன
மிருகையுமவிரல்குறைந்திட்டெரிபுகுதுபபொய்வாமு
னுருவினுண்புழுக்கள்சோரவொழுகுசீநாறச்சேணில
வருதல்கண்டவருமிழ்ந்துவழிவிலகினாசெலலாமுன. (௭௨)

பலப்பலநாடிறந்துபடரொளிக்கயிலையென்று
முலப்பில்குன்றெய்தியிந்நோயொழிக்குவமெனத்துணிந்தான
விலக்கருநண்பினோரைவிட்டகறற்குநெஞ்சங்
கலக்கமுற்றழுதிரங்கிக்கரையிலபேரருளாழ்ந்தான். (௭௩)

தடையில்பேரறிஞாதமமைந்தனித்தனிவிளித்துநமமோ
டுடனுறைவாழ்வுநீங்குமொருபெருமபாவியேனை
மடனறுநமரங்காணீமறவனமினென்றுதன்மெய்ப்
படுபிணிநோக்கிமாயமபட்டசழுவாதுநின்றான. (௭௪)

நாவலரதையறிந்துநண்ணிமாபிறுகப்புல்லி
யோவில்கண்ணருவிபாயவுளங்குழைந்தழுதுநல்லோய்
மேவருநின்னைநீத்துவெறுவியமிருப்பநின்ற
வாவல்வல்வினையுளார்யாமல்லதிவ்வுலகத்தியாரோ. (௭௫)

என்றனாிரங்கமேலோனெதிர்தழீஇத்தழுவியாறிக்
குன்றனீர்சிறியற்காகக்குழைந்தழறமியேனசெல்வல்
பொனறலினட்பினுக்குப்புணாவொடுபழகல்வேண்டா
நின்றநல்லுணர்சசிதானேநிறைக்குமெனறுணாநதநலவீர (௭௬)

என்றுபஃறிறத்தாற்கூறியிணையிலானரிதினீங்கிச்
சென்றனன்புலவர்கண்ணுஞ்சிந்தையுந்தொடர்ந்துசெல்லத்
தன்றிரைக்கையான்மோதித்தான்றியங்குலையுதிர்க்கு
மன்றலம்புதுநீர்வைகைவடகரைகடந்துமன்றே. (எஎ)

என்றினிமதுரைகாண்பேமெப்பகல்சவுந்தரேசன்
றன்றிருவடிகள்காண்பேந்தாயையென்ஞான்றுகாண்பேம்
வென்றிவேற்றருமவேந்தாவேந்தனையென்றுகாண்பே [ம்.
மொன்றுயிர்த்துணையாஞ்சங்கத்துறவையெப்பொழுதுகாண்பே

நுணங்குமாணறிவின்மிக்கநூல்வலார்மறப்பர்கொல்லோ
வணங்குதீர்த்தானைமன்னர்மணிமுடியுழுகழற்கா
லணங்குடையரிமான்றுப்பினரசர்கோனிளையான்கொல்லோ
விணங்குநூற்புலவர்நாற்பானெழுவரொன்றுரைக்குங்கொல்லோ.

இனித்தமிழினிமையாவர்க்கெடுத்திசைத்திடுவமென்றே
யெவனப்பலபலவுமெண்ணியினைந்துநெஞ்சுறமிறந்து
புனற்றிருநாடுபுக்குப்பொருப்பிரைப்பெண்ணைநாடு
தனைக்கடந்தந்தண்பாலித்தண்ணடைகண்டுசென்றான். (அ௦)

அரவணைச்செல்வன்வாழுமந்தமிழ்நிலத்தினெல்லைத்
திருமலைகண்டுகண்டோர்செறிவினைத்தொடரறுக்கும்
பெருவரைகண்டிறைஞ்சிப்பிறங்குவெள்ளருவிதாழும்
பொருவருமேமகூடப்பொருப்பினையினிதுகண்டான். (அக)

அருணெடுங்கடலாநந்தியடிகள்வந்தவதரித்து
முரணுறுசமணர்குறும்புமுருக்குபுசைவமென்னுந்
திருநிலமுழுதுமாண்டுசெல்வமோடினிதிருந்த
பொருவில்கல்யாணமென்னும்பொன்மதினகரங்கண்டான். ( )

உடையபெயர்பலதேயங்களொருபொழுதிருந்தவ்வூர்பின்
னொருபொழுதிராமற்சென்றேயொளிவளைமணிகொழிக்கு
மிரைதிரைக்கங்கையாடியிறந்தவர்பிறவாவின்பந்
தருதிருநகரிறைஞ்சித்தடவரைநாடுபுக்கான். (அ௩)

கண்ணுதறிருக்கேதாரங்கண்டுதண்பனிபுதைத்த
விண்ணகடணவுகோட்டுவியனெடுங்குன்றத்தாறவ்
வெண்ணநாருளாறுப்போற்றலாற்சென்றனனேற்
பண்ணவர்தமக்குஞ்சேறற்பாலவோவாபனிமாக்குன்றம். (அ௪

